




# வாரம் ஒரு அணா செலவிற்கு பற்களுக்கு முழுப் பாதுகாப்பளிக்கிறது!

சாம்பல், கரிபோன்ற கரகரப்பான பொருள்கள் பற்களில் கீரல் விழச் செய்கின்றன. இந்த கீரல் வழியாக பாக்டீரியா புகுந்து கெடுதல் விளைவிக்கிறது. பற்கள் பூரண ஆரோக்கியத்தோடு இருக்க விஞ்ஞான முறையில் தயாரித்த ஒரு பல் துலக்கும் வஸ்து உங்களுக்குத் தேவை. ஆகையால் கிப்ஸ் டென்டிபிரிஸ் வாங்குங்கள். பற்களுக்கு பூரண ஆரோக்கியத்தைத் தரும் எல்லா பொருள்களையும் ஒன்று சேர்த்து கெட்டியாகச் செய்ததுதான் கிப்ஸ். அன்றியும் ஒரு டூத்பேஸ்ட் செய்யும் எல்லா வேலைகளையும் அதன் பாதி விலைக்குச் செய்கிறது. இதை உபயோகிப்பது மிகவும் சுலபம். புரஷையோ அல்லது விரலையோ தண்ணீரில் நனைத்துக் கொண்டு கட்டியின்மேல் தேய்க்கவும். அதன் சுவையை நீங்கள் மிகவும் விரும்புவீர்கள். அன்றியும் அதன் மிருதுவான ஊடுருவிப்பாயும் நுரை உங்கள் பற்களை பளிச்சென்று வெண்மையாக இருக்கச்செய்யும்!




உங்களுக்குப் பிரியமான கிப்ஸின் க்ளோரோபில் சேர்ந்திருக்க விரும்பினால் கிப்ஸ் க்ளோரோபில் டென்டிபிரிஸ் கேளுங்கள். எல்லா இடங்களிலும் விற்கப்படும் வெள்ளை டப்பாவில் பெயரை கவனித்து வாங்குங்கள்.



நீலம், சிவப்பு, பச்சை டப்பிகளில்

# கிப்ஸ் டென்டிபிரிஸ்

GD. 37-50 TM டி. அன்டு டபிள்யு. கிப்ஸ் லிட்., லண்டனுக்காக இந்தியாவில் தயாரிக்கப்பட்டது.

# கல்கி பொருளடக்கம்


மலர் 14 | இதழ் 2 — 1954 ஆகஸ்டு 8 — ஜய ஆடி 24




"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.


## "காளி பிராண்ட்"
### எவர்சில்வர் பாத்திரங்கள்

உத்திரவாதம் உள்ளது. பளபளப்பிலும், உறுதியிலும் குணத்திலும் சிறந்தது ஒவ்வொரு குடும்பத்திற்கும் கல்யாணச் சீருக்கும் பரிசுக்கும் இன்றியமையாதது

எல்லா முக்கிய நகரங்களிலும் ஸ்டாக்கிஸ்டுகள் உள்ளனர்

கோவை, நெல்லை, காரைக்குடி ஸ்டாக்கிஸ்டுகள் :

★ கே. நடராஜன், கே. அவனுசிலிங்கம், பெரிய கடை வீதி, கோயமுத்தூர்
★ கல்கி புக் டெப்போ, 54, கன்னம்மன் கோயில் தெரு, திருநெல்வேலி ஜங்ஷன்
★ தேவி அண்டு கம்பெனி, ராயவரம். கிளை : அம்மன் சந்நிதி, காரைக்குடி

தயாரிப்பவர்கள் :

## ஸ்ரீ எம். வி. எம். ஸ்டோர்ஸ்
கும்பேஸ்வரர் சந்நிதி, கும்பகோணம்



சாஸ்திர முறையில் எல்லாவிதமான விக்கிரகங்களும் எந்த உலோகத்திலும் ஆர்டருக்குத் தயாரித்துக் கொடுக்கப்படும்.



குறிப்பு : "ருக்மணி குக்கர்" அதிகாரம் பெற்ற ஏஜண்டுகள்




அவ்வை புரடக்ஷன்ஸ், 139-B, லாயிட்ஸ் ரோடு, சென்னை-6

கல்கி

மலர் 14 | தமிழ்த் திருநாடு தன்னைப்—பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார் | இதழ் 2

# ஓட்டைக் குடிசை ஓட்டு வீடு ஆகுமா?

பிரதம மந்திரி ஜவாஹர்லால்ஜி ஆஜ்மீரில் கூடிய அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் கூட்டத்துக்காக விஜயம் செய்திருந்தார். கூட்டம் முடிந்ததும் நேருஜியைப் பாரத சேவக சமாஜின் வேலைகளைப் பார்வையிட அழைத்துச் செல்வதாகத் திட்டமிட்டிருந்தார்கள். அந்த வேலையில் ஈடுபட்ட தொண்டர் ஒருவர், "சமாஜத்தார் தங்களை அழைத்துப் போகத் திட்டமிட்ட கிராமங்களுக்குப் போவதில் பயனில்லை. வேலை நடக்கும் கிராமங்களைச் சிட்டில் எழுதிக் குலுக்கிப் போட்டு எடுத்து, சிட்டில் கண்ட கிராமத்துக்குப் போவது நலம்!" என்றார். மற்றவர்கள் அத்தொண்டரின் பேரில் எரிந்து விழுந்தார்கள். ஜவாஹர்லால்ஜி அவர்கள்பேரில் எரிந்து விழுந்து "தொண்டர் சொல்வதுதான் சரி!" என்றார்.—இவ்வளவு வரையில் பத்திரிகையில் வந்த செய்திகள் கூறுகின்றன. பிறகு என்ன நடந்தது என்று தெரியவில்லை!

பாரத சேவக சமாஜம் நேருஜியின் ஆசியுடன் ஆங்காங்கு சமூக சேவை செய்வதற்காக அகில இந்திய அடிப்படையில் ஏற்பட்ட ஸ்தாபனம்; பல இடங்களில் நல்ல தொண்டு செய்து வருகிறது.

சமூக நலத் திட்டங்கள் (Community Projects), தேசிய விஸ்தரிப்புச் சேவை (National Extension Service) என்ற பெயர்களுடன் இந்திய சர்க்கார் - இராஜ்ய சர்க்கார்களின் ஆதரவில் பலவகைக் கிராம நலத் திட்டங்கள் நடைபெற்று வருகின்றன.

இந்த ஸ்தாபனங்கள் - திட்டங்கள் மூலம் நடைபெறும் சமூகத் தொண்டும், கிராம சேவையும் சிறந்த முன்னேற்றம் அடைந்து நல்ல பயன்கள் அளித்து வருவதாக அவ்வப்போது அறிக்கைகள் வருகின்றன.

அவற்றின் நற்பயன்களை நேருஜி கண்டு மகிழ்வதற்குத்தான் ஆஜ்மீரில் பாரத சேவக சமாஜத்தார் ஏற்பாடு செய்திருந்தார்கள். அந்த ஏற்பாட்டில் தொண்டர் ஒருவர் சிறிய ஒரு கூழாங் கல்லைத் தூக்கிப் போட்டு விட்டார். அதனால், மக்களின் உள்ளங்களில் பலவித ஐயங்கள் ஏற்படுவதற்கு இடம் உண்டாகி விட்டது.

* * * *

பாரத சேவக சமாஜத்தாரும், சமூகநலத் திட்டங்கள்-தேசிய விஸ்தரிப்புத் திட்டங்களை நடத்துவோரும் கிராமங்களுக்குச் செல்லும் போது, எதிர்பார்த்த அளவில் கிராம வாசிகளின் ஒத்துழைப்புக் கிடைப்பதில்லை என்பது நாடறிந்த உண்மை.

இம்மாதிரி சமூகத் தொண்டு செய்ய வருவோரைக் கிராமவாசிகள் சந்தேகக் கண் கொண்டு பார்க்கிறார்கள்.

"ஆதாயமில்லாத வியாபாரி ஆற்றோடு போவாரா? ஏதோ சொந்த நலங் கருதியே இவர்கள் கிராம சேவை செய்ய வருகிறார்கள்!" என்று கருதுகிறார்கள்.

"வீதிகளைச் சத்தம் செய்கிறோம்; சாலைகளைப் போடுகிறோம் என்று சொல்லிக் கொண்டு இன்று வருகிறார்கள். நாளைக்கு 'உங்கள் வோட்டை எங்களுக்குப் போடுங்கள்!' என்று கேட்கப் போகிறார்கள்!" என்று ஒரு பகுதியார் எண்ணுகிறார்கள்.

"அரசாங்கத்தாரிடமிருந்தும் அமெரிக்கா முதலிய தேசங்களிலிருந்தும் நமக்காகப் பணம் வருகிறது. அதைச் செலவழித்து விட்டுக் கணக்கு எழுதுவதற்காக இவர்கள் இப்படியெல்லாம் கிராமசேவை செய்வதாகப் பாசாங்கு செய்கிறார்கள்!" என்று சந்தேகப் படுகிற கிராமவாசிகளும் உண்டு.

இவை எல்லாவற்றையும்விட, கிராமவாசிகள் உற்சாகமாக ஒத்துழையாமலிருப்பதற்கு முக்கிய காரணமாயிருப்பது அவர்களுடைய வறுமைக் கொடுமைதான்.

"நாளைக்குச் சாப்பிட உணவு இல்லை, மழை பெய்தால் தங்குவதற்கு இடமில்லை. குடிசையின் கூரையில் ஓட்டை விழுந்து பெய்கிற மழையெல்லாம் குடிசைக்குள் விழுகிறது. குழந்தைகள் சேற்றில் புரளவேண்டி யிருக்கிறது. சாலை போடுகிறார்களாம் சாலை! இவர்களுடன் ஒத்துழைத்து வேலை செய்ய வேண்டுமாம் வேலை! இன்றைக்கு நான் கூலிக்கு

# கப்பல் புறப்படுகிறது!




பிரிட்டனுக்கும் எகிப்துக்கும் ஏற்பட்ட நேச உடன்படிக்கையின் காரணமாகப் பிரிட்டிஷார் சூயஸ் மண்டலத்தி லிருந்து வெளியேற முடிவு செய்துள்ளனர்.

---

வேலை செய்யப் போகாவிட்டால் நாளைக்குச் சோறு கிடைக்கும் வழி என்ன!'' என்று கேட்கும் கிராம வாசிகள்தான் பெரும்பாலோர்.

ஆகையால், கிராம முன்னேற்றத்துக்குத் தொண்டு செய்வதற்கென்று போகிற தொண்டர்கள் விளக்குமாறு எடுத்து வீதிகள் கூட்டுவதையும், மண்வெட்டி பிடித்துச் சாலைகள் செப்பனிடுவதையும், கிராமவாசிகள் சற்று தூரத்திலிருந்தபடி வேடிக்கை பார்ப்பது போல் பார்த்துக் கொண்டிருந்து விட்டுத் தத்தம் வேலைகளைக் கவனிக்கப் போய் விடுகிறார்கள்.

** ** **

"அன்னிய ஆட்சியுடன் போரிட்டு வெற்றி பெற்று விட்டோம்; இனி, வறுமையுடன் எதிர்த்துக் கடும் போர் நடத்த வேண்டும்!" என்று ஜவாஹர்லால்ஜி அடிக்கடி சொல்லி வருகிறார். அஜ்மீரிலும் சொன்னார். அதை அ. இ. கா. கமிட்டி அங்கத்தினர்கள் காது கொடுத்துக் கேட்காதது பற்றி கோபித்து கொண்டார். "நான் பேசும்போது என்னைப் பார்த்தாவது உட்காரக் கூடாதா! எங்கேயோ பார்த்துப் பேசிக் கொண்டிருக்கிறீர்களே!'' என்று வருத்தப்பட்டார்.

இன்னும் ஜவாஹர்லால்ஜி விஜயம் செய்யும் ஒவ்வோரிடத்திலும் "வறுமையுடன் போர் தொடங்குவோம்!'' என்று யுத்த முரசு கொட்டி வருகிறார். ஆனால் அந்தப் போர் முரசு மக்களின் உள்ளத்தில் ஆவேசத்தை எழுப்பவில்லை.

ஜவாஹர்லால்ஜி உண்மை உள்ளத்துடனே தான் உருக்கமாகக் கதறுகிறார். நாட்டின் வறுமையை ஒழிப்பதற்காகப் பெரிய திட்டங்களை வகுக்கிறார். அணைக்கட்டுத் திட்டம், உரம் உற்பத்தித் திட்டம், மின்சாரத் திட்டம் முதலானவற்றை ஆரம்பித்து வைக்கிறார்.

இவற்றுக்குக் கோடி கோடியாகப் பணம் செலவழிக்கப்படுகிறது.

அவ்வப்போது இத் திட்டங்களில் லட்சம் லட்சமாகப் பணம் குறை போவதாகத் திடுக்கிடும் செய்திகள் வருகின்றன; வழக்குகள் நடக்கின்றன.

ஆகையால், பொது ஜனங்களின் நம்பிக்கையும் உற்சாகமும் மேலும் குறைந்து போகிறது.

* * *

வறுமை அரக்கனுடன் நடத்தும் போரில் இந் நாட்டிலுள்ள பெரும்பாலான ஏழை மக்கள்—கிராமவாசிகளின் ஒத்துழைப்பைப் பரிபூரணமாகப் பெறக் கூடிய திட்டம் ஒன்று கண்டு பிடிக்க வேண்டும். ஏழை மக்கள், "இது எங்கள் நன்மைக்கான திட்டந்தான்'' என்பதை நன்கு உணர்ந்து உற்சாகத்துடன் கலந்து கொள்ளக் கூடிய திட்டம் ஒன்று வேண்டும். அவர்களே குதூகலமாக முன் வந்து "எங்கள் உழைப்பைத் தருகிறோம்'' என்று சொல்லக் கூடிய திட்டம் ஒன்று வேண்டும். அத்தகைய பலன் தரக்கூடிய திட்டம் இருக்கிறதா!

* * *

அயல் நாட்டிலிருந்து இந்தப் பாரத நாட்டுக்கு வந்து பிரயாணம் செய்கிறவர்கள் ரயில் மார்க்கமாகச் செல்லும்போது, ரயில் பாதையின்

இரண்டு புறங்களிலும் "ஐயோ! இது எவ்வளவு ஏழை நாடு!" என்று இரக்கம் உண்டாக்கக் கூடிய காட்சியைக் காண்கிறீர்கள்.

அங்கங்கே கிராமங்கள் தென்படும் போதெல்லாம், அந்தக் கிராமங்களில் உள்ள வீடுகள் பெரும்பாலும் ஓலை வேய்ந்த குடிசைகளாக இருப்பதைக் காண்கிறீர்கள். அவற்றின் கூரைகளில் ஓட்டை விழுந்திருப்பதையும் சுவர்கள் இடிந்து விழுவதையும் பார்க்கிறீர்கள்.

பெரிய கிராமம் ஒன்றில், சாதாரணமாக ஒரு மச்சு வீடு இருக்கும்; ஐந்தாறு ஓட்டு வீடுகள் இருக்கும்; நூறு இருநூறு ஓட்டை விழுந்த ஓலைக் குடிசைகள் இருக்கும்.

நாமும் ரயில் பிரயாணம் செய்யும்போதெல்லாம் இக் காட்சிகளைப் பார்த்துக் கொண்டுதான் போகிறோம். ஆனால் அடிக்கடி பார்த்துச் சர்வ சாதாரணமாகப் போய் விட்டபடியால் அவை நம் கவனத்தைக் கவர்வதில்லை.

புதிதாக நம் நாட்டில் பிரயாணம் செய்யும் வெளி நாட்டார் கவனத்தை அந்த ஓட்டைக் குடிசைகள் கவர்ந்தே தீரும்.

இந்தியாவில் குடி கொண்டிருக்கும் இணையற்ற வறுமைக்குக் கிராமங்களில் உள்ள லட்சக்கணக்கான குடிசைகள் அவ்வளவு லட்சம் சாட்சியங்களாக விளங்கி வருகின்றன.

தேசம் விடுதலை அடைந்து ஏழு ஆண்டுகள் ஆகியும், தேசத்தின் பொருளாதார முன்னேற்றம் பற்றி எவ்வளவோ பேசப்பட்டிருந்தாலும், நம் கிராமங்களில் குடிகொண்டிருக்கும் கொடிய வறுமை நிலை ஏறக்குறைய அப்படியேதான் இருந்து வருகிறது என்பதைக் கூரையில் ஓட்டை விழுந்த குடிசைகளும், இடிந்து விழும் சுவர்களை உடைய குடிசைகளும் பிரத்யட்சமாக எடுத்துக் காட்டி வருகின்றன.

* * *

இதோ, வறுமையுடன் போராடுவதற்கும், வறுமையின் லட்சக் கணக்கான சின்னங்களை ஒழிப்பதற்கும், அம் முயற்சியில் ஏழை எளியவர்களான மக்கள் அனைவருடைய ஒத்துழைப்பைப் பெறுவதற்கும் ஒரு திட்டம் இருக்கிறது.

அது, ஓட்டைக் குடிசைகளை ஓட்டு வீடுகள் ஆக்கும் திட்டம்தான்!

"உங்களுடைய ஓலைக் குடிசைகளுக்குப் பதிலாக ஓட்டு வீடுகள் கட்டிக் கொடுக்க முன் வந்திருக்கிறோம். குடியரசு சர்க்காரின் பூரண அதிகாரத்துடனும் உதவியுடனும் வந்திருக்கிறோம். நாங்கள் ஓடும், மரமும், இரும்பும், செமெண்டும் கொண்டு வருகிறோம். நீங்கள் உங்கள் உழைப்பைத் தாருங்கள்!" என்று சொல்லிப் பாருங்கள்.

கிராமவாசிகள் உற்சாகத்துடன் முன் வந்து ஒத்துழைப்பார்கள் என்பது சர்வ நிச்சயம்.

மக்கள் நல்வாழ்க்கை நடத்துவதற்கு, உணவுக்கும் உடைக்கும் அடுத்தபடியாக இன்றியமையாது வேண்டியது தங்கும் இடம் என்பதைச் சொல்ல வேண்டியதில்லை.

சாலை போடுவது, வீதி செப்பனிடுவது முதலியவை பொதுக் காரியங்கள்.

ஆனால் வீடு ஒவ்வொருவருக்கும் தனித்தனியே பயன்படக் கூடியது.

"இது என் வீடு! சென்ற வருஷம் ஓட்டைக் குடிசையாக இருந்தது; இந்த வருஷம் ஓட்டு வீடாகி விட்டது. சென்ற ஆண்டில் இந்த வீட்டின் தரை மழை பெய்து சேறாகிக் கிடந்தது; இந்த வருஷம் செமெண்டு பூசிச் சுத்தமாக இருக்கிறது!" என்று ஒவ்வொரு கிராம வாசியும் உணர்ந்து மகிழும்படி செய்யக் கூடியது.

இந்தியா சுதந்திரம் அடைந்து விட்டது என்பதைத் தேசத்தின் பிரஜைகள் அனைவரும் உணர்ந்து பெருமிதம் அடைவார்கள்; அயல் நாட்டாரும் இம்மாறுதலைக் கண்டு வியப்பார்கள்.

"இந்தத் திட்டம் சாத்தியமாகக் கூடியதா! காரியத்தில் நடைபெறுமா!"

சில மாதங்களுக்கு முன்பு கோயமுத்தூரில் ஒரு தனிப்பட்ட பிரமுகர்,—திரு சிற்றம்பலக் கவுண்டர் என்பவர்,—செய்து முடித்த கைங்கரியத்தைப் பற்றிக் "கல்கி"யில் கட்டுரை வந்திருக்கிறது. அதை நேயர்களுக்கு நினைவூட்டுகிறோம்.

ஒரு தனிப்பட்ட மனிதர்,—அவ்வளவு பெரிய தனவந்தரும் அல்ல,—தம் சொந்த முயற்சியினாலும் உதார குணத்தினாலும் இருபது குடும்பங்களுக்கு ஓட்டைக் குடிசைகளுக்குப் பதிலாக ஓட்டு வீடுகள் கட்டிக் கொடுப்பதில் வெற்றி பெற்றார் என்றால், தேசத்தின் சர்க்காரும் சர்க்கார் உத்தியோகஸ்தர்களும் தனவந்தர்களும் தேசத் தொண்டர்களும் காங்கிரஸ் வாதிகளும் பாரத சேவக சமாஜத்தாரும் மற்றும் சமூகத் தொண்டு செய்யும் அனைவரும் சேர்ந்து ஒத்துழைத்தால் ஏன் இத் திட்டம் நிறைவேறாது!

ஓட்டைக் குடிசைகளை ஓட்டு வீடுகளாக்கும் முயற்சிக்காக ஒரு ஐந்து வருஷத் திட்டமோ பத்து வருஷத் திட்டமோ போட்டு நடத்தினால் ஏன் நடைபெறாது!

இந்தத் திட்டத்தினால் கிராம வாசிகளின் சந்தேகங்களை அறவே போக்கி அவர்களுடைய உற்சாகமான ஒத்துழைப்பைப் பெறலாம்.

இம்மாதிரி கிராமங்களில் சிறிய வீடுகளைக் கட்டிக் கொடுக்கும் திட்டத்தில், லட்சக் கணக்கிலும் கோடிக் கணக்கிலும் அரசாங்கத்தார் பணம் கொள்ளை போவதற்கு இடம் இராது.

அந்தந்த ஊருக்கு இவ்வளவு பணம் என்றோ, இவ்வளவு வீடு கட்டும் சாமான்கள் என்றோ கொடுத்து விட்டால், கிராமவாசிகளே அவை திருட்டுப் போகாமல் பார்த்துக் கொள்வதில் முதன்மையாக நிற்பார்கள்.

இத்தகைய வீடு கட்டும் திட்டம் போட்டு நடத்தினால், அது காரணமாகக் கிராமங்களில் மற்றும் பல கைத் தொழில்கள் செழித்து வளருவதற்கும் ஏதுவாகும்.

செங்கல் அறுத்துச் சூளை போடும் வேலை, தச்சு வேலை, கொல்லர் வேலை, கொல்லத்துக்காரர் வேலை ஆகிய பல இனத் தொழில்கள் பெருகும். கிராமத்துக் குழந்தைகள் எல்லாம் இத் தொழில்களைப் பார்த்துக் கவனித்துப் பயிற்சி பெறவும் இடம் உண்டாகும்.

ஐந்து வருஷம் அல்லது பத்து வருஷ காலத்துக்குள் தேசத்தின் தோற்றமே மாறுதல் அடையும்; லட்சக்கணக்கான வறுமையின் சின்னங்கள் மறையும்; வறுமையின் சின்னங்கள் மறையும்போது, அதே முயற்சியானது தேசத்தில் சுபிட்சத்தையும் உண்டாக்கி வளர்க்கும்.

கிராமங்களில் உள்ள அசுத்தங்கள் ஒழியும்; மக்கள் தூய்மையாக வாழப் பயிற்சி பெறு

வார்கள்; அதனால் அவர்களுடைய ஆரோக்கியமும் ஓங்கிப் பெருகி வளரும்.

மக்கள் ஒருவரோடொருவர் ஒத்துழைக்கக் கற்றுக் கொள்வார்கள். சர்க்காருடனும் சமூகத் தொண்டர்களுடனும் நல்லுறவு கொள்வார்கள்.

இந் திட்டத்தில் உள்ள ஒரு பெருங் குறை, லட்சக்கணக்கான தொகைகள் திருட்டுப் போக இடமில்லாமலிருப்பதும் ஒரு சிலர் திடீரென்று பெரும் பணக்காரர்களாகி விட இடமில்லாமலிருப்பதுதான்!

இந்தக் குறையைப் பொருட்படுத்தாமல், அரசாங்க மந்திரிகளும் பொதுஜனத் தலைவர்களும் முன்னேற்றத்துக்குத் திட்டமிடும் நிபுணர்களும் சிறிது தங்கள் கவனத்தை இந்த வழியில் திருப்ப வேண்டும் என்று விரும்புகிறோம்.

# சர்ச்சில் கண்ட சிகரம்!

ஏற்கெனவே ராஜதந்திர மேதாவி என்று அகில உலகப் புகழ் பெற்ற ஸ்ரீ வின்ஸ்டன் சர்ச்சில், சில மாதங்களுக்கு முன் இலக்கியத்தில் நோபல் பரிசு பெற்று இலக்கிய மேதாவி என்ற புகழையும் நிலைநாட்டிக் கொண்டார். இப்போது சர்ச்சிலுக்கு அரசியல் துறையில் நோபல் பரிசைக் காட்டிலும் பன்மடங்கு அதிக மதிப்புள்ள மகத்தான பரிசு கிடைத்திருக்கிறது. அவர் உலக நாடுகளின், உலக மக்களின் நன்மதிப்புக்கும் பாராட்டுதலுக்கும் பாத்திரராகியுள்ளார்.

"பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தைக் கரைக்கும் கைங்கர்யத்தில் நான் எக்காலத்திலும் ஈடுபட மாட்டேன்; பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் தேய்ந்து மறைவதற்கு நான் காரண கர்த்தாவாக இருக்க மாட்டேன்" என்று சர்ச்சில் கூறியகாலம் உண்டு.

அதே சர்ச்சில் இன்று காலத்தின் போக்கை உணர்ந்து, பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் இராணுவக் கோட்டையாக விளங்கிய சூயஸ் கால்வாய்ப் பிரதேசத்தைக் கைவிடத் தீர்மானித்து விட்டார்.

ஸ்ரீ சர்ச்சிலின் சிறந்த ராஜதந்திரத்துக்குப் பல உதாரணங்கள் கூறலாம்.

இந்தியா சுதந்திரம் பெறுவதற்கு சர்ச்சில் பரம விரோதியாக இருந்தார். ஆனால் தொழிற் கட்சி சர்க்கார் இந்தியாவுக்குச் சுதந்திரம் அளிக்கத் தீர்மானித்த போது, அதை சர்ச்சிலோ, அவரது கன்சர்வேடிவ் கட்சியோ எதிர்க்கவில்லை.

பிரிட்டனின் எதிர்கால வாழ்வுக்கு அமெரிக்காவின் நட்பு உயிர்நாடி என்ற மாறாத கருத்துக் கொண்ட சர்ச்சில், சிற்சில சமயங்களில் அமெரிக்காவின் அபிப்பிராயத்தைப் புறக்கணிக்கத் தயங்கியதில்லை.

உதாரணமாக, அமெரிக்காவின் கருத்துக்கு விரோதமாகக் குடியரசு சீன சர்க்காரை சர்ச்சில் சர்க்கார் அங்கீகரித்திருக்கின்றனர்.

சமீபத்தில் இந்தோ சீன யுத்தத்தில் நேரடியாகக் கலந்து கொள்ள வேண்டும் என்ற அமெரிக்காவின் கோரிக்கையை சர்ச்சில் சர்க்கார் நிராகரிக்கவும் துணிந்தனர்.

இப்போது எகிப்தைச் சேர்ந்த சூயஸ் கால்வாய்ப் பிரதேசத்திலிருந்து வெளியேறத் தீர்மானித்தது, சர்ச்சிலின் ராஜ தந்திரத்துக்குச் சிகரமாக அமைந்துள்ளது.

பிரிட்டனுக்கும் எகிப்துக்கும் சென்ற எழுபத்தைந்து ஆண்டுகளாக இருந்து வந்த தகராறு சென்ற வாரம் திருப்திகரமாகத் தீர்ந்து விட்டது. சூயஸ் கால்வாய் விஷயமாக இரண்டு நாடுகளுக்கும் ஒப்பந்தம் ஏற்பட்டு விட்டது. அதன்படி, சூயஸ் கால்வாய்ப் பிரதேசத்திலிருந்து பிரிட்டிஷார் இன்னும் இருபது மாதங்களுக்குள் அங்குள்ள தங்களுடைய துருப்புகளை யெல்லாம் வாபஸ் செய்து கொள்ள இசைந்து விட்டார்கள். அந்தப் பிரதேசத்தில் பிரிட்டிஷ் துருப்புகளே இருக்கக் கூடாது என்ற எகிப்தின் கோரிக்கைக்கு இணங்கி விட்டார்கள். சென்ற நூறு வருஷங்களாக சூயஸ் மண்டலத்தில் தங்களுக்கு இருந்து வந்த ஆதிக்கத்தைப் பிரிட்டிஷ் சர்க்கார் அறவே விட்டுவிடத் தீர்மானித்து விட்டார்கள்.

எகிப்திலிருந்து பிரிட்டிஷ் துருப்புகள் வெளியேறிவிட வேண்டும் என்ற எகிப்து சர்க்காரின் நிபந்தனையை இதுவரையில் கடுமையாக எதிர்த்து வந்த சர்ச்சில், நிலைமை முற்றிப் பெரும் நெருக்கடி ஏற்படுவதற்கு முன் புத்திசாலித்தனமாக அங்கீகரித்தது ஜனநாயகத்திலும் உலக சமாதானத்திலும் நாட்டம் கொண்ட மக்கள் யாவரும் போற்றத்தக்க செய்கை ஆகும்.

மத்திய தரைக் கடலையும் செங்கடலையும் இணைக்கும் சூயஸ் கால்வாயை வெட்டுவதற்கு அக்காலத்தில் சுமார் அறுபது கோடி ரூபாய் செலவாயிற்று. அந்தக் கால்வாய் ஐரோப்பா,— ஆசியாவின் பூகோள சரித்திரத்திலேயே பெரும் புரட்சியை உண்டாக்கியது. மேற்படி கால்வாய் மற்ற எந்த நாட்டையும் காட்டிலும் பிரிட்டனுக்கே வரப் பிரசாதமாக அமைந்தது. அது வெட்டப் படுவதற்கு முன் பிரிட்டனிலிருந்து இந்தியாவுக்கு வரும் கப்பல்கள் அதிகமாக ஆறாயிரம் மைல் தூரம் ஆப்பிரிக்கா கண்டத்தைச் சுற்றி வளைத்துக் கொண்டு வரவேண்டியிருந்தது.

நூற்று மூன்று மைல் நீளமும் இருநூறு அடி அகலமும் உள்ள அக் கால்வாய் சமாதான காலத்திலும் யுத்த காலத்திலும் பிரிட்டனுக்கு ஜீவநாடியாக இருந்து வந்தது எனலாம். பிரதி வருடமும் அதன் வழியாக ஆறாயிரம் வர்த்தகக் கப்பல்கள் போய் வருவதால், பிரிட்டிஷ் சூயஸ் கால்வாய்க் கம்பெனிக்கு வருஷாவருஷம் கோடிக் கணக்கில் லாபம் கிடைத்து வந்துள்ளது.

சூயஸ் கால்வாய், ஐரோப்பாவையும் ஆசியாவையும் இணைக்கும் கேந்திர ஸ்தானமாக இருப்பதால், அப் பிரதேசத்தை என்றென்றும் தங்கள் கையிலிருந்து நழுவ விடாமல் பாதுகாப்பதற்காகப் பிரிட்டிஷார் பத்து கோடி பவுனுக்கு மேல் செலவு செய்து அதை இராணுவக் கோட்டையாகப் பலப்படுத்தி வைத்திருந்தார்கள்.

எனவே, அத்தகைய சூயஸ் கால்வாய்ப் பிரதேசத்தைக் கைவிட்டதன் பலனாக பிரிட்டன், ஐரோப்பா — ஆசியா வர்த்தகத் துறையிலும் அரசியல் துறையிலும் தங்களுக்கு இருந்த மகத்தான ஆதிக்கத்தை இழந்துவிட நேரும். எனினும் அதற்குப் பிரதியாக பிரிட்டன் மேற்படி செய்கையால் உலகத்தின் நன்மதிப்புக்கும் அராபிய நாடுகளின் நம்பிக்கைக்கும் பாத்திரமாகியிருக்கிறது. உலகமே போற்றக் கூடிய தங்களுடைய ராஜதந்திரத்தினால் சரித்திரத்தில் தனது நற்பெயரை நிலைநாட்டிக் கொண்டிருக்கிறது என்பதிலும் சந்தேகம் இல்லை.

# போர்ச்சுகல் அரசும் மக்கள் முரசும்

முன்னால் செல்வோர் முட்டிக் கொண்டால், பின்னால் செல்வோருக்குத் திவட்டி எதற்கு!— இவ்வாறு ஒரு பழமொழி உண்டு.

முன்னால் சென்றவர் முட்டிக் கொண்டதை அறிந்த பிறகும், பின் செல்வோர் தமது போக்கை மாற்றிக் கொள்ளாமல் தாமும் போய் முட்டிக் கொண்டால் அதைக்காட்டிலும் முட்டாள்தனம் வேறு இருக்க முடியுமா!

உலகில் ஆதிக்க வெறிக்கும் மக்களின் சுதந்திர உணர்ச்சிக்கும் நடந்த போராட்டங்கள் எண்ணில் அடங்கா. ஆனால், அந்தப் போராட்டங்களில் ஒன்றிலாவது ஆதிக்க வெறி இறுதி வெற்றி பெற்றதில்லை. ஆதிக்க வெறியை அடிப்படையாகக் கொண்ட மாபெரும்சாம்ராஜ்யங்கள் எல்லாம் தேய்ந்து மறைந்து விட்டன. சமீப காலத்திய சாம்ராஜ்யங்களின் எஞ்சிய சின்னங்களும் இன்று மறைந்து வருகின்றன.

மேலே குறிப்பிட்டுள்ளபடி, பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் இராணுவக் கோட்டையாக விளங்கிய சூயஸ் கால்வாய்ப் பிரதேசத்தை விட்டுவிட உலக ராஜதந்திரி சர்ச்சில் உறுதி கொண்டு விட்டார்.

இதுவரையில் மண்ணாசையால் மறைக்கப்பட்டிருந்த பிரஞ்சு சர்க்காரின் கண்களும் இப்போது திறந்து விட்டன. அவர்கள் ஏற்கெனவே, பிரஞ்சு இந்தியப் பிரதேசமான மாஹியிலிருந்து வெளியேறி விட்டார்கள். புதுச்சேரி, காரைக்காலிலிருந்தும், பாரதத் திருநாட்டின் சுதந்திர தினமான ஆகஸ்டு மாதம் பதினைந்தாம் தேதிக்கு முதல் நாள் வெளியேறிவிடத் தீர்மானித்து விட்டதாகச் செய்திகள் கூறுகின்றன.

ஆனால் சரித்திர சம்பவங்களையோ, சமீப கால நிகழ்ச்சிகளையோ கண்டும் கேட்டும் அறிந்தும் கூட போர்ச்சுகல் சர்க்காரின் மனப்போக்கு இன்னும் மாறவில்லை. முந்திய சாம்ராஜ்யங்கள் முட்டிக்கொண்டு தோல்வி அடைந்த பாதையிலே போர்ச்சுகல் சர்க்காரும் சென்று வருகிறார்கள்!

* * *

கடைசியாக, பாரத நாட்டில் போர்ச்சுகலின் ஆதிக்கத்தில் உள்ள பிரதேசங்களில் வாழும் மக்களும் தேசாவேசம் கொண்டு சுதந்திரப் போரில் குதித்து விட்டார்கள்.

இந்தியாவில் போர்ச்சுகலின் ஆதிக்கத்தில் உள்ள பல கிராமங்கள் போர்ச்சுகல் சர்க்காரின் அனுமதி யின்றியே விடுதலை பெற்று விட்டன; அதாவது மக்களின் நிர்வாகத்துக்கு வந்துவிட்டன.

அதனால் கோபவெறி கொண்ட போர்ச்சுகல் சர்க்கார் கண்மூடித் தனமான அடக்கு முறைகளில் இறங்கி யிருக்கிறார்கள்.

எனவே இந்தியாவுக்கும் போர்ச்சுகலுக்கும் உள்ள உறவு முறிந்து நிலைமை மிகவும் மோசமாகி வருகிறது. போர்ச்சுகல் இந்தியப் பிரதேசங்களில் உள்ள இந்திய ஸ்தானிகர்களைத் திருப்பி அழைத்துக் கொள்ளப் போர்ச்சுகல் சர்க்கார் வற்புறுத்தினர். அதற்குப் பிரதியாக, பம்பாயில் உள்ள போர்ச்சுகல் ஸ்தானிகர்களும் வெளியேறி விட வேண்டும் என்று இந்திய சர்க்கார் கட்டளை பிறப்பித்து விட்டார்கள்.

இவ்வாறாக, இந்திய சர்க்காருக்கும் போர்ச்சுகல் சர்க்காருக்கும் இருந்து வந்த ராஜரீக உறவு கத்தரிக்கப்பட்டு விட்டது.

போர்ச்சுகல் பிரதேசத்தில் அமைதியாகவும் சாத்விகமாகவும் சத்தியாக்கிரகம் செய்யும் தொண்டர்கள் விஷயத்தில் பலாத்காரத்தை உபயோகித்தால், விபரீதமான விளைவுகள் ஏற்படும் என்று இந்திய சர்க்கார் போர்ச்சுகல் சர்க்காரைக் கடுமையாக எச்சரித்திருக்கிறார்கள்.

இந்தியாவில் தங்களுடைய குட்டிச் சாம்ராஜ்யத்தைப் பாதுகாக்க உதவி புரியும்படி போர்ச்சுகல் சர்க்கார் கோரியதற்கு இணங்கப் பிரிட்டிஷ் சர்க்கார் மறுத்து விட்டார்கள் என்றும் பத்திரிகைச் செய்திகள் கூறுகின்றன.

மாபெரும் சாம்ராஜ்யத்தைக் காட்டிலும் இந்திய மக்களின் நட்பையும் நல்லுறவையுமே பிரிட்டிஷார் பெரிதாக மதித்து இந்தியாவிலிருந்து வெளியேறினர். எகிப்து நாட்டின் நட்பை இழக்காமல் இருப்பதற்காக இப்போது சூயஸ் கால்வாய்ப் பிரதேசத்திலிருந்தும் வெளியேறத் தீர்மானித்திருக்கிறார்கள். அப்படி யிருக்க, இந்தியாவில் போர்ச்சுகல் சர்க்காரின் குட்டி சாம்ராஜ்யத்தைப் பாதுகாக்கப் பிரிட்டிஷார் உதவிக்கு வருவார்கள் என்று போர்ச்சுகல் சர்க்கார் கனவு கண்டது அவர்களுடைய ராஜ தந்திர சூன்யத்தையே அம்பலப் படுத்துகிறது.

எனவே, நிலைமை எல்லை மீறி முற்றுவதற்கு முன், போர்ச்சுகீசியர்கள் சிறந்த ராஜ தந்திரிகளான பிரிட்டிஷாரின் உதாரணத்தையும், பிரஞ்சு சர்க்காரின் உதாரணத்தையும் பின்பற்றுவார்களாக. இந்தியாவில் சொந்தம் கொண்டாடும் இடப் பிரதேசங்களிலிருந்து காலதாமதமின்றி வெளியேறிச் செல்வார்களாக.

# "கல்கி" தீபாவளி மலர்

ஒவ்வொரு ஆண்டும் தீபாவளிப் பண்டிகை நெருங்கும்போது "கல்கி" பத்திரிகையின் நிர்வாகிகளுக்கு ஒரு தர்மசங்கடமான நிலைமை ஏற்படுவது வழக்கமாயிருந்து வருகிறது. உயர்ந்த வழுவழுப்பான வெள்ளை ஆர்ட் காகிதத்தில் பல வர்ண சித்திரங்களுடனே மிகச் சிறப்பாகத் தீபாவளி மலரைக் கொண்டு வரவேண்டும் என்று ஒரு பக்கத்தில் ஆர்வம். மற்றொரு பக்கத்தில், "அப்படிக் கொண்டு வரும் மலருக்கு ஐந்து ரூபாய் விலை வைக்க வேண்டி யிருக்கிறதே! நேயர்களில் பலர் அவ்வளவு ரூபாய் கொடுத்து வாங்க முடியாமலிருக்குமே! ஆர்வத்துடன் ஐந்து ரூபாய் கொடுத்து வாங்க முன்வரும் நேயர்களையும் திருப்தி செய்ய முடியவில்லையே! போதுமான பிரதிகள் அச்சிட முடியவில்லையே!" என்ற கவலை மற்றொரு பக்கம். ஒவ்வொரு ஆண்டு தீபாவளி ஆனதும், தீபாவளி மலரைப் பாராட்டி ஒரு சாரார் கடிதம் எழுதுவார்கள். அக் கடிதங்களைப் படித்ததும் உண்டாகும் மகிழ்ச்சி மறைந்து விடும்படியாக, "தீபாவளி மலர் கிடைக்கவில்லையே!" என்று ஒரு சாராரும், "இவ்வளவு விலை வைத்து விட்டீர்களே! எப்படி வாங்குவது!" என்று இன்னொரு சாராரும் எழுதுவார்கள்.

சாதாரணமாகக் "கல்கி" வாங்கும் பழக்கமுள்ள நேயர்கள் அனைவருக்கும் தீபாவளி மலரும் கிடைக்கச் செய்ய வேண்டும் என்பது நம் விருப்

பம். அதே சமயத்தில், நமது நேயர்களில் பெரும்பாலோர் மத்தியதர வகுப்புகளைச் சேர்ந்தவர்கள் என்பதையும் நாம் மறந்து விடுவதற்கில்லை. வாழ்க்கைச் செலவுகள் மிகுந்திருக்கும் இக்காலத்தில் நம் நேயர்களின் பொருளாதார நிலைமையைப் பற்றி எண்ணிப் பார்ப்பதும் நம் கடமையாகும்.

இதை யெல்லாம் எண்ணிப் பார்த்து, இந்த வருடம் தீபாவளி மலர் சம்பந்தமாக ஒரு முடிவுக்கு வந்திருக்கிறோம். வழுவழுப்பான ஆர்ட் காகிதத்துக்கும் வர்ண மை வகைகளுக்கும் அதிக பணம் செலவு செய்து விட்டு, நேயர்களிடம் அதை வசூலிக்க முயலுவதில்லை என்று தீர்மானித்திருக்கிறோம்.

சாதாரண "கல்கி" இதழின் அளவிலேயே அதிக பக்கங்களுடனும் மற்றும் விசேஷ அம்சங்களுடனும் தீபாவளி மலர் வெளியிடுவது என்றும், அதற்கு ஒரு ரூபாய் விலை வைப்பது என்றும் நிச்சயித்திருக்கிறோம்.

இந்தத் தமிழ் வருஷ ஆரம்பத்தில் நாம் வெளியிட்ட புத்தாண்டு மலருக்கு நம் நேயர்களிடம் கிடைத்த வரவேற்பும் வாழ்த்துக்களுமே இந்த முடிவுக்கு வருவதற்கு முக்கிய காரணமாகும்.

ஒரு ரூபாய் விலைக்கு இந்த வருஷத்தில் நாம் வெளியிட விருக்கும் தீபாவளி மலர், விஷயங்களின் சிறப்பிலும் சித்திரங்களின் வனப்பிலும் ஐந்து ரூபாய் மலரைத் தோற்கடிக்கும் என்பதில் சிறிதும் சந்தேகம் இல்லை. கதைகளும் கட்டுரைகளும் உயர்ந்த கிளேஸ் நியூஸ் பிரிண்ட் தாளிலும் வர்ண சித்திரங்கள் வழுவழுப்பான ஆர்ட் காகிதத்திலும் அச்சிடப்படும். மலரின் உருவ அமைப்பு ஒன்றுதான் வேற்றுமையாக இருக்கும்.

சென்ற ஆண்டுகளில் ஐந்து ரூபாய் கொடுத்து வாங்கிய தீபாவளி மலரைக் காட்டிலும் இவ்வாண்டில் ஒரு ரூபாய் விலைக்கு நம் நேயர்கள் வாங்கும் தீபாவளி மலர் அதிக திருப்தியளிப்பதாயிருக்கும் என்பதில் நமக்குச் சிறிதும் ஐயமில்லை.

"கல்கி" பத்திரிகை நிர்வாகிகள் செய்யும் தொண்டு எதையும் மிகைப்படுத்திக் கூறும் வழக்கம் கிடையாது என்பது நேயர்கள் அநுபவத்தில் கண்டறிந்த உண்மை யல்லவா!

# இலங்கையில் இந்திய நிதி மந்திரி

கொழும்பு, ஜுலை மீ 31உ

இலங்கை அரசாங்கத்தின் நாடு கடத்தும் கொள்கையினால் உருவாகியுள்ள அவசர நிலைமையைப் பற்றி யோசிக்க ஜனநாயக காங்கிரஸ் காரியக் கமிட்டி இவ்வாரம் கூடி மூன்று தீர்மானங்களை நிறைவேற்றி வெளியிட்டிருக்கிறது. இந்தத் தீர்மானங்களை விளக்கித் தலைவர் ஸ்ரீ எஸ். தொண்டமான் வெளியிட்டுள்ள ஒரு அறிக்கையில் பல ஆண்டுகளாக இலங்கையில் வசித்து வரும் இந்தியர்களைப் போதிய அவகாச மளிக்காமலும் நியாயமான நஷ்ட ஈடு பெற்றுக் கொடுப்பதற்கு வழி செய்யாமலும் நாடு கடத்த முயற்சிப்பது பெரிய அநியாயமென்றும் இந்த அக்கிரமத்துக்கு இந்திய ஹைகமிஷனர் தேசாய் உடந்தையா யிருப்பது தங்களுக்கு அதிர்ச்சியைக் கொடுப்பதாயும் தெரிவித்திருக்கிறார்.

இலங்கை அரசாங்கம் இந்தியப் பிரச்னையைக் கூறு போட்டுத் தனக்குச் சாதகமாகத் தீர்த்துக் கொள்ளப் பார்க்கிறது. இருதேச அரசாங்கங்களும் பிரச்னையை மறுபடியும் புனராலோசனை செய்து பரிபூரணமான தீர்வு காண வேண்டும். அதன் பிறகும் இங்கு இந்தியப் பிரஜைகளா யிருப்பவர்களை நாடு கடத்துவது அவசியமா யிருந்தால், அவர்களுக்கு ஒரு நியாயமான தவணை கொடுத்து, இந்தியாவில் புனர்வாழ்வுக்கு உதவப் போதிய அளவு நஷ்ட ஈடு கிடைக்கவும் ஏற்பாடு செய்ய வேண்டும். இதற்கிடையில் இலங்கை இந்தியர்கள் நாடுகடத்தும் பயமுறுத்தல்களுக்கும் துவேஷப் பிரசாரங்களுக்கும் அரண்டு விடாமல் மன உறுதியுட னிருந்தால் அரசாங்கத்தின் நாடு கடத்தும் திட்டத்தை முறியடித்து விடலாம். இவ்வாறு கூறிய ஸ்ரீ தொண்டமான் இதை இந்திய நிதி மந்திரி ஸ்ரீ தேஷ்முக்கிடம் சொல்லியிருப்பதாயும் தெரிவித்தார்.

இங்கு விஜயம் செய்திருந்த இந்திய நிதி மந்திரி ஸ்ரீ தேஷ்முக்கை இலங்கை இந்திய வர்த்தகச் சங்கத்தின் தூது கோஷ்டி யொன்றும் பேட்டி கண்டது. இந்தியாவுக்குத் திரும்பி விட வர்த்தகர்கள் தயாரா யிருப்பதாயும் அவர்கள் கொண்டு வரும் மூலதனத்துக்கு வரி ஏதும் விதிக்காமலிருக்க வேண்டுமென்றும் சங்கத் தீர்வைகளிலிருந்தும் தங்களுக்கு விலக்கு அளிக்க வேண்டுமென்றும் இந்தத் தூது கோஷ்டி கேட்டுக் கொண்டது. இந்தியாவுக்குள் மூலதனம் திரும்பி வருவதில் இந்திய அரசாங்கத்துக்கு அக்கறையிருப்பதாயும், ஆகையால் சாத்தியமான அளவு சலுகைகள் அளிக்க முயற்சி செய்யப்படுமென்றும் ஸ்ரீ தேஷ்முக் கூறினார்.

இலங்கையின் நாடு கடத்தும் கொள்கையினால் அதிக கஷ்டத்துக்கு உள்ளாக இருப்பவர்கள் எளிய சிப்பந்திகள்தான். இவர்கள் சார்பாக நிதி மந்திரியிடம் விவாதிக்கும் பொறுப்பை ஒரு பத்திரிகை நிருபர் மேற்கொள்ள வேண்டியதாயிற்று. பல வருட காலம் உழைத்துக் கொடுத்துக் கையில் அரைக் காசும் இல்லாத நிர்க்கதியான நிலைமையிலிருக்கும் சிப்பந்திகளுக்கு ஒரு நியாயமான நஷ்ட ஈடு கொடுத்தால்தான் முதலாளிமார்களின் மூலதனத்துக்கும் வரிச் சலுகை அளிக்க முடியுமென்று இந்திய அரசாங்கம் ஒரு நிபந்தனை போட முடியுமா! இவ்வாறு 'வீர கேசரி' நிருபர் ஒரு கேள்வியைப் போட்டதற்கு, இவ்வித நிபந்தனை போடுவது சாத்தியமில்லை யென்றும், ஆனால் முதலாளிமார்கள் சிப்பந்திகளுக்குக் கருணை காட்டுவதை அனுசரித்தே அவர்களிடம் அரசாங்கத்துக்கும் அனுதாப மேற்படுமென்றும் ஸ்ரீ தேஷ்முக் கூறினார். தனுஷ்கோடி, திருச்சிராப்பள்ளி சுங்க இலாகா அதிகாரிகள் இலங்கையிலிருந்து வரும் பிரயாணிகளை அநியாயத் தீர்வை போட்டு இம்சிப்பதாகக் கூறப்பட்ட பொழுது இதைப் பற்றி உடன் கவனிப்பதாகவும் இந்திய நிதி மந்திரி உறுதிமொழி கூறினார்.

நிற்க, நாடு கடத்தும் சிப்பந்திகள் ஒவ்வொருவருக்கும் அவர்களது ஒரு வருட சேவைக்கு ஒரு மாதச் சம்பளம் வீதம் முதலாளிமார்கள் போனஸ் கொடுக்க வேண்டுமென்றும் இவ்விதம் செய்வதுதான் நியாயமும் நேர்மையு மென்றும் இந்திய வர்த்தகச் சங்கத் தலைவர் ஸ்ரீ கே. ஜி. ராவ் ஒரு மேலான யோசனையைச் சொல்லியிருக்கிறார். அவருடைய யோசனையின்படி நடந்தால் வியாபாரிகளுக்குப் போகும் பொழுதாவது நல்ல பெயர் இருக்கும். பல்லாயிரக் கணக்கான எளிய மக்களின் சாபத்தை வாங்கிக் கட்டிக் கொள்ளாமல் திரும்புவது சாத்தியமாகும்.

— ரஜனி

# சுதந்திரத் திருநாள்

ஆகஸ்டு மாதம் பதினைந்தாம் தேதி பாரத நாட்டின் சரித்திரத்தில் மிகப் புனிதமான திருநாள். தாழ்வுற்று வறுமை மிஞ்சி விடுதலை தவறிக் கெட்டுப் பாழ்பட்டு நின்ற பாரத தேசம் விடுதலையடைந்த பெரு நாள்.

அத்தகைய சுதந்திரத் திருநாளைத் தேசமெங்கும் கோலாகல வைபவங்களுடன் கொண்டாடப் போகிறது; ஆம், கொண்டாடத்தான் வேண்டும்.

அப்படிக் கொண்டாடும் பொழுது சுதந்திரம் வாங்கிக் கொடுத்த தியாக புருஷர்களை நினைந்து அவர்களுக்கு நன்றி செலுத்த வேண்டாமா!

பாரதநாட்டின் விடுதலைக்காகப் பாடுபட்டவர்களுக்குள்ளே மகாத்மா காந்தியை மிஞ்சியவர்கள் யாரேனும் உண்டா! தேசத்துக்காகவே வாழ்ந்து தேசத்துக்காகவே உயிரை விட்ட புண்ணிய மூர்த்தி. காந்தி மகான் இல்லையென்றால் இந்தியா நம் நாளில் சுதந்திரம் பெற்றிருக்க முடியாது. அதனால்தான் "இந்தியாவின் தந்தை" என்று மகாத்மாவை நாம் போற்றி வணங்குகிறோம்.

அத்தகைய மகா புருஷரைச் சுதந்திரத் திருநாளில் நாம் நினைவுபடுத்திக் கொள்ளக் கடமைப் பட்டிருக்கிறோம்.

எப்படி அவரை நாம் நினைவுபடுத்திக் கொள்வது! அதற்குச் சரியான வழி இருக்கிறது. மிகச் சிறந்த முறை இருக்கிறது.

கிண்டி ராஜபவன் தோட்டத்தில் நிர்மாணிக்கப்பட்டு வரும் மகாத்மா காந்தி ஞாபகார்த்த மணி மண்டபம், காந்தி மகானுடைய மகிமையை என்றென்றைக்கும் நினைவூட்டிக் கொண்டிருக்கும். மகாத்மாவின் மனத்துக்கு உகந்த நிர்மாணப் பணிகளில் நம்மை ஈடுபடும்படி அந்த ஞாபகார்த்தமண்டபம் தூண்டிக்கொண்டே இருக்கும்.

நல்ல காரியத்துக்குக் கொடுத்துப் பழக்கப் பட்டவர்கள், கொடுப்பதில் மகிழ்ச்சியையும் இன்பத்தையும் கண்டவர்கள், காந்தி மகான் திருப்பணிக்கு நிச்சயம் கொடுப்பார்கள்.

மகாத்மாவிடம் பக்தி உள்ளவர்கள்,—பெற்ற சுதந்திரத்தைப் பேணி வளர்க்கும் ஆவல் உள்ளவர்கள், சுதந்திரம் வாங்கித் தந்த மகானின் ஞாபகார்த்த மண்டப நிதிக்குத் தங்களால் ஆன கைங்கரியத்தைச் செய்யலாம். அப்படிச் செய்வதின் மூலம் காந்தி மகானை நன்றியுணர்ச்சியுடன் நினைவுபடுத்திக் கொள்ளலாம்.

காந்திமகான் ஏழை பங்காளர். ஏழைகளுக்காகவே உயிர் வாழ்ந்தவர். அல்லும் பகலும் ஏழைகளின் நன்மைக்காகவே உழைத்தவர். இன்றைய தினம் பாரத நாட்டின் தொழிலாளர்கள் அடைந்திருக்கும் உரிமைகள், நன்மைகள் எல்லாவற்றுக்கும் மூலகாரண புருஷர் காந்தி மகாத்மாதான். ஆகையால் காந்தி மகான் ஞாபகார்த்த மண்டபத்தில் ஏழைகளின் பங்கும், தொழிலாளர்களின் பங்கும் சேர வேண்டியது அவசியம். உங்களுடைய காணிக்கையை இந்தப் புனிதத் திருப்பணிக்கு அனுப்பிவைப்பதின் மூலம் சுதந்திரத் திருநாளில் மகாத்மா காந்தியை ஞாபகப்படுத்திக் கொள்ளலாம்.

"சென்னை கவர்னர் கனம் ஸ்ரீ பிரகாசா, காந்தி ஞாபகார்த்த நிதி, ராஜபவன், கிண்டி, சென்னை" என்ற விலாசத்துக்கு உங்கள் நன்கொடையை உடனே அனுப்பி வையுங்கள்.

---

* இலங்கையிலிருந்து பல நேயர்கள் காந்திஜி பிரார்த்தனை மண்டப நிதிக்கு நன்கொடை அனுப்ப விரும்புவதாகத் தெரிவித்திருக்கிறார்கள். இப்பொழுதுள்ள சட்ட திட்டங்களின்படி இருபத்தைந்து ரூபாயும் அதற்குக் குறைவான தொகைகளும் இலங்கை நேயர்கள் மணியார்டர் மூலம் சென்னைக் கவர்னர் அவர்களுக்கு நேரில் அனுப்பி வைக்கலாம்.


## "கல்கி" தீபாவளி மலர் 1954

★ இந்த ஆண்டு "கல்கி" தீபாவளி மலர் விஷயங்களின் சிறப்பிலும் சித்திரங்களின் வனப்பிலும் வழக்கமான மலரை விட வெகுவாக மேம்பட்டிருக்கும்.

★ சாதாரண "கல்கி" இதழின் அளவிலேயே அதிக பக்கங்களுடனும் மற்றும் பல விசேஷ அம்சங்களுடனும் வெளியாகும்.

★ கதைகளும் கட்டுரைகளும் உயர்ந்த கிளேஸ் நியூஸ் பிரிண்ட் தாளிலும் வர்ணச் சித்திரங்கள் வழு வழுப்பான ஆர்ட் காகிதத்திலும் அச்சிடப்படும்.

200 பக்கங்களுக்கு மேல் உள்ள இம் மலரின் விலை

**ரூபாய் ஒன்று**

○●○

**உங்கள் பிரதிகளுக்கு உள்ளூர் ஏஜண்டிடம் பதிவு செய்து கொள்ளுங்கள்**

தபால் மூலம் பெற விரும்பும் நேயர்கள் ரிஜிஸ்தர் சார்ஜ் உள்பட ரூ. 1-8-0 அனுப்ப வேண்டுகிறோம். வி. பி. பி. மூலம் அனுப்ப இயலாது.

மானேஜர்: கல்கி காரியாலயம், கீழ்ப்பாக்கம், சென்னை-10



இந்தியாவின் சொந்த சோப்பினுடைய

## புது மணத்துடன்

கூடிய

## புதிய தோற்றம்

கடைசி செதில் உள்ளளவும் புதியதாகவும் வாசனை யுள்ளதாகவும் இருக்கிறது.

சுதேசி மற்றும் உயர்ந்தது.




பிரதிநிதித்வம்பெற்ற ஸ்திரீகளாலும் புருஷர்களாலும் அங்கீகரிக்கப் பெற்ற இந்த அதி சுத்தமான எளிதில் கரையாத சோப், மென்மையான நுரையை அபரிமிதமாக உண்டாக்குகிறது; புதிய, அகலாத வாசனையை நிலைத்திருக்கச் செய்ய யந்திரத்தின் மூலம் காகித உறையால் சுற்றப்பட்டுள்ளது. புதிய வத்னியில் ஏதாவது குறைபாடு இருக்கிறதா என்று சொல்லுங்கள்.

சிறந்த பேரம்
பிரசித்தமான விலை
மற்றும் வத்னி பேபி

## கோத்ரெஜின் வத்னி

லிமிடெட்

அங்கத்தினர்: I இந்தியன் S சோப் அண்டு T டாய்லெட்ரீஸ் M மேக்கர்ஸ் A அஸோஸியேஷன்

100% இந்திய நிர்வாகம் — மூலதனம் — உழைப்பு


---


# இந்தியன் பாங்க், லிமிடெட்

(ஸ்தாபிதம்:  1907)

தலைமை ஆபீஸ்: "இந்தியன் பாங்க் பில்டிங்ஸ்", வடக்கு பீச் ரோடு, மதராஸ்-1

தென் இந்தியாவில் எல்லா முக்கிய இடங்களிலும், பம்பாயிலும் புது டில்லியிலும் சப் ஆபீஸ்கள், கிளைகள் இருக்கின்றன.

**மூலதனம்**

| | | | |
|---|---|---|---|
| அங்கீகரிக்கப்பட்டது | ... | ரூ. | 1,00,00,000 |
| வழங்கப்பட்டது | ... | ரூ. | 72,00,000 |
| செலுத்தப்பட்டது | ... | ரூ. | 57,80,000 |
| ரிசர்வ் & இதர நிதிகள் | ... | ரூ. | 76,50,000 |
| டெபாஸிட்டுகள் 31-12-53ல் உள்ளது | | ரூ. | 21·85 கோடிகள் |

எல்லாவிதமான பாங்கிங் அலுவல்களும் செய்யப்படும்

*என். கோபால அய்யர், செக்ரடரி*

# ஏன் அனுமதிக்கக் கூடாது?

திருச்சி மாவட்டத்துக்குள் அதிக அளவில் வருமானமும், கையிருப்பு நிதியும் கொண்டது மணப்பாறை மேஜர் பஞ்சாயத்து.

எங்கள் நகரப் பஞ்சாயத்தின் முக்கிய பெரிய நிரந்தர வருமானம் இவ்வூரில் சந்தைகளை ஆண்டு தோறும் ஏலம் விடுவதன் மூலம் கிடைக்கும் தொகையே யாகும். இந்த ஏலத் தொகை சுமார் ரூ. 80,000க்குக் குறையாது. ஆனால் இத் தொகை முழுமையும் எங்கள் பஞ்சாயத்தைச் சேருவது கிடையாது. 100-க்கு 45 சத விகிதம் பங்கு பஞ்சாயத்தையும், மீதித் தொகை எங்கள் மாவட்டக் கழகத்தையும் அடைகிறது. இவ்வருமானம் தவிர, மற்றையப் பிரதேசங்களில் உள்ள வீட்டு வரி, கக்கூஸ் வரி, உணவுக் கடைகள் போன்ற வியாபார ஸ்தலங்களுக்கான அனுமதிக் கட்டணம், தொழில் வரி போன்ற வருவாய்களும் உள்ளன. பஞ்சாயத்தின் எல்லைக்குட்பட்ட இடங்களிலிருந்து குப்பை,கூளம், கழிவுப் பொருள்களைச் சேகரித்து, சேமித்து வைத்து ஆண்டுதோறும் ஏலம் விடுவதன் மூலமும் நல்ல தொகை கிடைக்கிறது. இவ்விதமாக வரும் பெருத்த தொகை செலவழிக்கப்படாது, பல வருடங்கள் சேர்க்கப்பட்டு வந்ததன் காரணமாக இன்று பல வசதிகளுக்காகவும், அபிவிருத்திகளுக்காகவும் செலவும் செய்யப்பட்ட பின்னரும், சர்க்கார் அபிவிருத்தித் திட்டங்களில் எழுப்பப் பெற்ற பல கடன் பத்திரங்கள் முதலீடு செய்யப்பட்டும், கையிருப்பு நிதியில் சுமார் இரண்டு லட்ச ரூபாய் உள்ளதில் வியப்பொன்றுமில்லை. சென்ற மாதங்கூட எங்கள் பஞ்சாயத்தினர் சர்க்காரால் சமீபத்தில் எழுப்பப் பெற்ற கடனில் ரூ. 50,000 முதலீடு செய்துள்ளனர்.




தேர்தலுக்குப் பின் பதவியிலமர்ந்த புதிய சபையினர் ஒற்றுமையாகவும், ஒழுங்காகவும் இருந்து ஊர் முன்னேற்றத்துக்கு அடிகோலுவது குறித்து மக்கள் அனைவரும் பெருமை கொள்கின்றனர். அவர்கள் சாதனைகள் அதிக அளவில் இல்லாவிடினும், குறைந்த காலத்தில் இயன்ற அளவில் வசதிகள் செய்துள்ளனர்.



அவர்கள் செய்தவற்றிலெல்லாம் சிறப்பு மிக்கது சமீபத்தில் திறக்கப்பட்ட மணப்பாறை பஞ்சாயத்துக்கான சொந்தக் கட்டிடமாகும். இவ்வளவு பெருமையும் பணமும் படைத்த பஞ்சாயத்து அலுவலகம் இது நாள் வரையில் வாடகைக் கட்டிடத்தில், பல கஷ்டங்களுடன் இயங்கி வந்த பெருத்ததொரு குறை இதன் மூலம் நிவர்த்திக்கப்பட்டுள்ளது. இதுவரை மின்சார வசதி பெறுமலிருந்த எங்கள் நகரின் சந்து பொந்துகளிலேகூட இன்று பஞ்சாயத்துச் சபையால், மின்சார விளக்குகள் பொருத்தப்பட்டு ஒளி வீசுகின்றன. முன்பு பல சந்திப்புகள் இருக்கும் பல தெருக்கள், ரஸ்தாக்களில் குறைந்த ஒளியிடும் விளக்குகள் அமைக்கப் பட்டிருந்தவை மாற்றப்பட்டு, இன்று அதிக பிரகாசமுள்ள விளக்குகள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. முன்பெல்லாம், நகரின் ஒதுப்புறமா யிருந்த ஒரு கிணற்றிலிருந்து, குழாய்கள் மூலம் நகருக்குள் கொண்டு வந்து இவ்வளவு [பெரிய ஊரில் சுமார் 25 குழாய்களைத் தெருக்களில் பல இடங்களில் வைத்துத் தண்ணீர் விநியோகம் செய்து வந்தனர். ஆனால், இன்றோ ஊருக்குள்ளேயே, பல்வேறு பாகங்களில், குழாய்கள் இல்லாத இடங்களில், பல கிணறுகளுக்கு அருகில் மின்சாரத்தால் இயங்கும் தானியங்கிக் குழாய்களைத் தண்ணீர் வசதியற்றுக்கஷ்டப்பட்ட மக்களுக்கு அமைத்துக் கொடுத்து உதவியுள்ளனர். இராக் காலங்களில் மக்கள் போக்கு வரவுக்கு அஞ்சிய செவலூர் சாலையில் நெடுகிலும் பிரகாசமான விளக்குகள் போடப்பட்டுள்ளன.

தவிரவும், வீட்டு வரியை நியாய மற்ற காரணங்களைக் காண்பித்து ஏற்றியதை, மக்கள் முறையீடு, எதிர்ப்பின் பலனாகப் பழைய அளவில் குறைக்கப் பட்டது. ஆனால் இவை யிரண்டும் தற்சமயம் உள்ள பஞ்சாயத்தினர் பதவி ஏற்குமுன்பே செய்யப்பட்டவை யாகும். இருந்த போதிலும், புதிய நிர்வாகத்தினரும் தொழில் வரியைப் பாதியளவு குறைத்து மக்களுக்கு உதவியுள்ளனர். புதிதாகப் பல சந்துகள் பஞ்சாயத்தால் செப்பனிடப்பட்டுள்ளன. சமீபத்தில், ஏழை மக்களின் நலனை உத்தேசித்து, பஞ்சாயத்துச் சபையாரால் சவ அடக்கப்பெட்டி வண்டி ஒன்றும் வாங்கப் பட்டுள்ளது. சவ அடக்கச் சடங்கில் கலந்துகொள்பவர்கள், குளிப்பதற்காக மயானத்துக்கருகே புதிதாக ஒரு குழாய் அமைக்கப் பட்டுள்ளது. பஞ்சாயத்தில் வேலை செய்யும் நகர சுத்தித் தொழிலாளருக்குப் பஞ்சாயத்தின் செலவில் வீடுகட்டி உதவத் திட்டம் செய்துள்ளனர். தவிரவும் தினசரி காய்கறி விற்கும் பொது இடம், பிரசவ விடுதி, நேரத்தை அறிவிக்கும் சங்கு போன்றவற்றை அமைக்க முயற்சி எடுத்துள்ளனர். பல இடங்களில் மக்கள் மலஜலம் கழிப்பதற்காகப் புதிதாகக் கழிவு இடங்கள் கட்டப்பட்டுள்ளன.

இவ்வளவு நல்லவை செய்யப்பட்ட போதிலும் ஏராளமான குறைகளும் காணப்படுகின்றன. முக்கியமாக மாவட்டக் கழகத்தினர் எங்களிடமிருந்து கொண்டு செல்லும் தொகைக்குப் பிரதியாக இவ்வூரில் அவர்களாலும், பஞ்சாயத்தினராலும் கூட்டாக நிர்வகிக்கப்படும் பாடசாலைகள், மருத்துவ விடுதிகள் சந்தை கூடுமிடங்கள் முதலி

---

* இந்தக் கட்டுரைப் பகுப் போட்டிக்கு நாளது ஆகஸ்டு 15உ வரை கட்டுரைகள் அனுப்பி வைக்கலாம்.

யன மிகவும் மோசமான நிலைமையில் உள்ளன. இவ்வூரிலுள்ள சாக்கடைகளும் அவற்றின் அசுத்தமான நிலைமையும் வேறு எந்த நகரத்துடனும் ஒப்பிட முடியாத அளவு சீர்குலைந்து நாற்றமடிக்கும் நிலையிலுள்ளன. உடனடியாகத் தெருக்கள்தோறும் சாக்கடைகள் தேங்காது, நாற்றமடிக்காது சுத்தமாகக் கொண்டு செல்லப்பட்டு, ஊருக்கு அப்பால் ஏதாவது ஓர் இடத்தில் கொண்டுவிட ஏற்பாடு செய்ய வேண்டும். தவிரவும் இங்குள்ள சுகாதார அதிகாரிகளும், ஊழியர்களும் இனியாவது அக்கறை செலுத்தி ஊரை அசுத்தத்தினின்று காக்க வேண்டும்.

சுற்றுப் புறத்தில் வெகு தூரத்துக்கு ஒரு உயர்தரப் பாடசாலைகூட இல்லாதிருந்து, மக்கள் ஓரளவு தங்களிடையே வசூலித்து மாவட்டக் கழகத்தாரால் ஆரம்பிக்கப்பட்ட உயர்தரப் பாடசாலைக்கு இவ்வூர்ப் பஞ்சாயத்திலிருந்து ரூ. 50,000 வரை உதவிசெய்யப் பல காலத்துக்கு முன்பே தீர்மானித்தும், மேலதிகார வர்க்கம் அதற்கு அனுமதியளிக்க மறுத்து, தற்சமயம் மேற்படி பள்ளி வாடகைக் கட்டிடங்களில் குற்றுயிரான நிலையில் நடந்து வருகிறது. சிசு பரிபாலனசாலை, மருத்துவ விடுதி போன்றவற்றில் நல்ல மருந்துகளோ, வசதிகளோ கிடையாமல் மக்கள் கஷ்டப்படுகின்றனர். பெயருக்கு மாத்திரம் மேற்படி ஸ்தாபனங்கள் உள்ளனவே அன்றி, அவற்றை நாடும் ஏழைகள் பலரும் சரியான கவனிப்பும், ஆதரவுமின்றிப் பணம் கொடுத்துத் தனிப்பட்ட வைத்தியரிடம் சிகிச்சைக்குச் செல்ல வேண்டியுள்ள நிலைமை உடனடியாக நிவர்த்திக்கப்பட வேண்டும். குழாய் பம்புகள் புதிதாக நிறைய வைக்கப்பட்டுள்ள போதிலும், அவை அடிக்கடி பழுதுபட்டு ஓடாமல் தடங்கல் படுவதால், பிறகு வெளியூர்களிலிருந்து அதற்கான பழுதுபார்ப்பவர்கள் வந்து சரிசெய்யும் வரை மக்கள் தண்ணீருக்கு அவதியுறுகின்றனர். நகரசபைகள் உயர்தரப் பாடசாலைகளும், மருத்துவ விடுதிகளும் நடத்த அனுமதிக்கும்போது எங்கள் பஞ்சாயத்துப் போன்ற மேஜர் அந்தஸ்து பெற்ற பணம் படைத்த ஸ்தாபனங்கள் தங்கள் பிரதேச மக்களின் நலனுக்காக ஏன் இவற்றை நடத்தச் சட்டம் செய்யக் கூடாது! சர்க்கார் கடன் பத்திரங்களில் பஞ்சாயத்து போர்டு பணம் போட அனுமதிக்கும் அதிகாரிகள், பல நிவாரணங்களுக்கு நிதி உதவ அனுமதியளிக்கும் உத்தியோகஸ்தர்கள், பஞ்சாயத்திலுள்ள மக்களிடமிருந்து வாங்கும் வரிப் பணத்தை அவர்கள் கல்வி, ஆரோக்கிய வசதிகள் பெறப் பஞ்சாயத்து உதவுவதை மட்டும் அனுமதிக்க ஏன் மறுக்கவேண்டும்?

மணப்பாறை
25-6-54 ரா. கல்யாணம்

# பஞ்சாயத்தும் முன்னேற்றமும்

என் கிராமத்தின் பெயர் நடுஹட்டி. இது நீலகிரி ஜில்லாவிலுள்ள கூனூர் தாலுக்காவைச் சேர்ந்தது. இக் கிராமத்து மக்களுள் பெரும்பாலோர் பயிர்த் தொழில் செய்து வாழ்கின்றனர். இங்கிருப்பது ஓர் 'மைனர்' பஞ்சாயத்து.

புதிய முறையில் பஞ்சாயத்து அமைக்கப்பட்டு இப்போது சுமார் ஓராண்டுக்கு மேலாகியும் இது வரைக்கும் பஞ்சாயத்து நிர்வாகத்தின் பயனாக எங்கள் கிராமத்து மக்களின் வாழ்க்கையில் யாதொரு விதமான புதிய மாறுதலோ அல்லது முன்னேற்றமோ தென்படவில்லை. ஆனால் இக் கிராமத்து மக்களில் பலர் தத்தம் சுய முயற்சியினால் ஒரே ஒரு துறையில் மட்டும் முன்னேறியிருக்கின்றனர். அதாவது சிலர் கள்ளத்தனமாக நாட்டுச் சாராயம் காய்ச்சி விற்பனை செய்வதும், அதன் பயனாக அடிக்கடி மதுவிலக்கு அதிகாரிகள் கையில் அகப்பட்டுக் கொண்டு அவதிப்பட்டு அபராதம் செலுத்துவதும், சில வேளைகளில் சிறைச்சாலை சென்று வருவதும், மற்றும் சிலர் இத்தகைய சாராயத்தை வாங்கிக் குடித்து உடல் நலம் குன்றி அகால மரணமடைந்து வருவதுமே யாகும்! இவ்வகை சுயமுன்னேற்றத் துறையில் செல்லும் மக்களைப் பஞ்சாயத்துச் சபை திருத்த முன் வரவில்லை. இந்த அவலமான முன்னேற்றத்தை அறவே அழித்துவிட என்னைப் போன்ற வாலிபர்கள் ஆங்காங்கு பல சங்கங்கள் ஏற்படுத்தி வேண்டிய முயற்சிகள் செய்து கொண்டு வருகின்றோம்.

நிற்க. எங்கள் பஞ்சாயத்தின் தலைவர் அந்தப் பதவிக்கு ஏறத்தாழத் தகுதி வாய்ந்தவரென்றே சொல்லலாம். முதிர்ந்த வயதும் அதற்கேற்ப அறிவும் அனுபவமும் உடையவர். யாருடனும் அதிகமாகப் பேசும் தன்மை வாய்ந்தவரல்ல. அதிலும் சென்ற தேர்தலில் தமக்கு எதிராக வோட்டு அளித்த அல்லது பிரசாரம் செய்த மக்களுக்கு அவர் பேசாமடந்தையாக இருக்கிறார்!

எங்கள் ஊர்ப் பஞ்சாயத்தின் அங்கத்தினர்களைப் பற்றி இங்கு குறிப்பிட வேண்டும். அதாவது பஞ்சாயத்தில் தாக்கல் செய்யப்படும் வியாஜ்யங்கள் சம்பந்தமாக விசாரணை நடத்தும் பொருட்டு அடிக்கடி பஞ்சாயத்துக் கூட்டங்கள் நடத்தப்பட்டு அவ் வியாஜ்யங்களில் சம்பந்தப்பட்ட வாதி பிரதிவாதிகளும் அதற்கு ஆஜராகும்படி அழைக்கப்படுவார்கள். இவர்களைச் சார்ந்த உறவினரும் அன்றைய தினம் கூடுவார்கள். எங்கள் கிராமப் பஞ்சாயத்தில் கடிதப் போக்குவரத்துகள் மட்டும் ஆங்கிலத்திலோ அல்லது தமிழிலோ நடைபெறுகின்றன. வியாஜ்யங்கள் நடைபெறும் போதெல்லாம் கட்டாயமாக நாங்கள் பேசும் மொழியாகிய 'படுக' பாஷையில் தான் பேச வேண்டும். ஏனெனில் இப் பஞ்சாயத்தின் தலைவர் உள்பட எல்லா அங்கத்தினர்களும், அவர்களின் கீழ் வேலை செய்யும் சிப்பந்திகளும் எங்கள் 'படுக' சமுதாயத்தைச் சேர்ந்தவர்களாக இருப்பதே காரணம். படுக மொழி மட்டும் தெரிந்த பஞ்சாயத்தார்களும் மக்களும் நிறைந்த பஞ்சாயத்து சபையில் விசாரணை நடக்கும் பல சமயங்களில், எங்கள் ஊர்ப் பஞ்சாயத்தின் குமாஸ்தா அவர்கள் நடுநடுவே குறுக்கிட்டுக் கொச்சையும் கோணலுமாக 'தஸ், புஸ்' என்று ஆங்கிலத்தில் பேசவும், அதைக் கேட்கும் அப்பாவி அங்கத்தினர்களும் மற்றையோரும் அவர் பேசுவது என்னவாக இருக்கக் கூடுமென வியப்புற்று ஆந்தை விழி விழிப்பார்கள்.

பஞ்சாயத்துக் குமாஸ்தா துரையவர்கள் இவ்வாறு ஆங்கிலத்தில் பேசுவதை எங்கள் பஞ்சாயத்தின் தலைவர் அவர்கள் அந்த இடத்திலேயே கண்டிப்பார். இத்தனையையும் பார்த்துக் கொண்டு நிற்கும் பார்வையாளர்கள் 'கொல்' என்று ஏளனமாகச் சிரிப்பார்கள். இக் காட்சி ஒரு சமயம் துக்கத்தைக் கொடுக்கக் கூடியதாகவும் மற்றொரு சமயம் ஆத்திரத்தை ஊட்டக் கூடியதாகவும் தென்படும்.

எங்கள் பஞ்சாயத்தில் வீட்டு வரியைத் தவிர மற்ற எந்தவிதமான வரியும் விதித்திருப்பதாகத் தெரியவில்லை. இந்த வீட்டு வரியும்கூட வீடு களின் உண்மையான மதிப்பைக் கொண்டு நிர்ணயம் செய்யப்படவில்லை என்பது உண்மை. இந்த வீட்டு வரியுடன் நூல் நிலைய வரி என்ற சிறியதொரு வரியும்கூடச் சேர்த்து வசூல் செய்யும் தீர்மானத்துடன் எல்லா வீடுகளுக்கும் 'நோட்டீஸ்' அனுப்பி யிருக்கின்றனர். எங்கள் கிராமத்தில் பஞ்சாயத்து நிர்வாகத்தின் கீழ் இதுவரைக்கும் எந்தவிதமான இலவச வாசகசாலைகளும் நடத்தப்படாமலிருக்கும் போது இந்த நூல் நிலையவரி எதற்கு என்று விளங்க வில்லை. இப் புதிய வரியை மக்கள் கொடுத்துவிட இணங்குகின்றனர். ஆனால் இவ்வரி வசூலான பிறகாவது ஒரு நூல் நிலையம் திறந்துவைத்து நடத்தினால் நல்லது.

எங்கள் கிராமத்து மக்கள் யாவரும் உடல் உழைத்து வாழ்க்கை நடத்தும் ஏழை விவசாயிகள். ஆகவே அவர்கள் வசிக்கும் சிறு சிறு ஓட்டு வில்லை வீடுகளுக்குத் தகுந்த வரியை நிர்ணயிக்காமல் மக்களின் சக்திக்கு மீறிய வரியைப் போட்டதால் அதை அவர்கள் கொடுக்க முடியாத நிலைமையில் இருக்கின்றனர்.

எங்களூர்ப் பஞ்சாயத்து மக்களுக்குச் செய்யத் திட்டமிடும் ஒவ்வொரு காரியத்துக்கும் சர்க்கார் அதிகாரிகள் மிகவும் சாதகமாக இருந்து காரியங்களைக் காலதாமத மின்றி முடித்து வருகின்றனர். இந்த ஓராண்டுக்குள் அனேக இடங்களுக்குக் குடி தண்ணீர் வசதி அளித்திருக்கின்றனர்.

எங்கள் கிராமத்து மக்கள் சுகாதார விஷயத்தில் பிற்போக்கானவர்கள். குப்பை கூளங்களை வீட்டுச் சுற்றுப்புறங்களில் தேங்க விட்டு ஊரை அழுக்குப்படுத்துகின்றனர். தவிர, கண்ட இடங்களில் மல ஜலம் கழித்து விடுகிறார்கள். ஆனதினால் ஊரில் துர் நாற்றம் தாண்டவமாடுகின்றது. இப்படி யிருக்கக் கிராம சுகாதார விஷயத்தில் இதுவரைக்கும் எங்கள் கிராமப் பஞ்சாயத்தினால் யாதொரு விதமான ஏற்பாடும் செய்யவில்லை.

ஒரு கிராமத்தின் தலைவரது செல்வாக்கும் நன் மதிப்பும் அக்கிராமத்து மக்களிடையே நிலைபெற்றிருக்க வேண்டுமானால், அப் பஞ்சாயத்தின் தலைவருக்கும், பொது ஜனங்களுக்கும் இடையே எப்போதும் நெருங்கிய தொடர்பு இருக்க வேண்டும். பஞ்சாயத்துத் தலைவரும் அங்கத்தினர்களும் தம் கிராமத்து மக்களுடன் அன்பாகப் பேசி அன்பாக நடக்கப் பழகிக் கொள்வது மிகவும் அவசியமாகும். ஏனெனில் "அன்பிலா ரெல்லாம் தமக்குரியர், அன்புடையார் என்பும் உரியர் பிறர்க்கு" என்பது பொய்யாமொழி அல்லவா!

தடுநாட்டி
19—6—54

கு. பி. காரி




# பாரதியின் வாக்குப் பலித்தது!

"பட்டங்கள் ஆள்வதும் சட்டங்கள் செய்வதும்
பாரினில் பெண்கள் நடத்த வந்தோம்"

என்ற பாரதியின் வாக்குப் பலித்து விட்டது.

எங்கள் கரிவலம் வந்த நல்லூர் பஞ்சாயத்து இரண்டாவது வகுப்பைச் சேர்ந்தது. 4—2—53ல் பஞ்சாயத்துத் தேர்தல் நடந்தது. அதில் ஒரு பெண்மணியைத் தலைவியாகத் தேர்ந்தெடுத்திருக்கிறோம். மற்றும் அங்கத்தினர்கள் ஏழு பேர். இரண்டு பேர் பெண்கள். ஐந்து அங்கத்தினர்கள் ஆண்கள். துணைத் தலைவர் பதவிக்கு ஒரு பெண் அங்கத்தினரும் ஒரு ஆடவரும் போட்டியிட்டுச் சம வோட்டுக் கிடைத்ததால் திருவுளச் சீட்டின் பேரில் துணைத் தலைவராகவும் ஒரு பெண்மணியே தேர்ந்தெடுக்கப் பட்டார். திருமதி பி. பிரமு அம்மாள் தலைவி. ஆ. வேலம்மாள் துணைத் தலைவி. மற்றோர் பெண் அங்கத்தினர். மீதி ஐந்து அங்கத்தினர்கள் ஆண்கள். இவர்கள் நிர்வாகத்தில் எங்கள் ஊர்ப் பஞ்சாயத்து நடந்து வருகிறது.

பஞ்சாயத்துத் தலைவியார், ஜாதி மதம் என்ற பிரச்னையும், பணக்காரர் ஏழை என்ற எந்த விதப் பாகுபாடும் இல்லாத வாறு நல்ல முறையில் நிர்வாகம் நடத்தி வருகிறார்கள். எங்கள் பஞ்சாயத்துச் சபை வ. உ. சிதம்பரம் வாசக சாலை என்ற பெயருடன் ஒரு நூல் நிலையம் ஆரம்பித்து நடத்தி வருகிறது. அதில் தினப் பத்திரிகை, வாரப் பத்திரிகை, மாதப் பத்திரிகைகள் முதலிய பல பத்திரிகைகளும் மற்றும் பல புத்தகங்களும் வாங்கிவைத்து ஆண், பெண், பள்ளி மாணவர்கள் எல்லோரும் தினந்தோறும் படிப்பதற்கு வசதி செய்திருக்கிறார்கள்.

சென்ற வருஷத்தில் சில கிணறுகளில் குடி தண்ணீர் கஷ்டமாக இருந்தது. தாசில்தார் அவர்களைப் பார்த்து 5, 6, கிணறுகளை ஆழப்படுத்துவதற்காகக் கிணறு ஒன்றுக்கு ரூ. 150 வீதம் இனும் மானியத் தொகை வாங்கிச் சில கிணறுகளை ஆழப்படுத்திக் குடி தண்ணீர்க் கஷ்டத்தை நீக்கி யிருக்கிறார்கள். பிரயாணப் போக்கு வரத்

துக்கு வேண்டிய வசதி செய்திருக்கிறார்கள். தெரு விளக்குகளுக்கு மின்சாரம் பொருத்த ஏற்பாடுகள் நடந்து வருகின்றன.

ஒரு பஞ்சாயத்து அங்கத்தினர் வீட்டுத் தீர்வைப் பாக்கி ரூபாய் 25ஐ வைத்துக் கொண்டு, தீர்வை செலுத்தாம லிருந்ததால் சட்டப்படி அங்கத்தினருக்குத் தீர்வை பாக்கி யிருப்பது சட்டத்துக்கு விரோத மென்று நேர்மையான முறையில் நோட்டீஸ்கள் கொடுத்து, பஞ்சாயத்து அங்கத்தினர் என்று தயை தாக்ஷண்யம் பார்க்காமல் அந்த அங்கத்தினரைப் பதவியிலிருந்து நீக்கி விட்டார்கள். மற்ற அங்கத்தினர்கள் தங்கள் கடமைகளைத் திருப்திகரமாகச் செய்து வருகிறார்கள்.

எங்கள் ஊரில் தொடர்ந்து 7, 8 வருஷங்களாக மழையில்லை. தவிரவும், மூந்திய நிர்வாகஸ்தர்கள் வீட்டுத் தீர்வை ரொம்பவும் பாக்கி வைத்து விட்டார்கள். 1948—49 முதல் உள்ள தீர்வை வசூல் செய்யக் கஷ்டமாக யிருப்பதால் புதுவரி ஒன்றும் ஏற்படுத்தவில்லை. வசூலான பணம் நல்ல முறையில் பொதுஜன நன்மைக்குகந்த காரியங்களுக்குச் செலவு செய்யப் படுகிறது.

எங்கள் பஞ்சாயத்திலிருந்து அனுப்பும் திட்டங்களுக்கு ரெவின்யூ அதிகாரிகள் அக்கறை காட்டுவதாகத் தெரியவில்லை. எங்கள் ஊர்ப் பஞ்சாயத்துக்குப் பாத்தியப்பட்ட கால்வாய் ஊருணி புறம்போக்கு நிலத்தை, மூந்திய நிர்வாகஸ்தர்கள் காலத்தில் பஞ்சாயத்து பில் கலெக்டர் ஒருவருக்குப் பட்டா செய்து கொடுத்து விட்டார்கள். கால்நடைப்பிராணிகள் தண்ணீர்குடிக்கவும் குளிப்பாட்டவும் கஷ்டமாக இருப்பதால் பஞ்சாயத்துக்குப் பாத்தியப்பட்ட ஊருணியைத் திரும்பவும் பஞ்சாயத்துக்கு மாற்றிப் பொது ஜனங்களுக்குச் சௌகரியம் செய்ய வேணுமென்று எங்கள் பஞ்சாயத்து சபையில் மனுக் கொடுத்தோம். தலைவியார் உடனே பஞ்சாயத்து சபை கூட்டி ஊருணியைப் பஞ்சாயத்துக்கு மாற்றிக் கொடுக்க வேணுமென்று தீர்மானம் போட்டு ரெவின்யூ அதிகாரிகளுக்கு அனுப்பினார்கள். நாளது வரை பதிலே இல்லை. சுமார் 15 வருஷ காலமாக உபயோக மற்ற முறையில் இருக்கும் கிராமச் சாவடியையும் பக்கக் காலி மனையையும் பஞ்சாயத்து ஆபீஸ் கட்டிடம், பார்க், ரேடியோ நிலையம் முதலியன கட்டுவதற்காக மாற்றிக் கொடுக்கும்படி கேட்டுத் தீர்மானங்கள் அனுப்பினார்கள். அதற்கும் ரெவின்யூ அதிகாரிகளிட மிருந்து பதிலே இல்லை எனத் தெரிகிறது. பொதுவாக எங்கள் பஞ்சாயத்துக்கு ரெவின்யூ அதிகாரிகளால் அனுகூல மில்லை என்று சொல்ல வேண்டி இருக்கிறது.

மற்றப்படி பஞ்சாயத்து நிர்வாகம் ரொம்பவும் அழகாக நடந்து வருகிறது.

கரிவலம் வந்த நல்லூர்
28—6—54

கே. கே. விந்தன்

அட்டைப்பட விளக்கம்

# அளவிலா ஆனந்தம்!

பூஜை வேளையில் கரடி புகுந்தாற் போல் அல்லவா இருக்கிறது இந்தத் தோழியின் செய்கை? அந்த மன்னனும் காதலியும் தனிமையாக இருந்து பேசிக் கொண்டிருக்கும் போது இந்தத் தோழி எங்கிருந்து வந்து சேர்ந்தாள்? வந்தவுடன் சிறுத்திக் கொள்ளாமல் அந்த மன்னனுடன் இவளே அல்லவா பேச ஆரம்பித்து விட்டாள்! அதன் பயனாகச் சற்று ஒதுங்கி ஊஞ்சல் கயிற்றைப் பிடித்துக் கொண்டு நிற்கும்படி செய்து விட்டாள் தலைவியை.

என்ன செய்வது? தோழியால் தன் உள்ளத்திலிருக்கும் உணர்ச்சியை அடக்கி வைத்துக் கொண்டு இருக்க முடியவில்லை. சொல்லித்தான் ஆகவேண்டி யிருக்கிறது.

அப்படி என்ன உணர்ச்சி? அதை அவளே சொல்லக் கேட்கலாம்:

"மன்னனே, நீ மிகவும் புகழ்படைத்தவன்தான். அவ்வளவு புகழுக்கும் தகுதியுடையவனா, அவ்வளவுக்கும் ஆதாரம் உண்டா என்ற ஐயம் இருந்தது. அது நீங்கி விட்டது. உன் புகழுக்கு இன்று ஆதாரம் கிட்டி விட்டது!

"இதோ இருக்கிறாளே, என் தலைவி! அவள் உன் பிரிவைத் தாங்காது உயிர் விடும் நிலையிலிருந்தாள். அவள் இன்று தன் உயிரைப் பெற்று விட்டாள்.

"என் தலைவியின் அழகிய கூந்தல் இத்தனை நாளும் ஒன்றுமே சுமக்காமல் இருந்தது. இனி பூக்களின் பாரத்தைச் சுமக்கும்!

"இதற்கெல்லாம் காரணம் என்ன தெரியுமா?

ஆக்கம் புகழ்பெற்றது
    ஆவி யிவள்பெற்றாள்
பூக்கள் குழற்கார்
    பொறைபெற்ற — மாக்கடல்சூழ்
மண்பெற்ற ஒற்றைக்
    குடையாய் வரப்பெற்(று)எம்
கண்பெற்ற இன்று களி!

—பழம் பாடல்

"கடல் சூழ்ந்த உலகை ஒரு குடையில் ஆளும் மன்னவனே! இன்று நீ வந்ததால் இவ்வளவும் நேர்ந்தன. அத்துடன் என் கண்கள் இன்று பெற்ற ஆனந்தம் இவ்வளவு அவ்வளவல்ல!" என்று தன் உள்ளத்தில் பொங்கிய மகிழ்ச்சியைப் பொழிந்து தீர்த்தாள்.

அருமையான பாடல். நமது சித்திரக்காரர் சரவணனின் இவ்விதழ் அட்டைச் சித்திரம் பாட்டுக்கு நல்ல விளக்கமாக அமைந்திருக்கிறது!

# துளி விஷம் – நல்ல விஷம்!

சில ஆண்டுகளுக்கு முன்னால் "வேலைக்காரி" என்ற தமிழ்ப் படம் வெளியாகித் தமிழ் நாட்டைக் கலக்கச் செய்தது. அதைப் பற்றிய வாதப் பிரதிவாதங்கள் நேயர்களுக்கு நினைவிருக்கலாம். அப் படத்தின் கருத்தைப் பற்றிய வரையில் கருத்து வேற்றுமைகள் பல இருந்தாலும், அதன் வெற்றி முதல்தரமான வெற்றி என்பதை அனைவரும் ஒப்புக் கொண்டார்கள்.

"வேலைக்காரி" படத்தை டைரக்ட் செய்து புகழ் பெற்ற திரு ஏ. எஸ். ஏ. சாமியின் புகழை மேலும் வளர்க்கக் கூடிய முறையில் "துளி விஷம்" என்னும் படம் இப்போது வெளியாகியிருக்கிறது.

நரசு ஸ்டுடியோவின் முதல் தயாரிப்பான இந்தப் படம் பல அம்சங்களில் முதல் தரமாகவும் அமைந்திருப்பது மகிழ்ச்சி தருகிறது.

* * *

"சாண்டில்யன்" எழுதிய மூலக் கதையிலிருந்து டைரக்டர் சாமி அமைத்துள்ள திரைக் கதை விறுவிறுப்பாகவும், நிகழ்ச்சிகள் நிறைந்ததாகவும், உணர்ச்சி வேகங்கள் ததும்பியதாகவும் விரைந்து செல்கிறது.

நாக நாட்டு மன்னன் வீரமார்த்தாண்டனுக்கும், மலை நாட்டு மன்னன் மலையமானுக்கும் ஆதிபத்திய வெறி காரணமாகப் பகை பிறந்தது.

நாடிழந்து, பதவியிழந்து, மகாராணி மகாதேவியுடனும், அவள் கையில் பாராளப் போகும் பச்சிளம் பாலகனுடனும் மலையமான் வெளியேறினான்.

ஐயங்கொண்ட தேவர் என்னும் சாந்த புருஷரின் ஆசிரமத்தில் குழந்தையையும் மனைவி மகாதேவியையும் விடுத்து, மலையமான் வனம் புகுந்து, பகைவனைப் பழி வாங்கும் நோக்கத்துடன் மலைக் குகையில் படை சேகரித்து வந்தான்.

தேவர், மகா தேவியையும் குழந்தையையும் அன்போடு ஆதரித்தார். சந்திரனுக்கு வாள் யுத்தம் முதலியனவற்றில் தேர்ச்சி அளித்து அவனைச் சுத்த வீரனாக்கினார். பிறகு அவனை நாக நாட்டுக்கு அழைத்துச் சென்று, வீரமார்த்தாண்டனைக் கண்டு பேசி, சந்திரனை நாக நாட்டுச் சேனைத் தலைவனாக்கி விட்டார். ராஜகுமாரி நாகவல்லிக்குக் கல்வி பயிற்றும் பொறுப்பை ஐயங்கொண்ட தேவர் தாமே ஏற்று நாக நாட்டிலேயே தங்கியும் விட்டார்.

சந்திரன் தற்செயலாக இளவரசி நாகவல்லியை நந்த வனத்தில் கண்டான். கண்களும் கண்களும் சந்தித்தன; அந்தச் சந்திப்பில் அரசிளங் குமரியின் கரிய விழிகள் காதல் கீதம் பாடின; அந்தக் காதல் கீதத்தின் கருத்தைச் சந்திரனின் விழிகள் விரித்துரைத்தன. எதுகையும் மோனையும்போல இருவர் இதயங்களும் ஒன்று பட்டன!



கற்பகநாட்டு மன்னன்

இனி, திரைக் கதையின் வேகமும் துளி விஷம் போல் விறு விறு என்று ஏறுகிறது.

கற்பக நாட்டு மன்னன் சூரியகாந்தன் நாக நாட்டு இளவரசி நாகவல்லியை நாயகியாக்கிக் கொள்ள விழைந்து நாகநாட்டுக்கு வருகிறான். நாகநாட்டு மன்னன் வீரமார்த்தாண்டன் தன் மகள் நாகவல்லிக்குத் தன் விருப்பம் போல் நாயகனைத் தேடிக் கொள்ளும் உரிமை அளித்து விட்டதாகவும், புதல்வியின் சுயதேர்வில் தான் தலையிட விருப்பமில்லை என்றும் தெரிவிக்கிறான்.

மன்னன் மகளுக்கு மாலையிடப் போகும் மணாளன், ஒரு மன்னனின் மைந்தனா என்னும் கேள்வியைச் சூரியகாந்தன் எழுப்புகிறான். ஐயப்பாட்டை அகற்றும் முகத்தால், 'மன்னனின் முடிவு இதுவே' என்று அடித்துக் கூறி விவாதத்தை முடித்துவைக்கிறான், வீரமார்த்தாண்டன்.

காதல் தேர்வில் தோற்ற கற்பக நாட்டுக் காவலன், நாகவல்லியின் உள்ளம் கவர்ந்த சந்திரன் யார் என்று கண்டு பிடிக்கும் முயற்சியில் தீவிரமாக இறங்குகிறான்.

ஒரு படக் கதையின் வெற்றிக்குக் காதல் எவ்வளவு அவசியமோ, அவ்வளவு அக்காதலின் வெற்றிக்கு ஒரு துணைக் காதலும் அவசியமாகும்.

அரண்மனையின் ஆடல் அழகி அங்கயற்கண்ணி மேற் கூறிய துணைக்காதல் தொண்டைத் துவக்கி வைக்கிறாள். சேனாபதி சந்திரனைக் காதலித்து, அவன் மீது காதல் பாணம் வீசுகிறாள். சந்திரன் அவள் காதலைப் புறக்கணிக்கிறான். இது சமயம் பார்த்து, கற்பக நாட்டு மன்னன் சூரியகாந்தன், சந்திரனுக்கும் இளவரசி நாகவல்லிக்கும் ஏற்பட்டிருந்த காதலைப் பற்றிக் கூறுகிறான். இந்தச் செய்தி அங்கயற்கண்ணியின் உள்ளத்தில் ஒரு துளி விஷமாக விழுந்து விறு விறு என்று ஏறி, அவனைப் பழிவாங்கும் பாவையாக மாற்றுகிறது.

சூரியகாந்தனாக நடிக்கும் சிவாஜி கணேசனின் பேச்சுத் திறனும் நடிப்புத் திறனும் ஒன்றையொன்று மிஞ்சப் பார்க்கின்றன. அவர் பேச்சில் ஒரு சமயம் கனல் பறக்கிறது; இன்னொரு சமயம், காதல் கொஞ்சுகிறது; மற்றொரு சமயம் வெறி புணர்ச்சி மிஞ்சுகிறது; எதுகையும் மோனையும் ஏற்ற இடங்களில் அமைந்து அவர் பேச்சு படம் பார்ப்பவர்களை இருந்த இடத்தை விட்டு எழுந்திருக்க வொட்டாமற் செய்கிறது; அப்படி மீறி எழுந்தவர்களை வீறு கொண்டு தள்ளி விழச் செய்கிறது.

சந்திரனாக நடிக்கும் திரு கே. ஆர். ராமசாமி நாடக மேடையிலும் வெள்ளித் திரையிலும் சிறந்த நடிகர் என்று முன்னமே புகழ் பெற்றவர். இந்தப் படத்தில் அவருடைய நடிப்புத் திறன் சிகரத்தை அடைந்திருக்கிறது. நந்த வனத்தில், நாகவல்லி

யுடன் நயந்து பேசும் காதலன்; அரச அவையில், கட்டவிழ்ந்த காட்டு மதயானையின் சீற்றங் கொண்ட தோற்றம்; வாள் போரில், பாய்ந்து மோதும் சிங்கம்; இவ்விதம் கே. ஆர். ராமசாமி எல்லா இடங்களிலும் சிறந்த முறையில் நடித்திருக்கிறார்.

சந்திரன், தன்னுடைய அன்னையை இரகசியமாகச் சந்தித்த மனிதன் தன் தந்தையேதான் என்பதை அறிந்ததும், அன்னையின் நடத்தையில் ஐயம் கொண்டது பற்றிப் பதறிக் கதறி "அம்மா! அம்மா!" என்று அலறும் கட்டம், படம் பார்ப்பவர்களை யெல்லாம் "அம்மம்மா! இது என்ன அபார நடிப்பு!" என்று வியக்கச் செய்யுமாறு அமைந்திருக்கிறது.



சேனாபதி சந்திரன்

வீர மார்த்தாண்டன் சந்திரனுக்கு மரண தண்டனை விதிக்கிறான். அவ்வமயம், சந்திரனுக்கும் கற்பக நாட்டு மன்னன் சூரியகாந்தனுக்கும் நடக்கும் சண்டமாருதம் போன்ற சொற்போர், படம் பார்ப்போர்களைத் திணறித் திக்குமுக்காடும்படி செய்து விடுகிறது.

சந்திரனுக்கு மரண தண்டனை என்றதும் இளவரசி நாகவல்லி தானும் மரணத்தை ஏற்க விரும்புகிறாள். மைந்தனின் மரணத்துக்குப் பின் வாழ விரும்பாத அன்னை மகாதேவியும் மரணத்தை வரவேற்கிறாள். இவர்களின் கோரிக்கைகளைத் துளி விஷம் தந்து பூர்த்தி செய்து வைக்கிறார், ஐயங்கொண்ட தேவர். படத்தின் ஆரம்ப முதல் பல அவிழ்க்க முடியாத முடிச்சுகள் தோன்றிக் கொண்டேயிருக்கின்றன. அந்த முடிச்சுகளையும் அவற்றின் காரணமாகக் கதையில் ஏற்பட்ட சிக்கல்களையும், தேவர் கொடுத்த துளி விஷம் நல்லபடியாக அவிழ்த்து எல்லாச் சிக்கல்களையும் விடுவிக்கின்றது. அந்தத் துளி விஷம் நல்ல விஷந்தான்!

நாகவல்லியாக நடிக்கும் ஸ்ரீமதி டி. கிருஷ்ண குமாரியின் நடிப்பு மிக இயற்கையாக அமைந்திருக்கிறது. இன்பம், துன்பம், சோகம், கோபம், தாபம், பயம், பரிவு, பிரிவு—இப்படியாகப் பல உணர்ச்சிகளுங் காட்ட வேண்டிய பாத்திரத்தை உணர்ந்து நடித்திருக்கிறார். மகாதேவி பாத்திரத்தில் நடித்திருக்கும் ஸ்ரீமதி எஸ். டி. சுப்புலக்ஷ்மியின் நடிப்புத் திறனைப் பல ஆண்டுகளுக்குப் பிறகு இப்படத்தில் பரிபூரணமாகக் காண முடிகிறது.



இளவரசி நாகவல்லி

மரணத்தை விரும்பித் துளி விஷம் உட்கொண்டவர்கள் அடைந்த கதியை வெள்ளித் திரையில் நேயர்கள் கண்டு களிப்பதே நலமாகும்.

ஆம், கதையின் முடிவு பெரிதும் களிப்பூட்டும் முடிவாகவே அமைந்திருக்கிறது.

அங்கயற் கண்ணியைக் கொலை செய்த பாதகன் சூரியகாந்தன் ஒரு தண்டனையும் இல்லாமல் தப்பிச் செல்வது மட்டும் களிப்பூட்டுவதற்குப் பதிலாக ஆத்திர மூட்டுகிறது.

படம் பதினோராயிரம் அடிக்கு மேலே நீண்டு விடுமோ என்ற அச்சத்தினால் தான் பெண் கொலை செய்த அந்தப் பாதகனைத் தப்ப விட்டிருக்க வேண்டும். இல்லா விடில், மனோகரன் படத்திலே செய்திருப்பது போல், கொலையுண்ட அங்கயற்கண்ணியின் ஆவியையாவது அவன் பேரில் ஏவி விட்டிருக்கலாம் அல்லவா! எத்தனை தான் எதுகை மோனையுடன் எரிமலை போல் கொதித்து இரைந்து பேசினாலும். பழிவாங்கும் விரதங் கொண்ட உருவமில்லா ஆவியிடமிருந்து தப்ப முடியாதல்லவா!

** ** **

இந்தத் "துளி விஷம்" என்னும் படத்தின் "திரைக் கதை", "வசனம்", "டைரக்ஷன்" ஆகிய மூன்று பொறுப்புகளையும் திரு ஏ. எஸ். ஏ. சாமி ஏற்றுக்கொண்டு மூன்றிலும் சிறந்த வெற்றி கண்டிருக்கிறார். நாடக மேடையிலும், பேச்சு மேடையிலும், வெள்ளித் திரையிலும் திரு சி. என். அண்ணாத் துரையினாலும் அவருடைய சீடர்களாலும் பிரபலமாகியுள்ள வன்மை வாய்ந்த தமிழ் நடையை இப் படத்தில் டைரக்டர் சாமி பூரண வெற்றியுடன் கையாண்டிருக்கிறார்.

படத்தில் பிரசார நோக்கம் எதுவும் இல்லை. கதையின் சுவை, பாத்திரங்களின் குண சித்திரம், நாடகப் பண்பு நிறைந்த நிகழ்ச்சிகள்,—இவையே பிரதானமான அம்சங்களாக அமைந்திருக்கின்றன.

அங்கங்கே ஆடல் பாடல் நிகழ்ச்சிகள் பொருத்தமாகவும் நல்ல முறையிலும் அமைந்து படத்துக்குச் சிறப்புத் தருகின்றன.

உணர்ச்சியும் உத்வேகமும் நிறைந்த இந்தப் படத்துக்குத் தமிழ் மக்களிடையே நல்ல வரவேற்பு இருக்குமென்று எதிர்பார்க்கலாம்.

# ஒரு யோசனை !


"நீங்கள் சௌக்கியமாயிருக்கேளா, ஸார்!"
"இல்லே, ஸார்' அசதிதான் என்னைப் பாடாய்ப் படுத்தறது முதுமை வந்துட்டதோன்னு பய மாயிருக்கு!"
"சோர்வு நீங்க ஏதாவது டானிக் சாப்பிடலாமென்றிருக்கேன்."
"இந்த வயசிலே சாப்பிடக் கூடாது, ஸார்"
"அப்படின்னா மலையாள நவரக்கிழி சிகிச்சை எடுத்துக்கலாமா?"
!! "வேண்டாம் ஸார்"
"காய கல்ப சிகிச்சை!?"
"ஊஹூம்!!"
"முதுமையும் அசதியும் உடனே உங்களை விட்டு விலகணும்னா, அதற்கு ஒரு யோசனை சொல்லறேன்!"
"சொல்லுங்கோ ஸார்!"
"'துள்ளி விழும்' படத்தை உடனே பார்த்துட்டு வாங்கோ! எல்லாம் நிவர்த்தியாயிடும்!"

# 'பெர்க்கின்ஸ்' டீஸல் இன்ஜின்களையே பொருத்துங்கள்

Perkins DIESEL ENGINES



**பஸ்களுக்கும்**

**லாரிகளுக்கும்**

ஏனெனில்



- ★ எவ்வித ரஸ்தாவுக்கும் பளுவுக்கும் ஏற்ற அதிக சக்தி
- ★ பராமரிப்புக்கிடையே கூடுதலான மைல்கள் ஓட்டம்
- ★ பெட்ரோல் இயந்திரத்தை விட மைலுக்கு மூன்றளு செலவில் சேமிப்பு
- ★ புகை ஏற்படாததோடு எண்ணை சேதாரமும் இல்லை
- ★ குறைந்த ரிப்பேர் செலவுடன் சுலபமான பராமரிப்பு
- ★ எவ்வித சிரமமின்றி எளிதில் இயங்குவது
- ★ ஓட்டுபவர்களுக்கு மிகவும் சௌகரியம்

உங்களுக்கு அதிக செலவின்றி லாபமளிக்கிறது

## ஸிம்ஸன் & கோ., லிமிடெட்

**மதராஸ் - 2**

பிராஞ்சுகள்: பெங்களூர்-உதகமண்டலம்-திருச்சிராப்பள்ளி-செகந்திராபாத் (Dn.)

இந்தியா முழுவதும் விற்பனையும் ஸர்விஸும் உண்டு

அருகாமையிலுள்ள உங்கள் 'பெர்க்கின்ஸ்' வியாபாரியை விசாரிக்கவும்




## 1. ராஜகேசரியின் போர்முரசு !

முற்காலத்தில் அரசர்கள் மாறுவேடம் பூண்டு இரவில் நகர்ச் சோதனை போவது வழக்கம் அல்லவா ? அதைப் போல கருங் காட்டின் மன்னன் சிங்கராஜா மிருகங் களின் குறைகளைத் தீர்க்கக் காட்டை வலம் வரத் தீர்மானித்தது. மாறு வேஷம் போட்டுக் கொள்ள விரும்பவில்லை ; இர வில் செல்லப் பிரியப் படவில்லை. ஆனால் பகலிலேயே சிங்க ராஜா காடு முழுதும் சுற்றி மிருகங்களின் குறைகளைக் கேட் டறிந்து அவற்றை நிவர்த்தி செய்து வந்தது. கருங் காட்டிலுள்ள மிருகங்க ளெல்லாம் சிங்க ராஜாவின் செயல்களைப் பாராட்டிப் புகழ்ந்தன.

அன்று வழக்கம் போல் சிங்க ராஜா காட்டை வலம் வந்து கொண்டிருந்த பொழுது மரங்கள் அடர்ந்த, மிருக அரவமே யில்லாத அந்தகார இடத்தில் ஏதோ அழும் குரல் கேட்டது. சிங்க ராஜா இதுவரை இவ்வாறு அழுகுரலைக் கேட்டதில்லை. அழுகை வந்த திசையை நோக்கிச் சிங்கராஜா வேகமாகச் சென்றது.

மலர்கள் பூத்துக் குலுங்கிய ஒரு மரத் தின் நிழலில் மூன்று அழகிய சிங்க ராஜகுமாரிகள் இருந்தன. அவைதான் விம்மி விம்மி அழுது கண்ணீர் பெருக்கிக் கொண்டிருந்தன.

சிங்க ராஜா அவற்றின் அருகில் சென்று, " நீங்கள் யார்? உங்களுடைய குறை என்ன? ஏன் விம்மி விம்மி அழு கிறீர்கள் ?'' என்று கனிவுடன் கேட்டது.

மூன்று சிங்க ராஜகுமாரி களில் மூத்த சிங்க ராஜ குமாரி தன் கண்ணீரைத் துடைத்துக் கொண்டு, " குட்டியிலேயே எங்களை ஒரு ராட்சதன் அபகரித்துத் தன் சுரங்கத்திலே சிறை வைத்திருந்தான். திடீர் என்று எங்கள் சுரங்கத் தில் தீப்பற்றிக் கொண்டது. தூங்கிக் கொண்டிருந்த ராட்சதன் தீயிலே இறந்து போனான். நாங்கள் தீயி லிருந்து சிரமப்பட்டுத் தப்பி வெளியில் வந்தோம். இக் கனுந்தகாரக் காட்டிலே எங் களுக்கு வழியே தெரிய வில்லை !'' என்று கூறியது.

" அடாடா ! உங்கள் உடம்பெல்லாம் நெருப்பில் வெந்து போயிருக்கின்ற னவே ?...என் அரண்மனை வைத்தியரைக் கொண்டு உங்கள் வெந்த புண்ணுக்கு மருந்து வைத்துக் கட்டச் சொல்கிறேன்,வாருங்கள்!'' என்று கூறியது கருங் காட்டுச் சிங்க மன்னன்.

" உங்கள் உதவிக்கு நன்றி ! ஆனால் எங்களால் உங்களுக்கு எவ்வளவு சிரமம்?'' என்று எடுத்துக் கூறியது மூன்று ராஜ குமாரிகளில் சிறியதும் அழகு நிறைந் ததுமான பலாக்காட்டு ராஜகுமாரி.

" எனக்குப் பிறருக்கு உதவி செய்வதே ஆனந்தம் கொடுக்கிறது. அரண்மனைக்கு வந்தால் உங்களுக்கு வேண்டிய உணவுப் பொருள் தருகிறேன் !''

" இதற்கு எங்களால் என்ன பிரதி உப காரம் செய்ய முடியும்?'' என்று ஆனந்தத் தில் கூத்தாடியது செங்காட்டு ராஜகுமாரி.

" ஏன்? நம்மில் ஒருத்தி சிங்க ராஜாவை மணந்து கொண்டால் என்ன ?'' என்று கேட்டது புலிக்காட்டு ராஜகுமாரி.

" ஆம் ! நல்ல யோசனை. ஆனால் சிங்க ராஜாவுக்கு நம்மில் ஒருவரை மணம் செய்து கொள்ளப் பிடிக்க வேண்டுமே ?'' என்று கூறியது செங்காட்டு ராஜகுமாரி.

" உங்களுக்கு விருப்பமிருந்தால் எனக்கு ஆட்சேபணை யில்லை !'' என்று பதிலளித் தது கருங்காட்டுச் சிங்க மன்னன்.

" பேஷ் ! சரியான யோசனை ! ஆனால் எங்களில் யாரை, எப்படித் தேர்ந்தெடுத் துக் கொள்வீர்கள் ? ஒரு போட்டி ஏற் படுத்தி அதில் வெற்றி பெற்றவளை மணந்து கொள்கிறீர்களா ?'' என்று கேட் டது புலிக்காட்டு ராஜகுமாரி.

" எனக்குப் போட்டி என்றால் சிறிதும் பிடிக்காது '' என்று கம்பீரமாக எடுத்துக் கூறியது கருங்காட்டு ராஜகேசரி.

"அப்படியானால் எப்படி ஒருவரைத் தேர்ந்தெடுப்பீர்கள்?'' என்று கேட்டது செங்காட்டு ராஜகுமாரி.

"முதலில் நான் கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லுங்கள். உங்களுக்கு என்னென்ன வித்தைகள் தெரியும்?'' என்று வினவியது மிருக மன்னன்.

"எனக்குப் பாடத் தெரியும்!'' என்றது செங்காட்டு ராஜகுமாரி.

"எனக்கு மந்திர வித்தைகள் தெரியும்'' என்று கூறியது புலிக்காட்டு ராஜகுமாரி.

"எனக்கு எந்த வித வித்தையும் தெரியாது!'' என்று பளிச்சென்று பதிலளித்தது பலாக்காட்டு ராஜகுமாரி.

சிங்க ராஜா மூன்று ராஜகுமாரிகளையும் ஒரு தடவை கூர்ந்து நோக்கி விட்டு, "பலாக்காட்டு ராஜகுமாரியையே நான் மணந்து கொள்ளப் போகிறேன்!'' என்று தன் முடிவைக் கூறியது மிருக ராஜா.

அதைக் கேட்ட மூன்று ராஜகுமாரிகளுக்கும் வியப்பு ஏற்பட்டது.

"அசட்டு ராஜகுமாரியையா தாங்கள் தேர்ந்தெடுத்தீர்கள்?'' என்று வினவின செங்காட்டு ராஜகுமாரியும், புலிக்காட்டு இளவரசியும்.



"ஆமாம்! உங்களுக்கு வித்தைகள் தெரியும். நீங்கள் பிழைத்துக் கொள்வீர்கள். ஆனால் பலாக்காட்டு ராஜகுமாரிக்குத்தான் பிழைக்க வழி தெரியாது. திக்கற்ற அவளை ஏற்று உதவி புரிவதுதான் சாலச் சிறந்தது என்று கருதியுள்ளேன். உங்களுக்குச் சம்மதந்தானே?'' என்று கேட்டது கருங்காட்டு மன்னன்.

இரு ராஜகுமாரிகளும் பொறாமையினால் பதிலளிக்க வில்லை. இரண்டும் முகத்தைத் தூக்கி வைத்துக் கொண்டன. அவற்றின் கண்கள் கலங்கி விட்டன. ஆனால் பலாக்காட்டு ராஜகுமாரியோ அடைந்த ஆனந்தத்துக்கு அளவில்லை.

சிங்க ராஜா, "வாருங்கள்! அரண்மனைக்குப் போகலாம்!'' என்று கூறி மூன்று ராஜகுமாரிகளையும் வரவேற்றது.

கருங்காட்டு மன்னன் முன் செல்ல, அதற்குப் பின்னால் பலாக்காட்டு ராஜகுமாரி மலர்ந்த முகத்துடன் சென்றது. மற்ற இரு ராஜகுமாரிகளும் வேண்டா வெறுப்புடன் பின் தொடர்ந்தன.

கருங்காட்டு மன்னனுக்கு மரங்கள் பூமாரி சொரிந்து மரியாதை தெரிவித்தன. பறவைகள் பாடின. வண்டினங்கள்பறவைகளின் பாட்டுக்குச் சுருதி கூட்டின.

வெற்றிக் களிப்புடன் வீர நடை போடும் சிங்க ராஜாவுக்கு அருகில் நடந்து சென்ற பலாக்காட்டு ராஜகுமாரி கர்வத்துடன் ஒரு தடவை மற்ற சிங்க ராஜகுமாரிகளைப் பார்க்கத் திரும்பியது. ஆனால் அவை களைக் காணவில்லை!

"அரசே! இரண்டு ராஜகுமாரிகளையும் காணோம்!'' என்று அலறியது பலாக்காட்டு ராஜகுமாரி.

"ஓஹோ! கோபத்தினால் ஓடி விட்டனவா? சரி! அவை தாமாகவே நம் அரண்மனைக்கு வந்து சேரும். கவலைப் படாதே!'' என்று கூறிவிட்டு முன்னேகிச் சென்றது கருங்காட்டு ராஜா. அதைப் பின்தொடர்ந்தது பலாக்காட்டு ராஜகுமாரி.

அரண்மனையில் ராஜகுமாரிக்கு விருந்தும் கேளிக்கைகளும் தடபுடல் பட்டன. நல்ல நாளில் பலாக்காட்டு ராஜகுமாரியைக் கருங்காட்டு மன்னன் மணந்து கொண்டது. கருங்காட்டு மிருகங்களெல்லாம் திருமணத்தைக் கோலாகலமாக நடத்தி வைத்தன. சிங்க ராஜாவின் கல்யாணத்தில் இசை விருந்துகளும், சுவை விருந்துகளும், வாண வேடிக்கைகளும் பிரமாதப்படக் கேட்கவா வேண்டும்? கல்யாண கோலாகலத்தில் மற்ற இரு ராஜகுமாரிகளையும் அவை மறந்து விட்டன.

வருஷம் ஒன்று வேகமாகக் கழிந்தது. அன்று சிங்கராஜா ராணி சகிதம் தர்பார் மண்டபத்தில் கொலு வீற்றிருந்தது. மந்திரி நரியும் மற்ற அரண்மனை அதிகாரிகளும் தத்தமக்குரிய ஆசனங்களில் கம்பீரமாக அமர்ந்திருந்தன.

அச் சமயம் தர்பார் மண்டப வாயில் காக்கும் புலி ஓடி வந்து, "ராஜகேசரியே! தங்களை நாடி மலைக்காட்டிலிருந்து ஒரு தூதுவன் வந்திருக்கிறான். உடனே பார்க்க வேண்டுமாம்!'' என்று கூறியது.

"சரி! உடனே வரச் சொல்!'' என்று இடி முழக்கக் குரலில் கட்டளையிட்டது சிங்கராஜா. தர்பார் மண்டபத்தில் குழுமியிருந்த அத்தனை மிருகங்களின் பார்வையும் வாசலையே நோக்கியிருந்தன.

மலைக்காட்டுத் தூதுவக் கரடி விரைப்பாகத் தர்பார் மண்டபத்தினுள் நுழைந்தது. அரசபீடத்தில் அமர்ந்திருந்த கருங்காட்டு மன்னனுக்கு வணக்கம் செலுத்தியது. தர்பார் மண்டபத்திலுள்ள மிருகங்களெல்லாம் அது சொல்லப் போகும் செய்தியை மிகுந்த ஆவலுடன் எதிர்பார்த்தன.

# தேய்ந்து போன டயர்களிலிருந்து புதிய மைலேஜ்!



தேர்ந்தெடுங்கள் **டயர்ஸோல்ஸை**



- அமைதியான ஓட்டம்
- அதிக மைலேஜ்
- நிச்சயமான "டிரட்" பரிசுத்தம்
- ரஸ்தாவில் அழுத்தமான பற்றுதல்
- சமனான டயர் பரப்பு

ஆகியவற்றிற்கு

## டயர்ஸோல்ஸ்

குறைந்த செலவில் மீண்டும் புது டயர் மைலேஜ் பெற

**ஸ்டேன்ஸ் மோட்டார்ஸ் (ஸவுத் இந்தியா) லிமிடெட்,**

"டயர்ஸோல்ஸ் டிபார்ட்மெண்ட்"

பாக்டரிகள்:
கோயமுத்தூர், மகராஸ், கோட்டயம், பெங்களூர், கல்கத்தா
ஆகிய இடங்களில்.

EP

ஒவ்வொரு நகரிலும் ஒவ்வொரு "டயர்ஸோல்ஸ்" டீலர் உண்டு.

மலைக்காட்டிலிருந்து வந்த தூதுவக் கரடி சிங்க ராஜாவுக்கு அருகில் வந்து நின்று, "கருங்காட்டு மன்னனே! எங்கள் ராணி செங்காட்டு இளவரசியை நீ அவமானப் படுத்தி விட்டாயாம். அவள் காலில் விழுந்து நீ மன்னிப்புக் கேட்கா விட்டால் மலைக்காட்டுப் படைகளைப் போரில் சந்திக்கலாம். இது எங்கள் மன்னரின் கட்டளை" என்று கூறியது.

"அரசே! என் சிநேகிதை என்மேலுள்ள சினத்தினால்தான் மலைக்காட்டு மன்னனை மணந்து கொண்டு நம்மீது பழி தீர்த்துக் கொள்ள நினைக்கிறாள் போலும்!" என்று சிங்க ராணி வருத்தத்துடன் கூறியது.

"கவலைப்படாதே! கருங்காட்டு மன்னன் இந்தப் பயமுறுத்தலுக்கெல்லாம் பயந்து விட மாட்டான். போரிலேயே அவனை வென்று என் காலடியில் விழுந்து மன்னிப்புக் கேட்கச் செய்கிறேன், பார்" என்று கர்ஜனை புரிந்தது சிங்கராஜா.

போர் என்ற சொல்லைக் கேட்டதும் தர்பார் மண்டபத்திலுள்ள மிருகங்களுக்கெல்லாம் பூரிப்பு ஏற்பட்டது.

"மலைக்காட்டு மன்னனைப் போரில் சந்திக்கிறேன்!" என்று கூறித் தூதுவக் கரடியைச் சிங்க ராஜா அனுப்பி வைத்தது.

நல்ல நாளில் கருங்காட்டு மன்னனின் தலைமையில் யானைப் படைகளும், புலிப் படைகளும், குதிரைப் படைகளும் மலைக் காட்டை நோக்கிச் சென்றன.

ஒருநாள் பகல் முழுவதும் பயணம் செய்து கருங்காட்டு ராஜாவின் படை மலைக் காட்டின் எல்லையை யடைந்தது. அப்பொழுது நன்றாக இருட்டி விட்டது. வெகு தூரம் நடந்து வந்த களைப்பினால், இரவு இளைப்பாறி விட்டு மறுநாள் காலையில் மலைக்காட்டை முற்றுகையிடச் சிங்க ராஜா தீர்மானித்தது. மற்ற மிருகப் படைகளும் அந்த யோசனையை முழு மனதுடன் ஆமோதித்தன. (தொடரும்)

# தலைநகரில் கலைவிழா

கல்கியின் 'பொய்மான்கரடு', திரைப்படத்தில் 'பொன் வயல்' என்ற நாமகரணத்துடன் வெளி வந்தது. அதில் திரு சுத்தானந்த பாரதியாரின் "சிரிப்புத்தான் வருகுதையா" என்ற சாஹித்யம் கொண்ட பண்ணுக்கு அபிநயம் பிடிக்கும் அரிய சந்தர்ப்பம் குமாரி ஜி. சுசீலாவுக்குக் கிடைத்தது. அதிலிருந்து 'பொன் வயல் சுசீலா' என்ற பெயரும் நிலைபெற்று விட்டது.



வழுவூராரின் சிஷ்யர் பழையனூர் கோபால கிருஷ்ணனின் திறமையான சிட்சையில் குமாரி சுசீலா எவ்வளவு பயனடைந்திருக்கிறார் என்பது சென்ற ஞாயிறன்று புது தில்லி தென்னிந்தியக் கழகத்தின் (The South India Club) ஆதரவில் கனம் ராதாகிருஷ்ணன் அவர்களின் தலைமையில் தேசிய பௌதிக ஆராய்ச்சி நிலையத்தில் நடந்த நடன விழாவின் போது தெரிய வந்தது.

'ஐந்து நிமிஷம் இருந்து விட்டுப் போகிறேன்' என்று வந்த கனம் ராதாகிருஷ்ணன் முப்பது ஐந்து நிமிஷங்கள் இருந்து விட்டுப் போனார். இரண்டரை மணி நேர நிகழ்ச்சி. நிகழ்ச்சி தமக்கு மகிழ்ச்சி அளித்ததாகச் சொன்னார்.

குமாரி சுசீலாவின் நாட்டியத்தில் விறுவிறுப் பிருக்கிறது. அபிநய தெளிவுகள் சௌஜன்யமாய் வருகின்றன. சிரமமான அடவுகள் செய்யும் போதுகூட முகத்தில் புன்சிரிப்பு தவழ்ந்து கொண்டே யிருக்கிறது. தீர்மானங்கள் தொகுக்கப்பட்ட ஜதிகளில் நிச்சயம் இருக்கிறது.

'காணக் கண் கோடி வேண்டும்' என்ற சிவன் பாடலை வர்ணமாக்கி ஆடப் பட்டது. பஞ்ச நடையையும் கையாண்டு சபையோரைப் பிரமிக்கச் செய்து விட்டார். பாரதியாரின் "சின்னஞ் சிறு கிளியே" என்ற பாடலுக்கு அபிநயமும், கல்யாணி தில்லானாவும் முறையே நன்றாயிருந்தன. தில்லானாவில் பல இடங்களில் மிருதங்கம் மிஸ்ர நடையிலும், நாட்டியம் சதுஸ்ர நடையிலும் ஜதிகள் தொகுத்து, சமத்தில் சேருமிடத்தில் ஒரு பளாங்கு கொடுத்து எடுத்தது மிகவும் எடுப்பா யிருந்தது.

தேசிய பௌதிக ஆராய்ச்சிக் கழகத்தில் நடந்த வைபவத்துக்கு வந்தவர்களில் பாதிக்குமேல் வெளி நாட்டு ஸ்தானீகர்களும் அவர்கள் குழுவினரும். டிக்கட் வாங்கின ஒவ்வொருவருக்கும் இடம் போட்டு வைத்திருந்தது; நாற்காலிகளில் நம்பர் போட்டிருந்தது; டிக்கட்டிலும் நம்பர் போட்டிருந்தது. குளறுபடி யில்லாமல் "நான் முந்தி" "நீ முந்தி" என்று இல்லாமல் காதும் காதும் வைத்தாற்போல் அமைதியாகவும் கன கச்சிதமாயும் நடந்தது. இரண்டாம் நாள் சத்திய மூர்த்தி ஞாபகார்த்த மஹாலிலும் அவ்வாறே ஒழுங்காக ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன.

தென்னிந்தியக் கழகத்தின் முக்கிய நிர்வாகஸ்தர்களுக்கு எங்கள் மட்டற்ற மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம். —சுப்புடு



ஆசிரியர்
கல்கி
எழுதும்
அமர தாரா
சமூகத் தொடர்கதை
அன்னை தந்தையை இழந்த அநாதைப் பெண் இந்துமதி; வாழ்க்கையில் வெற்றியின் சிகரத்தைக் காண்கிறாள்; புகழும் செல்வமும் சுகபோகமும் அவள் காலடியில் கிடக்கின்றன!
அவ்வளவையும் ஒருநாள் அடித்த வாழ்க்கைப் புயலில் இழந்து விடுகிறாள்; துன்பக் கடலில் விழுந்து தவிக்கிறாள்!
இந்த உலகில் வாழும் மனிதர்களிலே அன்பே உருவமான அமரர்களும் உண்டு, இரக்கமென்பதறியாத அரக்கர்களும் உண்டு என்று காண்கிறாள்.
அந்தப் பெண்மணியின் அன்பும் இன்பமும் பெருமிதமும் பெருந் துயரமும் ததும்பும் வாழ்க்கை வரலாறுதான் அமர தாரா!
செப்டம்பர்
5உ
ஆரம்பமாகிறது

# சக்கரவர்த்தித் திருமகன்

ராஜாஜி

## 17. யுவ ராஜ்யம்

**ப**ன்னிரண்டு ஆண்டுகள் ஆனந்தமாக ராமனும் சீதையும் அயோத்தியில் சுகம் அனுபவித்தார்கள். இனி, உலகில் மக்கள் படும் இடையூறுகள், துயரங்கள், கோபதாபங்கள், — எல்லாவற்றையுமே பகவானும் ஈசுவரியும் நேராக ஊனுடலில் அனுபவிக்கப் போகிறார்கள். 'எந்த அவதாரம் எடுக்கிறேனோ அந்த அவதாரத்துக்குரிய தேகமும் உணர்வுமாகத்தான் என் திருவிளையாடல் நடைபெற்று வரும்' என்பது பகவானே சொல்லிய விளக்கம்.

தன்னுடைய ஊன் உயிர் உணர்வில் மற்ற மக்களைப் போல் துன்பப்பட்டு இமையோர் இடுக்கண் காத்த சக்கரவர்த்தித் திருமகன் யார்? எங்கும் எதிலும், உள்ளும் புறமும் உள்ள லோக நாதனே! - இதைப் பெரியோர் அறிவார் என்று விளக்கிச் சொல்லிக் கவிச் சக்கரவர்த்தி கம்பர் அயோத்தியா காண்டம் ஆரம்பிக்கிறார்.

வானின்(று) இழிந்து வரம்பிகந்த
  மாபூ தத்தின் வைப்பெங்கும்
ஊனும் உயிரும் உணர்வும்போல்
  உள்ளும் புறத்தும் உளனென்ப
கூனும் சிறியகோத் தாயும்
  கொடுமை இழைப்பக் கோல்துறந்து
கானும் கடலும் கடந்திமையோர்
  இடுக்கண் காத்த கழல்வேந்தை

*        *        *

**நா**ன்கு புத்திரர்களிடமும் தசரதனுக்கு மிகப் பிரியம். ஆயினும் ராமனிடத்தில் அதிகப் பிரியம் என்றே சொல்லலாம். அந்தப் பிரியத்துக்குத் தகுந்த ராஜ லக்ஷணங்களும் சீலமும் ராமனிடமிருந்தன. கௌசல்யா தேவியோ, இந்திரனைப் பெற்ற அதிதியைப் போல் ராமனை மகனாக அடைந்து சொல்லுக் கடங்காத பெருமிதத்தை அனுபவித்து வந்தாள்.

சக்கரவர்த்தித் திருமகனுடைய குணங்களை எடுத்துக் காட்டி வால்மீகி பக்கம் பக்கமாக அடுக்கி யிருக்கிறார். ராம குணங்களாகிய சமுத்திரத்தி லிருந்து எவ்வளவு எடுத்துக் குடித்தாலும் முனிவருக்குத் திருப்தி இல்லை. தாமே சொல்லுவதாகவும், தசரதன் கண்டு அனுபவிப்பதாகவும், ஜனங்கள் அவனைப் பற்றிப் புகழ்வதாகவும், இன்னும் இவ்வாறு பல துறைகளில் பல இடங்களில் ராமனுடைய குணாதிசயங்களை எடுத்துக் காட்டியிருக்கிறார். வட மொழியில் எழுத்துச் சிக்கனம் அதிகம். அப்படியாயினும் பக்கம் பக்கமாக நிறைந்து கிடக்கிறது. மக்களுக் கிருக்கவேண்டிய நற்குணங்கள் லக்ஷணங்கள் இவையனைத்தும் ராமனிடமிருந்தன என்பது முனிவருடைய கருத்து. அந்தக் குணங்களைப் பற்றிப் படித்தும் கேட்டும் மக்கள் மேன்மை யடைவார்கள் என்று கருதி வால்மீகி ரிஷி ராமனுடைய குணாதிசயங்களை அடிக்கடி மிக விரிவாகப் பாடி யிருக்கிறார்.

*        *        *

**ரா**மனுடைய திருமேனியழகு, பராக்கிரமம், உள்ளத்தின் தூய்மை, வாழ்க்கையில் சீலம், இரக்கம், பேச்சினிமை, சாந்தம், நிறைந்த அறிவு, இவற்றுடன் அபூர்வ தேக பலம், வியாதியற்ற சரீரம், ராஜ்ய பரிபாலனத்துக்குரிய நீதி சாஸ்திரங்களில் பயிற்சி இவைகளை யெல்லாம் கண்டு ஜனங்கள் ராமன்

எப்போது அரசனாவான் என்று விரும்பி எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். தசரதன் இதை நன்றாய் அறிவான். ஆனபடியால் தன் முதிய வயதைக் கருத்தில் கொண்டு ராமனுக்கு யுவராஜ்ய பட்டாபிஷேகம் செய்து விட்டு அவனிடம் ராஜ்ய பரிபாலனத்தை ஒப்புவித்துவிட விரும்பினான். இதை ஒரு நாள் மந்திரிகளிடத்தில் சொல்லி ராஜ சபையைக் கூட்டினான்.

ரிஷிகளும் அறிஞர்களும் அயோத்தி நகரத்து சிரேணித் தலைவர்களும் பல தேசங்களின் அரசர்களும் தசரதன் கூட்டிய ராஜ சபைக்கு வந்து அவரவர்களுக்குரிய ஆசனங்களில் உட்கார்ந்தார்கள். கிரமப்படி எல்லாரும் அமர்ந்த பின் தசரதன் எழுந்து பேசினான். துந்துபி நாதம் கொண்ட அவனுடைய குரல் மேக கர்ஜனைபோல் கம்பீர பிரதித்துவனியோடு சபா மண்டபத்தைப் பூரித்தது. தசரதன் முகத்தில் ராஜ லக்ஷண காந்தி ஜொலித்தது. அவன் பேச்சு, பொருள் செறிந்து, கேட்போர் மனத்தைக் கவர்ந்தது.

"என் முன்னோர்களைப் போலவே நானும் இந்த ராஜ்யத்தைப் பெற்ற குழந்தையைப் போல் போற்றி வந்தேன். சோம்பலின்றி மக்களுக்காக உழைத்து வந்தேன். இப்போது என் உடல் மூப்பின் காரணம் தளர்ந்து போயிருக்கிறது. என் மூத்த மகனை யுவராஜனாக நியமித்து ராஜ்ய பாரத்தை அவன் மேல் வைத்து விட்டு நான் ஓய்வு பெற விரும்புகிறேன். என் முன்னோர்களின் வழியைப் பின் பற்றி நானும் மிகுதியுள்ள என் வாழ்நாளை வனத்தில் கழிக்க வேண்டுமென்று ஆசைப்படுகிறேன்.

"என் மூத்த மகன் ராமன் ராஜ்ய பாரத்தை என்னைப் போலவே நன்றாகத் தாங்குவான். அதற்கு வேண்டிய எல்லாக் குணங்களும் அவன் பெற்றிருக்கிறான். ராஜ சாஸ்திர நிபுணன். நீதி சாஸ்திரமும் நன்றாக அறிந்தவன். சத்துருக்களின் பலத்தை அடக்கும் வீரமும் சக்தியுமுடையவன். என் பாரத்தை அவன் தோளின் மேல் வைத்து விட்டு இராஜ்யத்தின் க்ஷேமத்தைப் பற்றி நான் கவலையற்றிருக்க விரும்புகிறேன். சபையிலுள்ள பெரியோர்களும் அரசர்களும் மகா ஜனங்களும் அனுமதிப்பார்கள் என்று எதிர்பார்க்கிறேன். என் யோசனை தவறாக இருந்தால் சொல்லுவீர்களாக" என்றான்.

* * *

அரசனுடைய பேச்சைக் கேட்டதும் சபையில் மகிழ்ச்சியைக் குறிக்கும் சப்தம் அலையலையாகக் கிளம்பிற்று. ராமனை யுவராஜாவாக்குகிறேன் என்கிற பேச்சைக் கேட்டதும் கருமேகத்தைக்






கண்ட மயில்கள் நர்த்தனம் செய்து மகிழ்வது போல "அப்படியே செய்வீர்" "அப்படியே செய்வீர்!" என்று சபையில் நாலா பக்கத்திலிருந்தும் கூக்குரல் எழுந்தது. அந்தணர்களும், சேனைத் தலைவர்களும், நகரத்துச் சிரேஷ்டர்களும், கிராமங்களிலிருந்து வந்திருந்த ஜனபதத் தலைவர்களும் எல்லாரும் "ராமனுக்கு யுவராஜ அபிஷேகம் செய்து ராஜ காரியங்களை அவனிடம் ஒப்புவிப்பதை நாங்கள் அனைவரும் விரும்புகிறோம்" என்று ஏகோபித்து ஆமோதித்தார்கள்.

இதைக் கேட்டு அரசன் மறுபடியும் பேசலானான். "நீங்கள் கொடுத்த அபிப்பிராயத்துக்குக் காரணங்கள் காட்டாமல், நான் சொன்னதை அப்படியே ஒப்புக்கொண்டுவிட்டதில் எனக்குத் திருப்தியில்லை. பெரியோர்கள் விஷயங்களை விளக்கிப் பேச வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்" என்று சொன்னான்.

அப்போது சபையில் பலர் எழுந்து இராமனுடைய குணாதிசயங்களையும் ராஜ்ய பாரம் தாங்கும் தகுதியையும் விஸ்தாரமாக எடுத்துக் காட்டினார்கள். அதைக் கேட்கக் கேட்க அரசனுடைய உள்ளம் ஆனந்தத்தில் மூழ்கிற்று. முடிவில் "தாமதம் செய்ய வேண்டாம். உடனே ராமனுக்குப் பட்டாபிஷேகம் செய்வீர்" என்று ஜனங்கள் யாவரும் ஒருமிக்க நின்று கைகூப்பிக் கேட்டுக் கொண்டார்கள்.

"என் அன்பார்ந்த பிரஜைகளே! நீங்கள் சொல்லுவதைக் கேட்டு நான் எல்லை கடந்த மகிழ்ச்சி அடைந்தேன். அப்படியே செய்வேன். யுவ ராஜ்ய பட்டாபிஷேக மங்கள காரியம் கிரமப்படி நடைபெறும்" என்றான் அரசன்.

* * *

**வ**சிஷ்டர், வாமதேவர் முதலிய பெரியோர்களைப் பார்த்துத் தசரதன், "இது சித்திரை மாதம். மங்களமான காலம். வனங்களெல்லாம் பூத்து அழகாக விளங்கும் பருவம். அபிஷேகத்துக்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளும் செய்யுங்கள்" என்று சொன்னான்.

இவ்வாறு உத்தரவிட்டதும் ஜனக் கூட்டத்திடையே பெரிய சந்தோஷ ஆரவாரம் பொங்கிற்று.

* * *

**ம**ன்னனுடைய உத்தரவின் பேரில் அந்தரங்க அமாத்தியனான சுமந்திரன் ராமனை அழைத்து வரச் சென்றான். ராமன் விஷயம் தெரியாதவனாகத் தந்தையின் முன்னால் வந்து நின்றான். பட்டாபிஷேக நிச்சயத்தைப் பற்றி அரசன் சொன்னதைக் கேட்டு, "தங்கள் ஆணைப்படி நடக்க நான் கடமைப் பட்டவன்" என்றான்.

"உனக்கு நான் சொல்ல வேண்டியது ஒன்றுமில்லை. நீ குணவான். ஜனங்கள் எல்லாரும் உன்னை விரும்புகிறார்கள். இனி நீ முன்னைவிட அதிகமான வினயத்துடனும் ஜாக்கிரதையுடனும் நடந்து கொண்டு எல்லா பாக்கியமும் புகழும் அடைவாயாக" என்று அரசன் மகனை ஆசீர்வதித்தான். ராமனும் தன் இருப்பிடம் திரும்பினான்.

* * *

**ம**றுபடியும் அரசன் ஏதோ யோசித்தவனாக "ராமனை அழைத்து வா!" என்று சுமந்திரனுக்கு உத்தரவிட்டான். "இதென்ன காரணம்? எதற்காகச் சக்கரவர்த்தி மறுபடியும் என்னை வரச் சொன்னது?" என்று ராமன் கேட்டான்.

"எனக்குக் காரணம் தெரியாது. அரசன் அழைத்து வரச் சொன்னதுதான் எனக்குத் தெரியும்" என்று சொன்னான் சுமந்திரன்.

'யுவராஜ்ய பட்டாபிஷேக விஷயத்தில் மந்திராலோசனை செய்து உசித

அனுசித சந்தேகம் ஏதாவது ஏற்பட்டிருக்கலாம். எப்படியானாலும் சரியே; தான் அவசரப்பட வேண்டியதில்லை' என்பது ராமனுடைய எண்ணம். ராஜ்யாதிகாரம் உடனே வகிக்க வேண்டும் என்று ராமனுக்கு ஆசை இருக்கவில்லை. அதைக் கடமையாகவே பாவித்தான். அரசன் ஒப்புக் கொள்ளும்படி சொன்னால் சரி, இல்லா விட்டால் வேண்டியதில்லை என்பது அவன் கருத்து.

கம்பர் பாட்டும் இதை எடுத்துக் காட்டுகிறது.

> **தாதை அப்பரி(சு) உரை செயத்**
> **தாமரைக் கண்ணன்**
>
> **காதல் உற்றிலன் இகழ்ந்திலன்**
> **கடன் இதென்(று) உணர்ந்தும்**
>
> **'யாது கொற்றவன் ஏவிய(து)**
> **அது செயல் அன்றோ**
>
> **நீதி எற்(கு)' என நினைந்தும்**
> **அப்பணிதலை நின்றான்.**

உடனே ராமன் அரசனிருந்த இடம் சென்றான். மகனைக் கட்டியணைத்து ஆசனத்தில் அமரச் செய்து, "ராமனே, எனக்கு வயது அதிகமாகி விட்டது. எல்லா சுகங்களும் நீண்ட ஆயுளும் அனுபவித்து விட்டேன். செய்ய வேண்டிய தேவ பித்ரு காரியங்களையெல்லாம் செய்து தீர்த்தேன். இனி செய்ய வேண்டியது ஒன்றுமில்லை. உனக்கு அபிஷேகம் செய்வித்துச் சிம்மாசனத்தில் அமரச் செய்வதைத் தவிர வேறொன்றும் நான் ஆசைப்பட வில்லை. நான் நேற்றிரவு கெட்ட சொப்பனங்கள் கண்டேன். தவிர வருங்கால விஷயமறிந்தவர்கள் என்னுடைய ஜாதகத்தின்படி இப்போது எனக்கு மரணமும் பெரிய துக்கமும் சம்பவிக்கலாம் என்கிறார்கள். ஆனபடியால் உன் பட்டாபிஷேகத்தை நாளைய தினமே செய்து முடித்து விட வேண்டும் என்பது என் எண்ணம். நாளைய தினம் புஷ்ய நட்சத்திரம்; நல்ல நாள் என்று பெரியோர்கள் சொல்லுகிறார்கள். இந்தக் காரியத்தை உடனே செய்து முடிக்க வேண்டும் என்று என் உள்ளத்தில் ஏதோ என்னைத் தூண்டித் துரிதப் படுத்துகிறது. உடனே நீயும் சீதையும் பட்டாபிஷேகத்துக்காக விரதமிருங்கள். கிரமப்படி இன்று உபவாசமிருந்து, தரையில் படுத்துத் தூங்கி, மங்கள காரியத்துக்கு ஏதொரு இடையூறும் வராமற்படி பூஜை செய்வாயாக. பரதன் ஊரிலில்லை. அவன் தன் மாமனுடைய ஊருக்குப் போய் வெகு நாட்களாயின. கேகயதேசம் வெகு தூரத்தில் இருக்கிறது. அவனுக்கு இப்போது சொல்லியனுப்பி வரவழைக்க அவகாசமில்லை. அவன்வருவதற்காகக் காரியத்தை நிறுத்தி வைப்பது உசிதமல்ல" என்றான்.






• • •

தசரதன் பேசிய பேச்சில் கவி நமக்கு இடம் தருகிறார்: கைகேயியை விவாகம் செய்து கொண்ட காலத்தில் தசரதன் கேகயனுக்குக் கொடுத்த வாக்கு அவன் நினைவுக்கு வந்து அது அவனை மனத்தில் தொந்தரவு செய்தது போலத் தோன்றுகிறது. பரதன் மிக நல்லவன், அண்ணனிடம் அவன் மிக்க அன்பும் பக்தியும் வைத்தவன். ஆனபடியால் கைகேயி விவாக நிபந்தனையை அவன் பொருட்படுத்த மாட்டான். ராமனுடைய பட்டாபிஷேகத்தை அவன் ஆட்சேபிக்கவே மாட்டான். ஆயினும் மனிதனுடைய மனத்தை நம்பக் கூடாது. நல்லவர்களுடைய புத்தியும் சில சமயம் மாறிப் போகும் என்று தசரதன் பயந்தான்.

"பரதன் அண்ணனைக் குருவாகக் கருதுகிறவன்; தர்மாத்மா; சுத்தமான உள்ளமும் ஆசைகளை அடக்கும் சக்தியும் பெற்றவன். ஆயினும் மனுஷ்யனு

ஜவுளி நெசவுத் தொழிலுக்கு



ப்ரஷ்

கிர்லோஸ்கர்

தறி மோட்டார்கள்

½ HP முதல் 2 HP வரை

புட் மௌண்டிங்-க்ரேடில்-மௌண்டிங் இரு தினுசுகளும் ஸ்டாக்கிலிருந்தோ கூடிய விரைவிலோ டெலிவரி கிடைக்கும்.

விசேஷ அம்சங்கள் :—

★ உன்னத சுழற்சி

★ குறைந்த உஷ்ண உயர்வு

★ மொத்த அளவில் குறைந்த நீளம்

உற்பத்தியாளர்கள் :
கிர்லோஸ்கர் எலெக்ட்ரிக் கோ. லிட்.,
பெங்களூர் - 3

சோல் ஏஜண்டுகள்
PARRY & CO. LIMITED

மதராஸ் தபால் பெட்டி நெ. 12
பம்பாய் தபால் பெட்டி நெ. 506
கல்கத்தா தபால் பெட்டி நெ. 208
நியூடெல்லி தபால்பெட்டி நெ. 172


டைய சித்தம் எப்போதும் ஒரே விதமாக இருக்காது" என்று தசரதன் ராமனிடம் சொல்லி, மறுநாளே பட்டாபிஷேகம் முடித்து விட வேண்டும், பரதன் வருவதற்காகக் காக்க வேண்டாம் என்று வசிஷ்டருக்கும் தெரிவித்து விட்டான். தான் கண்ட துர்நிமித்தங்கள் தசரதனை இவ்வாறு துரிதப்படுத்தியதாகத் தெரிகிறது.

* * *

தந்தையினிடம் விடை பெற்றுக் கொண்டு ராமன் உடனே கௌசல்யா தேவியின் அந்தப்புரத்துக்குச் சென்றான். பெற்ற தாய்க்கு விஷயத்தைச் சொல்லி ஆசி பெறுவதற்காகச் சென்றான். அதற்கு முன்னதாகவே கௌசல்யைக்குச் சமாசாரம் எட்டி விட்டிருந்தது. சுமித்திரை, சீதை, லக்ஷ்மணன் எல்லாரும் கௌசல்யா தேவியுடன் இருந்தார்கள்.

கௌசல்யை மடிப் பட்டு உடுத்தி மகனுடைய சுபத்தைக் குறித்துப் பூஜையில் அமர்ந்திருந்தாள்.

தந்தை இட்ட ஆணையைப் பற்றிக் கௌசல்யையிடம் ராமன் சொன்னான்.

"கேள்விப்பட்டேன், மகனே! இது உண்மை யென்று நீயும் சொல்லுகிறாய். சிரஞ்சீவியாக இருப்பாயாக! ராஜ்யத்தை வகித்து விரோதிகளை யடக்கிப் பிரஜைகளையும் பந்துக்களையும் காப்பாற்றி வருவாய். உன் குணங்களால் பிதாவைத் திருப்தி செய்தாய். அது என்னுடைய பாக்கியம்" என்று சொல்லி மகனை ஆசிர்வதித்தாள்.

ராமன் பக்கத்தில் நின்ற தம்பி லக்ஷ்மணனைப் பார்த்துச் சிறிது நகைத்து, "லக்ஷ்மணா, என்னோடு சமமாக இருந்து செல்வம் நிறைந்த இந்த நாட்டை நீ ஆள்வாயாக. என் உடலுக்கு நீ வெளியில் நடமாடும் இரண்டாவது உயிரல்லவா? உனக்காகத்தான் இந்த ராஜ்ய பதவி என்னை அடைந்திருக்கிறது. எனக்குச் சேர்ந்த பாக்கியமெல்லாம் உன்னுடையதுமே யாகும்" என்று சொன்னான்.

ராஜ்ய பாரத்தை லக்ஷ்மணனும் சேர்ந்து வகிக்க வேண்டும் என்று கோரியது அன்பினால் உண்டான பேச்சு. சிறு நகைப்பு, தானாக வந்து சேர்ந்த சௌபாக்கியத்தைக் குறித்து உள்ளத்தில் பற்றின்மையினால் உண்டான மெய்ப்பாடு.

பிறகு இரு தாய்மார்களையும் வணங்கி விடைபெற்றுச் சீதையை அழைத்துக் கொண்டு தன் இல்லத்துக்குச் சென்றான்.

அரசன் கட்டளைப்படி வசிஷ்டர் ராமனுடைய இல்லத்துக்கு வந்தார். இதை யறிந்ததும் ராமன் வெளியில் சென்று வசிஷ்டரை வணங்கி வாகனத்திலிருந்து கை கொடுத்து இறக்கி உள்ளே அழைத்துச் சென்றான்.

வசிஷ்டர் மந்திர பூர்வகமாக உபவாச சங்கற்பம் செய்வித்து விட்டு அரசனிடம் திரும்பச் சென்றார். போகும் போது ஜனங்கள் ராஜ மார்க்கத்தில் ஆங்காங்கே கும்பல் கும்பலாகக் கூடிப் பட்டாபிஷேக மகோற்சவத்தைப் பற்றிச் சந்தோஷமாகப் பேசிக் கொண்டிருந்தார்கள். நகர வாசிகள் வீடுகளையெல்லாம் அலங்கரித்துக் கொடிகள் ஏற்றிக் கொண்டிருந்தார்கள். தெருக் கூட்டத்துக்கு இடையில் கஷ்டப்பட்டு வசிஷ்டருடைய தேர் மெள்ளச் சென்றது.

வசிஷ்டர் வந்ததும் அரசன் ஆசனத்திலிருந்து இறங்கி அவரைக் கண்டு "செய்ய வேண்டிய உபவாச சங்கற்பம் செய்வித்தீர்களா?" என்று கேட்டு, "ஆயிற்று" என்று அவர் சொன்னதும் மகிழ்ந்தான். ஏதாவது இடையூறு நேரிடுமோ என்று தசரதனுக்குத் திகில் இருந்து கொண்டே யிருந்தது.

நகரம் மகிழ்ச்சிக் கடலில் மிதந்து கொண்டிருந்தது. பெண்களுக்கு அடங்காத உற்சாகம். எல்லா வீடுகளிலும், எல்லாத் தெருக்களிலும் தங்களுடைய சொந்த மங்கள நிகழ்ச்சியாகவே ராமனுடைய பட்டாபிஷேகத்தை ஆண் பெண் குழந்தைகள் எல்லாரும் பாவித்து எல்லை கடந்த குதூகலத்திலிருந்தார்கள்.

மறு நாள் காலையே இந்த மகோற்சவம் நடக்கப் போகிறது என்பது தெரிந்ததும் சந்தோஷமும் பரபரப்பும் இரு மடங்காகி விட்டன. சுற்றுப் பக்கத்துப் பிரதேச வாசிகள் எல்லாம் அயோத்திக்குப் பட்டாபிஷேக மகோற்சவத்தைப் பார்க்க வந்து சேர ஆரம்பித்து விட்டார்கள். எங்கு பார்த்தாலும் மங்கள வாத்தியமும் கோஷங்களுமாக விருந்தது.

ராமனும் சீதையும் தங்களுடைய மனையில் நாராயணனைத் தியானித்து ஓமத் தீயில் நெய் விட்டு, எஞ்சி நின்ற நெய்யைத் தேவப் பிரசாதமாக பக்தியுடன் அருந்தி இருவரும் தரையில் புல் பரப்பி அன்றிரவு படுத்தார்கள். அதி காலையில் மங்கள வாத்தியங்களால் எழுப்பப்பட்டு இருவரும் எழுந்தார்கள்.





**நந்தவனக் கலைஞர்கள் !**

**நல்விதை விற்பனையாளர்கள் !!**

**நல்நாற்று வளர்ப்பவர்கள் !!!**

* சௌந்தர்யாவின் விதைகளும் நாற்றுகளும் 1931ம் ஆண்டிலிருந்து இன்றுவரை அகில இந்தியப் புகழ் பெற்று விளங்கி வருகிறது.
* எங்கள் விசாலமான தோட்டத்தில் சிறந்த மேற்பார்வையில் வளர்க்கப்பட்ட ஒட்டுச் செடிகளும் நாற்றுக்களும் பதியன்களும் மற்றுமுள்ள விதைகளும் நீங்கள் கொடுக்கும் பணத்துக்கு நல்லபலனை அளிக்கும்.
* சௌந்தர்யாவின் புது ஒட்டுச் செடி வளர்ப்பு முறைகள் நந்தவனக் கலையை ரொம்பவும் சிறக்கச் செய்திருக்கிறது.

● **நிச்சயமான வெற்றிக்குச் சௌந்தர்யாவை நாடுங்கள்!**

● **நந்தவனக் கலை சம்பந்தமாக எதுவாயினும் நீங்கள் சௌந்தர்யாவைக் கேளுங்கள்.**

**மவுண்ட் ரோடு**
(சர்க்கார் கோழிப் பண்ணைக்கு அருகாமையில்)
**தேனும்பேட்டை P. O., சென்னை-18**

# சபாஷ், மாயூரம்!

எஸ். மகாலிங்கம்

**மா**யூரம் உயர்தரப் பாடசாலை இருக்கிறதே அது எதிலும் முதல் மார்க் வாங்கி விடுகிறது. முதல்தரத் தலைமை ஆசிரியரைப் பெறுவதில் முதல் மார்க். ஆசிரியர்களுக்கும், மாணவர்களுக்கும் இடையே உள்ள உறவு, ஒத்துழைப்பு இவைகளில் முதல் மார்க். எஸ். எஸ். எல். ஸி. பரீட்சை தேர்விலும் முதலாவதாக வருவதில் முதல் மார்க். பொது ஜன ஆசியையும், ஒத்துழைப்பையும் பெறுவதில் முதல் மார்க். கல்வி இலாகாவிடம் நற்சாட்சிப் பத்திரம் பெறுவதிலும் முதல் மார்க். இதோடு மட்டுமா? நாடகம் நடத்துவதிலும், கலை ஆர்வத்திலேயும் வாங்கி விட்டது முதல் மார்க்.

இந்த உண்மை சென்ற ஜூலை 24, 25ம் தேதிகளில் நன்கு வெளியாயிற்று. பிரபல வழக்கறிஞர் ஸ்ரீ வி. வி. கோபாலரத்தினம் அவர்களின் "ராஜ பக்தி" நாடகத்தை, ஓய்வு பெற்ற தலைமை ஆசிரியர் ஸ்ரீ ராகவய்யங்காருடைய இருபத்தைந்து வருஷ கால அரிய சேவையின் ஞாபகார்த்தமாக ஒரு திறந்த வெளி மன்றம் அமைக்க நிதி திரட்டும் பொருட்டு, மாயூரம் நகரசபை உயர்நிலைப் பள்ளி ஆசிரியர்களும், மாணவர்களும் சேர்ந்து,வெகு விமரிசையாக நடித்து நிரூபித்தனர்.

எந்த நாடகத்தையும், உணர்ச்சியுடனும், சாரம் குன்றாமலும் நடிப்பது மிகவும் கஷ்டம். அதுவும் "ராஜ பக்தி" போன்ற நாடகத்தை நடிப்பது மிக, மிகக் கஷ்டம்.

எனினும் இந்த நாடகத்தைக் கச்சிதமாக, சுவை குன்றாமல், குறை சொல்ல முடியாமல், அப்பழுக்கின்றி, விரச மில்லாமல், எல்லோரும் பார்த்துப் பாராட்டும் முறையில் நகரசபை ஆசிரியர்களும், மாணவர்களும் நடித்துக் காட்டினர். 'ராஜபக்தி' நாடகத்தில் உள்ள அதே வசனங்கள் கையாளப்பட்டிருந்த போதிலும், அங்கங்கே சமய சந்தர்ப்பத்துக்கு ஏற்றவாறு, சிற்சில இடங்களில் காலத்துக்கு ஏற்றவாறு வசனங்கள் மாற்றியமைக்கப்பட்டிருந்தது போற்றத் தக்கது. பாட்டுகள் நான்கு நல்ல மெட்டில் சேர்க்கப்பட்டிருந்தன. நாடகத்தில் விறுவிறுப்பு இருந்தது. நடிப்பு பிரமாதமாகவும், வசனங்கள் அழகாகவும், வார்த்தைகள் அழுத்தமாகவும். உச்சரிப்பு சுத்தமாகவும் இருந்தன. அனாவசியமான, அர்த்தமில்லாத, அடுக்குச் சொற்கள் இல்லை. எல்லோரும் கேட்டு, ரசித்து, புரிந்து கொள்ளும் வகையில் வார்த்தைகளும் வசனங்களும் இருந்தன.



ராஜபக்தியில் ஒரு ரசமான கட்டம்

ஆடை, ஆபரணங்கள், மேக் அப், காட்சி ஜோடனைகள் எல்லாம் பலே ஜோர். நடிகர்கள் எல்லோரும் தங்கள் பாத்திரங்களை உணர்ந்து வெகு சிறந்த முறையில் நடித்தனர். முதல் காட்சியில் விக்ராந்தன் இரும்பு சங்கிலிகளால் பிணைக்கப்பட்டு, ராணி மதாலஸாவின் முன்பு கொண்டு வந்து நிறுத்தப்படும் காட்சி மிகவும் பிரமாதம். தோட்டக் காட்சிகள், மாடிக் காட்சி, சுந்தனன் இரத்தம் தோய்ந்த துணியைக் கொண்டு வந்து கதறுமிடம், துர்ஜயன் மதாலஸாவின் முன்பு மண்டியிட்டுத் தனது காதலை ஏற்றுக் கொள்ள மன்றுடுவது போன்ற இடங்கள் எல்லாம் குறிப்பிடத்தக்க முறையில் அமைந்திருந்தன. விக்ராந்தனாக ஆசிரியர் டி. வி. சீனுவாசனும், வில்லன் துர்ஜயனாக ஆசிரியர் எஸ். சுந்தரராமனும், ராணி மதாலஸாவாக டி. என். பசுபதி என்ற மாணவனும் அபாரமாக நடித்தனர். மதாலஸாவாக நடித்த பசுபதியின் நடிப்பு அபாரம்.

நாடகத்துக்குத் தலைமைதாங்கிய கல்வி அதிகாரி ஸ்ரீ கோபாலய்யர், "நாடகம் பிரமாதம்; சபாஷ், மாயூரம்" என்று பாராட்டினர்.

இந்த நாடகத்தின் மூலம் சுமார் ஏழாயிரம் ரூபாய் வசூலானது என்பதைக் கேட்டபோது அதில் ஈடுபட்டு உழைத்தவர்களை எப்படிப்பாராட்டுவது என்றே தெரியவில்லை. இவ்வளவு வெற்றிக்கும் காரண புருஷரான நகர சபை உயர்தரப் பாடசாலை தலைமை ஆசிரியர் ஸ்ரீ சேஷகிரி ஐயர் அவர்களுக்கு மாயூரம் மக்கள் மிகவும் நன்றிக் கடன் பட்டிருக்கிறார்கள்.

ரஸிக மகாசபையில் ஒரு தோற்றம்




நீங்கள் இன்று
புரோடெக்ஸ்
உபயோகித்தீர்களா?
நீங்கள் நாள் முழுதும் புதுமையுடனும்
வாசனையுடனும் இருக்க,. உயர்ந்த,
புதிய புரோடெக்ஸ் ஆல்-பர்பஸ் டாய்லட்
பவுடர். மென்மையும், நறுமணமும்
சேர்ந்த புரோடெக்ஸ் குடும்ப முழுதுக்கும்
வெப்பத்தில் குளுமையும்
இனிமையும் தருகிறது.
ஸ்நானத்துக்குப் பின்
வாசனைப் பூஷணம். ஈரத்தை
உறிஞ்சி புதுமை தருகிறது.
குளுமை! குதூகலம்!
கோடையின் கொடுமையில்
நேர்த்தியும் மென்மை!
யும்-குழந்தைக்கு ஏற்றது.
மிக எடுப்பானது
உங்கள் வதனத்தை அழகு
படுத்தும் பவுடர்.
புரோடெக்ஸ்
ஆல் பர்பஸ்
டாய்லட் பவுடர்
புதிது!
PROTEX
All-Purpose
TOILET POWDER
கால்கேட்டின் புதிய
சிறந்த தயாரிப்பு



# வாழ்வளித்த தெய்வம்

ஜயலக்ஷ்மி

"ஏண்டாப்பா விசு! இன்று ஞாயிற்றுக் கிழமைதானே! கமலாவைச் சினிமா, கடற்கரை எங்கேயாவது அழைத்துக் கொண்டு போய்வரக் கூடாதா!" என்று கேட்டாள் விசுவநாதனுடைய தாயார்.

"ஆகா! அழைத்துக் கொண்டு போகிறேன். ஏனென்றால் நான் ஆசைப்பட்ட பெண்ணை எனக்குக் கலியாணம் செய்து வைத்திருக்கிறாய் அல்லவா!" என்று எகத்தாளமாகக் கேட்டான் விசுவநாதன் தன் தாயாரைப் பார்த்து.

"என்ன மோப்பா! நடந்தது நடந்து விட்டது. இருந்தாலும் நீ அந்தப் பெண்ணை இப்படி அலட்சியம் செய்வது நன்றாகவேயில்லை. அதுவும் சிறிசுதானே! அவளுக்கும் நாலு பேர்களைப் போல் நாமும் இருக்க வேண்டும் என்று ஆசையிருக்காதா!" என்று வினவினாள் சுப்பம்மாள். அவளுடைய வார்த்தைகளில் மிதமிஞ்சிய வேதனையின் சாயல் படிந்திருந்தது.

"உனக்கு ஆசையாக இருந்தால் நாட்டுப் பெண்ணை அழைத்துக் கொண்டு எங்கே வேண்டுமானாலும் போய் விட்டு வா. நான் தடுக்கவில்லை. வீணாக என்னைத் தொந்தரவு செய்யாதே!" என்று கூறி விட்டு வெளியேறினான் விசுவநாதன்.

மகன் செல்வதையே வெறித்துப் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்த சுப்பம்மாளின் கண்களில் கண்ணீர் கசிந்தது. மனம் நொந்தது. நினைவு இறந்த காலத்தை நோக்கிச் சென்றது.

சுப்பம்மாவுக்கு விசுவநாதன் ஒரே பிள்ளை. அவன் தகப்பனார் அவனுக்கு நான்கு வயது இருக்கும் போது இறந்து போய் விட்டார். அவர் ஆப்த நண்பரான பரமேசுவரன் இவர்கள் குடியிருந்த தெருவிலேயே வசித்து வந்தார். அவருடைய உதவியினால் சுப்பம்மாள் அதிகக் கஷ்டம் அனுபவிக்காமல் இருந்ததுடன் கூடிய வரையில் சௌகரியமாகவே வாழ்ந்து வந்தாள் எனலாம்.

விசுவநாதனையும் செல்லமாக வளர்த்தாள். ஒரு குறையும் இல்லாமல் பால்யப் பருவத்தைக் கடந்த விசுவநாதன் காளைடையில் நன்றாகப் படித்து, பட்டமும் பெற்று நல்லதொரு வேலையிலும் அமர்ந்தான்.

கை நிறைந்த வருமானம். பிக்கல் பிடுங்கல் ஒன்றும் கிடையாது. கண்ணுக்கும் விசுவநாதன் ஆஜானுபாகுவாய், கவர்ச்சிகரமான தோற்றத்துடன் இருப்பான். அவனுக்கு வரன்கள் வந்து குவியக் கேட்பானேன்! தினம் ஜாதகங்கள் வந்த வண்ணமே இருந்தன. சுப்பம்மாவும் தன் பிள்ளைக்குச் சீக்கிரமாகக் கல்யாணம் செய்து வீட்டுக்கு லக்ஷ்மிகரமாக மருமகள் வந்து பார்க்க வேண்டும் என்று ரொம்பவும் ஆசைப் பட்டாள். தனக்குப் பெண்ணில்லாக் குறையை வரப்போகும் மருமகளின் மூலம் தீர்த்துக் கொள்ளத் துடிதுடித்துக் கொண்டிருந்தது அவளுடைய கள்ளமில்லாத வெள்ளை யுள்ளம். அதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யலானாள் சுப்பம்மாள்.

விசுவநாதனின் விருப்பம் தனியாக இருந்தது. அவனுக்கு அவனுடைய தகப்பனாரின் பிராண சிநேகிதரான பரமேசுவரனின் பெண் பிரேமாவையே தான் மணந்து கொள்ள வேண்டும் என்ற ஆசை அளவு கடந்திருந்தது. விசுவநாதனும் பிரேமாவும் பழகும் விதத்திலிருந்து அவர்களுடைய மனக் கருத்தைச் சுப்பம்மாளும் ஓரளவு தெரிந்து கொண்டிருந்த படியால் அவளும் மகனின் விருப்பத்தை ஆதரித்தாள்.

பரமேசுவரன் தம்பதிகளுக்கும் தங்கள் பெண் பிரேமாவை விசுவநாதனுக்குக் கொடுப்பதில் ரொம்பவும் சந்தோஷமே. "விசுவநாதனுக்காகவே பிறந்தவள் தானே பிரேமா. கல்யாணத்தை முடித்து விட வேண்டியது தான். விசுவின் ஜாதகத்தைக் கொடுங்கள். பொருத்தம் பார்த்து விட்டு, முகூர்த்தம் வைப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்கிறேன்" என்று சுப்பம்மாளிடமிருந்து விசுவின் ஜாதகத்தை வாங்கிக் கொண்டு போனார் பரமேசுவரன்.

இரண்டு நாட்களுக்குப் பிறகு பரமேசுவரன் வந்து கூறிய பதில் சுப்பம்மாளையும் விசுவநாதனையும் கதிகலங்கச் செய்து விட்டது. "விசுவநாதனின் ஜாதகத்துக்கும் பிரேமாவின் ஜாதகத்துக்கும் கொஞ்சம் கூடப் பொருத்தமில்லையாம்." இதைக் கூறும்போது பரமேஸ்வரனுக்கும் நெஞ்சை யடைத்தது. விறுவிறென்று அவர் தன் வீட்டுக்குப் போய் விட்டார்.

பிரேமாவைத் தான் மணப்பதற்கில்லை என்னும் அதிர்ச்சி தரும் செய்தியை அவனால் கொஞ்சமும் தாங்க முடியவில்லை. ஒன்றிலும் சிரத்தை யில்லாத வனாக விசுவநாதன் சோர்ந்து விட்டான்.

இந்த நிலையில் சில நாட்கள் நகர்ந்தன. ஒருநாள் ஒரு பெரியவர் சுப்பம்மாளின் வீடு தேடி வந்தார். 'தன் பெண்ணின் ஜாதகம் மிகவும் பொருத்தமாக இருப்பதாகவும், தனக்கு இருப்பது ஒரே பெண் தானாகையால் சீர் வகையறாக்களெல்லாம் தாராளமாகச் செய்வதாகவும், உடனே உங்கள் பிள்ளையுடன் பெண்ணைப் பார்க்க வரவேண்டும்' என்று அழைத்தார். அவர் கூறியதிலிருந்து அவர் பெண் கமலா நல்ல அழகி என்றும் தெரிய வந்தது. சுப்பம்மாவுக்கு ஒன்றுமே புரியவில்லை. பிள்ளையோ பிடிவாதக்காரன். பெண்ணைப் பெற்றவரோ அவசரப் படுத்துகிறார். அவள் மனமும் எப்படியாவது விசுவைக் கல்யாணத்துக்குச் சம்மதிக்க வைத்துவிட வேண்டும் என்று தீர்மானிக்கவே, பிள்ளையிடம் மெதுவாக விஷயத்தை விவரித்தாள். அப்படியே தன் ஆசையையும் கூறத் தயங்கவில்லை அவள்.

உடனே குதித்தான் விசுவநாதன். "யாரைக் கேட்டுக் கொண்டு நீ இவ்வளவு தூரம் காரியத்தை வளர விட்டாய்! நான்தான் என் பிரேமாவைத் தவிர வேறு எந்தப் பெண்ணையும் பற்றிப் பேசாதே என்று கூறியிருக்கிறேனே!" என்று இரைந்து கத்தினான்.

பொறுமை யிழந்து படபடக்கும் மகனைச் சாந்தமாகப் பார்த்தாள் சுப்பம்மாள். உள்ளத்தில் கிலி பற்றியிருந்த போதிலும், இதழ்களில் புன்னகை தவழ்ந்தது. சாவதானமாக ஆரம்பித்தாள்: "விசு! எனக்கு இருப்பதோ நீ ஒருவன். உன்னுடைய சந்தோஷம்தான் எனக்குத் திருப்தியை யளிக்கும். நீ பிரேமாவை மணந்து கொள்வதை நான் வேண்டாமென்றேனா! உன் வாழ்வு இன்பகரமாய் விளங்குவதற்காக, உன் ஆசை நிறைவேற வேண்டும் என்று நான் ஜாதகப் பொருத்தம் இல்லா விட்டால் கூடப் பரவா யில்லை என்று கல்யாணத்துக்குச் சம்மதித்தேன். ஆனால், பிரேமாவின் அப்பா ஜாதகப் பொருத்தத்தையே பிரதானமாகக் கருதும் போது, நாம் என்னப்பா செய்ய முடியும்!"

"நீ ஒன்றும் செய்ய வேண்டாம். வேறு ஒரு பெண்ணை மணந்து கொள்ளும்படி தொந்தரவு செய்யாமலிருந்தாலே போதும். பிரேமாவின்

## என்ன ஆச்சரியம்!



நினைவிலேயே என் ஆயுள் பூராவையும்கூட கழித்து விடுவேன்'' என்று கூறினான் விசு.

''அதெப்படி முடியும்! பிரேமாவுக்காக நீ பிரம்மச்சாரியாக இருக்க முடியுமா!'' என்று கவலையுடன் கேட்டாள் சுப்பம்மாள்.

''ஏன் இருக்க முடியாது!'' என்று அழுத்தமாகக் கேட்டான் விசு.

''விசு! நீ பிரேமாவை மணக்க விரும்பும் இளம் வாலிபன் மட்டுமல்ல. ஒரு அன்புத் தாயின் மகனும்கூட என்பதை மறந்து விடாதே! என் ஆசையைப் பூர்த்தி செய்வதற்காகவும், உன் தகப்பனாரின் வம்சம் வாழையடி வாழையாக விளங்குவதற்காகவும் நீ வேறு ஒரு பெண்ணை மணந்து கொண்டு இல்லறம் நடத்தத்தான் வேண்டும்'' என்று உறுதியுடன் மொழிந்தாள் சுப்பம்மாள்.

''பிறந்தது முதல் ஒன்றாகப் பழகி விளையாடிய பிரேமாவை என்னால் மறக்க முடியாது அம்மா. என்னைத் தொந்தரவு செய்யாதே!'' என்று கெஞ்சினாற் போலக் கூறினான் விசு.

''நீ வேண்டுமானால் பிரேமாவையே நினைத்துக் கொண்டு உட்கார்ந்திருக்கலாம். ஆனால் பிரேமா உன்னை வெகு விரைவில் மறந்து விடவே போகிறாள். பிரேமாவுக்கு வேறிடத்தில் கலியாணம் நிச்சயம் ஆகி விட்டது. இந்த மாதக் கடைசியில் முகூர்த்தம் வைத்திருக்கிறார்கள்.''

''என்ன! நிஜமாகவா!'' என்றான் வியப்போடு.

''உன்னிடம் போய் சொல்ல வேண்டிய அவசிய மில்லையப்பா எனக்கு...'' என்று கூறி விட்டுச் சுப்பம்மாள் உள்ளே போனாள்.

பிரேமா தன்னை மறக்க மாட்டாள் என்ற நம்பிக்கையுடனிருந்த விசுவநாதனின் மனம், தாயார் கூறிய வார்த்தைகளைக் கேட்டதும் கலகலத்துப் போயிற்று. 'பிரேமாவா, உயிருக்கு உயிராகப் பழகின என்னை மறந்து விட்டு இன்னொருவனுக்கு மாலையிடப் போகிறாள்! அவள் மனம் சம்மதிக்குமா!' என்று அதிசயித்தான். அவனால் இதை நம்பவே முடிய வில்லை.

பற்பலவாறு எண்ணக் கடலில் சிக்கித் தவித்துக் கொண்டிருந்தவன், கடைசியில் எதற்கும் பிரேமாவை ஒரு முறை நேரில் சந்தித்துக் கேட்டுத் தெரிந்து கொண்டுவிடுவது என்ற முடிவுடன் வீட்டை விட்டுப் புறப்பட்டான் விசு.

அவனைக் கண்டதும் பிரேமாவின் தகப்பனார் பரமேசுவரன் ''வா அப்பா, விசு! உன்னிடம் ஒரு சமாசாரம் சொல்ல வேண்டுமென்றிருந்தேன். நான்கு நாட்களாக உன்னைப் பார்க்கவே பிரமேயம் இல்லாமற் போய் விட்டது. பிரேமாவுக்குக் கலியாணம் நிச்சயமாகி யிருக்கிறது. உனக்குத் தெரியுமோ!'' என்று சகஜமாகக் கேட்டார்.

''அம்மா சொன்னாள்!'' என்று மொழிந்த விசுவநாதனின் குரலில் நிராசை நிரம்பி நின்றது.

''என்ன செய்வது விசு! பிரேமா உனக்குத் தான் என்று நாங்கள் தீர்மானித்திருந்தோம். ஆனால் இப்படி ஜாதகப் பொருத்தம் கொஞ்சம் கூட இல்லாமல் போய்விடும் என்று நினைக்கவே யில்லை. இப்பொழுதுதான் தெரிகிறது, நாம் நினைப்பது நடந்து விடுவதில்லை, பிராப்தம் என்று ஒன்று தனியாக இருக்கிறது என்று. போகட்டும், விசு. பிரேமாவை விடச் சகலவிதத்திலும் உயர்ந்தவளாக ஒரு பெண் உனக்கு மனைவியாக வாய்ப்பாள். வருத்தப் படாதே! உனக்குப் பிரேமாவின் மீது உள்ள அன்பு எத்தகையது என்பது எனக்குத் தெரியும். அவளை உனக்குக் கொடுக்க வில்லையென்பதற்காக நீ இங்கு வராமலிருந்து விடாதே! அவளுக்கு இனிமேல் நீதான் சகோதரன்'' என்று கூறினார் பரமேசுவரன்.

''பிரேமா எங்கே மாமா!'' என்று கேட்டுக் கொண்டே எழுந்திருந்தான் விசு.

''மாடியில் தானிருக்கிறாள். அவளுடைய தோழிகளுக் கெல்லாம் பத்திரிகை அனுப்ப வேண்டுமல்லவா! அதற்காகக் கவர்களில் விலாசம் எழுதிக் கொண்டிருந்தாள். ஏன்! நீ போய்ப் பாரேன்'' என்றார் பரமேசுவரன்.

நடைப்பிணம்போல் உணர்ச்சி யற்றவனாகப் படிகளைக் கடந்து மாடியறையை அடைந்தான் விசுவநாதன்.

இவனைக் கண்டதும் தன் எழுத்து வேலையை நிறுத்திவிட்டு எழுந்து நின்றாள் பிரேமா. அங்கே மேஜைமீது கிடந்த பத்திரிகைகளில் ஒன்றை எடுத்துப் பிரித்துப் பார்த்தான் விசு, மௌனமாய். அதில் ''சௌபாக்கியவதி பிரேமாவை சிரஞ்சீவி நாகராஜனுக்குக் கன்னிகாதானம் செய்து கொடுப்பதாய்'' என்று வாக்கியத்தை முழுவதும் படிக்காமலேயே நிறுத்தினான். அவன் உள்ளம் குமைந்தது. கலங்கிய கண்களை விரித்துப் பிரேமாவைப் பார்த்தான். அவள் கயல்விழிகளும் கண்ணீரில் நீந்திக் கொண்டிருந்ததையும் பார்த்தான். ''நீ இப்படி என்னை அறவே மறந்துவிடுவாய் என்று நான் நினைக்கவே யில்லை!'' என்றான்.

''பெண் ஜன்மத்துக்குச் சுதந்திர உரிமை கிடையாது என்பதைக் கூடவா மறந்துவிட்டீர்கள்...!'' என்று தயங்கித் தயங்கிக் கேட்டாள்.

''அதை மறக்கவில்லை. ஆனால் பெண்களுக்கு மன உறுதி கிடையாது என்பதைத்தான் நான் இதுவரையில் மறந்திருந்தேன்'' என்று கூறிய விசுவநாதன் பக்கத்திலிருந்த நாற்காலி ஒன்றில் அமர்ந்து கொண்டான்.

''அப்படிச் சொல்லக் கூடாது. ஆண்கள் தங்கள் விருப்பத்திற் கேற்றபடி சூழ்நிலையை மாற்றி யமைத்துக் கொள்ள முடியும். அவர்கள் சமூகத்தின் பழிகளுக்குப் பயப்பட வேண்டிய தில்லை. ஆனால் பெண்ணாகப் பிறந்து விட்டவர்கள் ஒருவர் மீதுள்ள அன்பின் பொருட்டு ஆயுள் முழுவதும் கன்னியாக வாழ விரும்பினால் சமூகம் அவர்களைச் சும்மா விட்டு வைக்குமா! பெற்றோர்கள் எவ்வளவு நாட்களுக்குச் சாசுவதம்! அவர்களுக்குப் பின் என்போன்ற இளம் பெண்களை நிர்ப்பயமாக வாழ விட்டு விடுமா வாலிப சமூகம்! யோசித்துப் பாருங்கள். ஒரு அபலைப் பெண் தன்னந்தனியளாய் வாழக் கூடிய நிலையிலா இன்றைய உலகம் இருந்து வருகிறது! என் இஷ்டம் ஒன்றை மட்டும் பிரதானமாகக் கருதினால் போதுமா! பெற்றோர்களின் விருப்பத்தையும் அனுசரித்துப் போக வேண்டிய கடமை எனக்கு இருக்கிறதல்லவா! ஒன்றிற்காக ஒன்றைத் தியாகம் செய்துதான் ஆகவேண்டும்! வேறு வழியில்லை'' என்று பொங்கி வரும் கண்ணீரிடையே கூறி முடித்த பிரேமா தன் உள்ளத்து உணர்ச்சிகளை அடக்கிக் கொள்ள முடியாதவளாய் வாயை இறுகப்பொத்தியபடி அவ்விடத்தை விட்டு விடுவிடு வென்று வெளியேறினாள்.

சோர்ந்துபோன உள்ளத்துடனும், தளர்ந்த நடையுடனும் பித்துப் பிடித்தவனைப் போன்ற நிலையில் தன் வீட்டை யடைந்தான் விசு. பிரேமா கூறியவைகள் யாவும் ஒரு பக்கம் உண்மையாகவே பட்டன அவனுக்கு. ஆனால் அவைகளைச் செயல்படக் காட்டுவதுதான் எளிதல்ல என்று எண்ணிய மாத்திரத்தில் அவன் மனம் சொல்லொணா வேதனையினால் துன்புற்றது. பிரேமாவை

மறக்க அவன் என்ன முயன்றும் பயனில்லாமற் போய் விட்டது.

அதற்குப் பிறகு ஒருவாரம் சென்றதே அவனுக்குத் தெரியவில்லை.

''என்மீது எல்லையற்ற அன்பு கொண்டிருந்த பிரேமாவே மனம் துணிந்து இன்னொருவனை மணக்கும்போது, நானும் ஏன் வேறொரு பெண்ணை மணந்து கொள்ளக் கூடாது! அப்படியாவது பிரேமாவை மறக்க முடிகிறதா என்று பார்த்தாலென்ன!' என்று எண்ணினான். இந்தச் சமயத்தில் அவனது மனம் ஒரு பால் மணம் மாறாத பாலகனுடைய மனத்தை ஒத்திருந்தது. ஆம். ஒரு பொம்மை கைக்கெட்டாத தூரத்துக்கு நழுவிப் போய் விட்டால், வேறொரு பொம்மையை எடுத்து விளையாடத் தொடங்கி விடுமல்லவா குழந்தை. அதே நிலைக்கு வந்து விட்டான். ஆனால் விதி...!

அவன் மனம் இந்த விஷப் பரீட்சையில் இறங்க முடிவு செய்த அதே சமயத்தில் சுப்பம்மாவும் ''பெண் பார்க்க வா! பெண் பார்க்க வா!'' என்று நச்சரிக்கத் தொடங்கவே வேறு வழியின்றித் தாயாருடன் சென்று பெண்ணைப் பார்த்து விட்டு வந்தான்.

பெண்ணும் பிரேமாவை விட எந்த விதத்திலும் குறைந்தவளாக இல்லை. பிராப்தமும் தன் கை வரிசையைத் திறமையாகச் செய்யவே அதி விரைவில் விசுவநாதன் கமலாவின் கரம் பற்றினான். கலியாணம் அதி விமரிசையாக நடந்தேறியது. அதுவரையில் நடந்தவைகளை அவன் மறந்து விட்டவனாகவே தோன்றியது, அவனைப் பார்க்கும் போது.

மணச் சடங்குகள் யாவும் முடிந்து மனைவியைத் தனிமையில் நெருங்கும்போதுதான் அவன் மனம் தகராறு செய்தது. தன்னுடைய விளையாட்டுச் செய்கை விளைவித்த விபரீதம் பளிச்சென்று புலனாயிற்று அவன் உள்ளத்துக்கு. யாரோ ஒரு அந்நியப் பெண்ணாகப் பட்டாள் கமலா அவன் கண்களுக்கு. அவன் தன் உரிமையைக் கூட மறந்து விட்டான். கமலாவுக்கும் அவனுக்கும் நடுவில் பிரேமாவின் மோகன உருவம் தோன்றி அவனைக் கமலாவிடம் நெருங்க வொட்டாமல் தடுத்தது. பிரேமாவுக்கே அமைத்த காதற் கோயிலினுள் கமலா நுழைவதாக நினைந்த போதே அவனுக்குப்பொறுக்கவில்லை. 'அம்மாவின் ஆசைக்காகவே அவளை மணந்து கொண்டோம். அம்மாவின் மருமகளாக மட்டுமே இருக்கட்டும். எனக்கு மனைவியாக, என் இதய ராணியாக அவள் இருக்க முடியாது' என்று உறுதி பூண்டான்.

அன்று முதல் கமலாவைத் திரும்பிக் கூடப் பார்ப்பதில்லை விசுவநாதன்.

கணவனின் அன்பைப் பெறக் கமலா செய்த தந்திரங்கள் கொஞ்சமல்ல. எல்லாம் பயனற்றுப் போய் விடவே அவளும் மனம் தளர்ந்து சலித்து விட்டாள். இயந்திரம் போலத் தன் கடமைகளை மட்டுமே செய்து வந்தாள்.

சுப்பம்மாவும் தன் மகன் மனைவியிடம் நடந்து கொள்ளும் நியாயமற்ற தன்மையைக் கண்டு மனம் புழுங்கினாள். கொஞ்ச நாட்கள் போனால் ஒருகால் விசுவநாதனின் மனம் மாறுமோ என்றே இதுவரையில் பொறுத்துப் பார்த்தாள். ஆனால் வருஷம் இரண்டாகியும் மகனின் நடத்தையில் எவ்வித மாறுதலும் இல்லாமற்போகவே, கமலா படும் துயரத்தைக் காணச் சகிக்காமல் மகனிடம் கொஞ்சம் கொஞ்சமாக அவன் நடந்து கொள்வது தவறு என்பதைக் கூறி வரலானாள்.




'' ஹலோ! புஸ்தகசாலையிலிருந்து பேசுகிறேன். பொழுதே போகவில்லை. படிப்பதற்கு ஏதேனும் நல்ல புஸ்தகங்கள் அனுப்புங்களேன்!''

வீட்டினுள்ளே கமலா தன் கணவருக்கும் மாமியார்க்கும் நடந்த சம்பாஷணையைக் கேட்டு மனம் பொறுக்காதவளாய் விம்மி விம்மியழுது கொண்டிருந்தாள். அந்த வேதனை நிறைந்த குரல் சுப்பம்மாவின் இதயத்தைப் பிய்த்தெடுத்தது. எழுந்திருந்து கூடத்து அறைக்குள் சென்றாள். மருமகளின் நிலை அவள் மனத்தை வருத்தியது.

அருகில் சென்று கமலாவின் தலையை நிமிர்த்தி, '' அழாதே கமலா! என்னைப் பார்!'' என்று பரிவுடன் அழைத்தாள்.

'' அம்மா!'' என்று விம்மிய கமலா துக்கம் தாங்க மாட்டாதவளாய் வாய் விட்டு அழலானாள்.

'' கண்ணைத் துடைத்துக் கொள்ளம்மா. வருத்தப்பட்டு ஆகப் போவதென்ன! அந்த மதுரை மீனாட்சிதான் உன் வாழ்வை மலரச் செய்ய வேண்டும் '' என்று வருத்தத்துடன் கூறிய சுப்பம்மாவை யாரோ '' மாமி!'' என்றழைக்கும் சத்தம் கேட்கவே, '' யாரது, பிரேமாவா!'' என்றழைத்தபடி வெளியே வந்தாள் சுப்பம்மாள்.

'' ஆமாம் மாமி. கமலா சௌக்கியந்தானே! ஏன் ஒரு மாதிரியாக இருக்கிறாள்! உடம்பு சரியாக இல்லையா!'' என்று வினவிய வண்ணம் உள்ளே வந்து உட்கார்ந்து கொண்டாள் பிரேமா.

'' உடம்புக்கு ஒன்றுமில்லை, பிரேமா. மனத்துக்குத்தான்......'' என்று வார்த்தையை முடிக்காமலேயே நிறுத்தினாள் சுப்பம்மாள்.

'' என்ன மாமி, என்ன! கமலாவுக்கு என்ன குறை!'' என்று படபடத்தாள் பிரேமா.

'' பார்க்கிறவர்களுக்கு அப்படித்தான் தோன்றும். ஆனால் உள்ளே யிருப்பது யாருக்குத் தெரியும்!'' என்று மொழிந்த சுப்பம்மா '' ஹூம்...'' என்று நீண்ட பெருமூச்சு விட்டாள்.

''புரியும்படியாகச் சொல்லுங்கள், மாமி'' என்று கெஞ்சினாள் பிரேமா.

'' உன்னிடம் சொன்னால் என்ன பிரேமா! விசுவின் சுபாவம்தான் உனக்குத் தெரியுமே! கலியாணம் ஆனதிலிருந்து கமலாவைத் திரும்பிக் கூடப் பார்ப்பதில்லை அவன்......!''

'' என்ன நிஜமாகவா!'' அளவுக்கு மீறிய ஆச்சரியத்துடன் கேட்டாள் பிரேமா.

'' நானும் கொஞ்ச நாட்கள் போனால் சரியாகி விடும் என்றுதான் நினைத்தேன். ஆனால் வருஷம்

இரண்டாகி விட்டது. அந்தப் பெண் எப்பொழுதும் அழுது கொண்டே யிருக்கிறது.''

''மாமி! இதை என்னால் நம்பவே முடியவில்லையே......'' என்றாள் பிரேமா.

''பிரேமா. கடைசியாக இந்த வழியிலும் முயற்சி செய்து பார்த்து விடுவோம். நீ வேண்டுமானால் அவனிடம் சொல்லிப் பார்க்கிறாயா!''

''நான் சொன்னால் மட்டும் அவர் கேட்பாரா! என்னமோ...என்னால் முடிந்த மட்டும் முயற்சி செய்து பார்க்கிறேன்...எங்கே போயிருக்கிறார்! எப்போது வருவார்!'' என்று கேட்டாள் பிரேமா.

''இதோ வருகிற நேரம் தான். சற்று நேரம் இருந்து விட்டுத்தான் போயேன், பிரேமா...''

''சரி மாமி...'' என்று பிரேமா கூறுவதற்கும் ''யார் பிரேமாவா! எப்போது ஊரிலிருந்து வந்தாய்!'' என்று கேட்டுக் கொண்டே விசு உள்ளே நுழைவதற்கும் சரியாக இருந்தது.

மகனைக் கண்டதும் சுப்பம்மாள் மெல்லச் சமையலறைப் பக்கம் நழுவினாள்.

''இன்று காலையில் தான் வந்தேன். சௌக்கியந்தானே!'' என்று கேட்டாள் பிரேமா.

''சௌக்கி...யந்தான்...'' என்று இழுத்தாற் போலக் கூறினான் விசு.

''ஏன் அப்படி இழுத்தாற் போல் கூறுகிறீர்கள்!'' என்றாள் பிரேமா.

''உன்னைப் போலவா நான்! நீ முதலில் உன் பெற்றோர்களின் மனத் திருப்திக்காகவே மணம் செய்து கொள்வதாகக் கூறினாய். இப்பொழுது என்னடா என்றால்...!'' வார்த்தையை முடிக்காமலேயே நிறுத்தினான் விசு.

''எப்படி நோக்கினாலும் வாழ்க்கையின் அடிப்படையான ரகசியம் அன்புதான். எந்த வழியாகச் சென்றாலும் கடைசியில் எல்லோரும் அன்புப் பாதையில் ஒன்று சேர்ந்து தானே ஆகவேண்டும்! கடமையிலிருந்து பிறப்பதும் அன்புதானே! நான் மட்டும் அதற்கு விதிவிலக்கா!'' என்று கேட்டாள் பிரேமா இளநகையுடன்.

''இப்பொழுதெல்லாம் நீ நிறையப் பேசக் கற்றுக் கொண்டு விட்டாய் பிரேமா. அதிருக்கட்டும். உன் கணவர் எப்படி? உன்னிடம் அன்பாக இருந்து வருகிறார் அல்லவா!'' என்று வினவினான் விசுவநாதன்.

''எந்த விஷயத்தில் எப்படியிருந்தாலும் குணத்தில் அவர் உங்களை விட உயர்ந்தவர்தான். சுயநலவாதியல்ல...'' என்றாள் பிரேமா

''என்ன உளறுகிறாய் பிரேமா!'' சற்று ஆத்திரமாகவே கேட்டான் விசு.

''உளறவில்லை; உண்மையைத்தான் சொல்லுகிறேன்'' என்றாள்.

''எதைச் சொல்லுகிறாய் நீ!''

''சற்றுப் பொறுமையாகக் கேளுங்கள். என்னைக் கலியாணம் செய்து கொள்ளுவதற்கு முன், வீட்டோடு வசித்துக் கொண்டிருந்த அத்தையின் பெண்ணை இவர் ரொம்பக் காதலித்தாராம். அவளும் இவரை ரொம்பவும் காதலித்தாளாம். ஆனால் ஏதோ சில காரணங்களால் இவர்களுடைய காதல் நிறைவேறாமற் போய் விட்டதாம். அவளுக்கு வேறு இடத்தில் விவாகம் ஆகிவிட்டதாம். ஆனால் அதற்காக இவர் மனம் உடைந்து போய் விடவுமில்லை, அத்தை பெண்ணையே மனதுக்குள் வைத்துக் கொண்டு தன் கைப்பிடித்தவளை வதைத்தெடுக்கவுமில்லை. சுருங்கச் சொன்னால் உங்களை மணந்து கொண்டிருந்தால்கூட நான் இவ்வளவு சந்தோஷமாக இருப்பேனா என்பது சந்தேகம் தான். அவர் என் மீது வைத்திருக்கும் அன்புக்கு அளவே கிடையாது...'' என்று கூறி நிறுத்தினாள் பிரேமா.

''பிரேமா! உன்னையும் உன் கணவரையும் போல் என்னால் இவ்வளவு எளிதாக மனத்தை மாற்றிக் கொள்ள முடியவில்லையே...''

''கடைசியாக ஒன்று சொல்லுகிறேன். கமலா உங்களைப் போல் இன்னொருவரை மனத்தில் நினைத்துருகிக் கொண்டு, உங்களை அலட்சியம் செய்தால் உங்களுக்கு எப்படியிருக்கும்! யோசித்துப் பாருங்கள். விருப்பும் வெறுப்பும் இரண்டு இனங்களுக்கும் ஒரே மாதிரியானது தானே!''

''பிரேமா, போதும், இனியும் என்னை உன் வார்த்தை அம்புகளால் துளைக்காதே...'' என்று கலவரத்துடன் மொழிந்தான் விசு.

''என் மீது உங்களுக்கு இருக்கும் அன்பு உண்மையானால், அந்த அன்பின்மேல் ஆணையாகக் கேட்கிறேன், நீங்கள் கமலாவை உள்ளன்புடன் நேசித்து வாழ்வீர்களா! அல்லது இப்படியேதான் அப் பேதையின் பவித்திரமான வாழ்வைப் பாழ்படுத்தி வருவீர்களா! சொல்லுங்கள்!'' என்று பதட்டத்துடன் வினவினாள் பிரேமா.

''வேண்டாம் பிரேமா. கோபிக்காதே! உன் மீதுள்ள அன்புக்காக, உன் மனத் திருப்திக்காக நான் எதையும் செய்யத் தயாராக இருக்கிறேன். சரிதானே!'' என்று கெஞ்சினாற்போலக் கேட்டான் விசு.

''அது தான் எனக்கு வேண்டியது. என்னால் ஒரு சகோதரியின் வாழ்வு துன்பம் நிறைந்ததாக இருக்கிறதென்றால் அதை என் மனம் பொறுக்காது. இன்னொருவருக்குச் சொந்தமாகி விட்ட என்னைத் தாங்கள் இனி மனத்தால் கூட நினைக்கக் கூடாது. நான் உங்கள் சகோதரி யென்பதைத் தாங்கள் மறந்துவிடக் கூடாது. கமலா கிடைப்பதற்கரிய மாணிக்கம்; அவளை அன்போடு போற்றி வாருங்கள். இனியாவது உங்களுடைய தாம்பத்ய வாழ்க்கை என்றும் இன்பச்சோலையாக விளங்கட்டும். அண்ணா! நான் போய் வருகிறேன். இருட்டி விட்டது'' என்று கூறினாள் பிரேமா.

''போய் வா! பிரேமா! உன் சந்தோஷம் தான் என் சந்தோஷம்'' என்று கூறிப் பிரேமாவை வழியனுப்பினான் விசு.

** ** **

ஒரு மாதம் சென்று மறைந்தது. அன்று தன் கணவன் ஆசையுடன் வாங்கி வந்திருந்த மல்லிகைச் சரத்தில் பெரும் பாதியை எடுத்துப் பிரேமாவின் புகைப் படத்துக்குப் பக்தி சிரத்தையுடன் அணிவித்தாள் கமலா. அவள் வாய், ''பிரேமா! இருளடைந்திருந்த என் வாழ்வில் இன்ப ஒளியை உண்டாக்கிய நீ என் தெய்வம். இந்த மலரும் மணமும் போல் உன் வாழ்க்கையும் அன்பும் இன்பமும் கமழ என்றும் மங்களமாய் இருக்கட்டும்'' என்று உளம் நிறைந்த நன்றியுடன் கூறியது. கண்களில் ஆனந்த பாஷ்பம் பொங்கியது. கரம் குவித்து நின்றாள் கமலா.

''அம்மா! பிரேமாவுக்கு வருகிற வெள்ளிக்கிழமை சீமந்தக் கலியாணமாம். நாமெல்லாம் போக வேண்டுமல்லவா! எங்கே கமலா!'' என்று கேட்ட கணவனின் குரல் கமலாவின் செவிக்கு அமிர்தம் பாய்வது போலிருந்தது. தானும் அந்த மகிழ்ச்சியில் கலந்து கொள்ளும் நிமித்தம் அறையை விட்டு வெளியே சென்றாள் கமலா!

''கட்டாயம் போகத்தான் வேண்டும். நம் வீட்டில் அன்பு விளக்கை யேற்றி வைத்தவள் பிரேமாதானே!'' என்று கூறிய சுப்பம்மாளின் மனம் மகிழ்ச்சியால் விரிந்து மலர்ந்திருந்தது.

# சேங்கனூர் சுந்தரம்

துரோணன்

கருகிய மையிருட்டு. நிர்மலமான தடாகத்தின் மேல் பரப்பைக் கொடூரமான கோரைப் பூண்டுகள் மறைத்திருப்பது போன்றிருந்தது வானத்தின் தோற்றம். தாரைகள் முழுவதையும் கரும் போர்வை போன்ற மேகத் திரள்கள் ஆக்கிரமித்திருந்தன. அவைகளினின்றும் அடிக்கடி வெளியாகிக் கொண்டிருந்த மின்னல்கள் இருளின் பயங்கரத்தை மிகைப் படுத்திக் கொண்டிருந்தன. ஆனால், மனித உள்ளத்தின் அஞ்ஞான இருளை க்ஷண காலம் ஒதுக்குவது போன்று அந்த மின்னல்களின் ஒளிதான் அந்தக் கரடுமுரடான ஒற்றையடிப் பாதையின் போக்கை அறிவிப்பதற்கு உதவியாக இருந்தன.

சுந்தரம் பிள்ளை திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே நடந்து கொண்டிருந்தார். பின் புறத்தில்—வெகு தூரத்தே மின் ஒளியில் தோன்றித் தோன்றி மறைந்து கொண்டிருந்த கோபுரத்தின் தோற்றம் அவரது மனத்தின் துக்கத்தை அதிகரித்தது. பாவம், எவ்வளவோ தலை முறைகளாக இருந்து வந்த ஊரையும், இருபது வருஷங்களாக நிர்வகித்து வந்த கோவிலையும்—அந்த ஒப்பில்லா மூர்த்திப் பிம்பங்களையும் விட்டுப் பிரிந்து போகும் துக்கம் அவருள்ளத்தில் சாமானியமானதாக இல்லை. என்ன செய்வது? அருமைகளும், அபாண்டங்களும் ஒன்று கூடி அவரை இந் நிலையில் துரத்திக் கொண்டிருந்தன. தாயைப் பிரிந்த கன்று போல் அவர் நடந்து கொண்டிருந்தார்.

ஒரு வழியாக, மூன்று மைல்களைக் கடந்தாகி விட்டது. இன்னும் ஆறு மைல் தூரத்தை இதே காட்டுப் பாதையில் கடந்துதான் கும்பகோணம் புகை வண்டி நிலயத்தை அவர் அடைந்தாக வேண்டும். ரயில் வண்டி வருவதற்கு இன்னும் நான்கு மணி காலம் அவகாசமிருப்பினும், அந்தத் தொலையா வழியின் போக்கை எண்ணி அவர் வேகமாகவே நடந்தார். கால்களிலிருந்த செருப்புக்களோ இந்தச் சந்தர்ப்பத்தில்தான் அவரிடம் ஒத்துழையாமை செய்து—அதன் இணைப்புக்கள் பூரணமாக அறுபட்டு விட்டன. அவைகளை ஆத்திரத்துடன் உதறி எறிந்து விட்டு வந்து கொண்டிருந்தார்.

அந்த வெற்றுக் கால்களுடனேயே சுந்தரம் பின்னும் ஒரு மைல் தூரத்தைக் கடந்து விட்டார். அப்பொழுதுதான் அவருக்குப் பலத்த சோதனையும் நேரிட்டது. இருளின் பயங்கரத்துடன் மேகங்களின் கர்ஜனைகள் பிரதிபலிக்கத் தொடங்கின. எங்கெங்கோ இருந்த தவளைகளெல்லாம் ஒன்றாகக் கூடி ஏக காலத்தில் ராக ஆலாபனையைத் தொடங்கின. ஒரு வளைவான திருப்பம் குறுக்கிட்டது. சுந்தரம் பிள்ளையின் கால்கள் வழி தவறி விட்டன. எதிரே யிருந்த இலந்தைத் தோப்பை அணுகினார். அடுத்த கணம், ஒரு பலத்த இடியோசையின் முழக்கம் அவர் நிலையைக் குலைத்தது. அவரது கால்களின் வேகம் பின்னும் துரிதமடைந்தது. ஆனால்—'ஐயோ, அம்மாடி!' என்ற ஓலத்துடன் கீழே உட்கார்ந்து தமது இடது காலைப் பற்றிக் கொண்டார். பாதையில் கிடந்த ஒரு கனமான கண்ணாடித் துண்டு வலுவுடன் அவரது காலை ஆழம் பார்த்து விட்டது. அதினின்றும் பெருகிக் கொண்டிருந்த குருதி வெள்ளம் அவரது கை முழுவதையும் நிறைத்தது. பரபரப்புடன் கைப்பையிலிருந்த ஒரு துண்டை யெடுத்துக் கிழித்து அந்தக் காயத்தின் மேல் ஒற்றியெடுத்தார். பின்னர், வெற்றிலைப் பெட்டியைத் திறந்து, சுண்ணாம்பை வாரி அதன் மீது அமுக்கி வைத்துத் துணியினால் கட்டினார். இதற்குள்ளாகவே, அரை மணி காலம் சென்று விட்டது.

பெரும் ஆயாசத்துடன் அவர் தோப்புக்குள் நுழைந்தார். கடவுள் சிருஷ்டியின் மேன்மையை உணர்த்தும் புல் தரை அவருக்குப் பட்டு மெத்தை போன்ற உணர்வைக் கொடுத்தது. ஒரு அடர்த்தியான மரத்தின் கீழே துண்டை விரித்து விட்டுப் படுத்தார். அவரது மன அலைகள் பின்னுக்குச் சென்று, தம்முடைய பிறவி வழியையும், அதில் கொந்தளித்த கரடு முரடுகளையும் கண் முன்னே கொண்டு வந்து கொண்டிருந்தன. காலிலிருந்த காயத்தின் வலியோ—'விண் விண்' என்று மின்சாரம் போன்று தாக்கிக் கொண்டிருந்தது. சில நிமிஷங்களிலேயே, தாம் ஒரு ஆகாய விமானத்தில் அமர்ந்து சுற்றிச் சுற்றி வளையமிடுவது போன்றொரு உணர்வு அவருக்கு ஏற்பட்டது.

சுந்தரம் பிள்ளையின் வாழ்க்கை கொஞ்சம் சோக ரசமானதுதான். சாதாரணமாகவே, நெறியும், பக்தியும், நாணயமும் உள்ளவரிடம்தானே கடவுளின் சோதனைகள் இருப்பது வழக்கம்!

மண்ணியாற்றுக்கும், கொள்ளிடத்துக்குமிடையில் அமைந்திருந்தது 'சேங்கனூர்' கிராமம். சுந்தரம் பிள்ளையும், அவரது முன்னோர்களும் அக் கிராமத்தையன்றி, வேறெதையும் அறியார். சுற்று வட்டாரத்தில் பதினைந்து மைல் விஸ்தீரணத்தில்—பிரசித்தமான கோவில்களோ, ஸ்தலமோ இல்லாமையால், சேங்கனூரின் சோமேசர் கோவில் அவ் வட்டாரத்தில் பிரசித்தமானதாக இருந்தது. வருஷத்துக்கு மூன்று முறைகள் திருவிழாக்கள் நடக்கும். சுந்தரம் பிள்ளையின் முன்னோர்கள் தாம் அக் கோவிலின் தர்மகர்த்தர்களாக இருந்து நிர்வாகத்தை நடத்தி வந்திருந்தனர். தகப்பனாரின் காலத்துக்குப் பின், சுந்தரம் கோவில் நிர்வாகத்தை ஏற்றுக் கொண்டார். அவரும், தமது இரு

பத்தைந்தாம் வயதில் தொடங்கிய பணியை, ஏறக்குறைய இருபது வருஷ காலம் செவ்வனே நடத்தி வந்துவிட்டார். நாலைந்து வருஷங்களாக, கிராமத்தில் தோன்றிய பொறாமையும், அசூயைகளும்தான் முற்றி—இன்று சுந்தரம் பிள்ளை தன்னந் தனியாக இத் தோப்பினிடையில் படுக்கும் நிலைக்குக் கொண்டு வந்திருந்தது.

சுந்தரம் பிள்ளை வாட்டசாட்டமான தேக முள்ளவர். பார்ப்பதற்குக் கம்பீரமும், படாடோபமும் அவரிடம் மிகையாகவே தோன்றும். அவரது பேச்சுக்களிலோ, ஒருவித அலட்சிய பாவமும், மிடுக்கும் நிறைந்திருக்கும். ஆனால், அவரது முகத்திலிருந்த நெறியின் ஒளியை — ரசிப்பதற்கோ, போற்றுவதற்கோ இன்றி, அக் கிராமம் பாபத்தைத் தான் செய்திருந்தது!

பிள்ளையவர்களிடமிருந்த ஒரு குறை மட்டும் என்னவெனில், அவரிடமிருந்த யதேச்சாதிகாரம்தான். கோவிலின் நிர்வாகத்தில் திருவிழாக்களையோ, பிரத்தியேகமான புறப்பாடுகளையோ நடத்துவதில் அவர் தம் யதேச்சாதிகாரத்தைத்தான் செலுத்தினார். தெய்வத்தின் சொத்தை யெடுத்து, தெய்வத்துக்கே செய்வதற்கு யாருடைய உத்தரவைக் கேட்க வேண்டும் என்பதுதான் பிள்ளையின் மனப்போக்கு. ஆகவே, ஊரில் புதிதாகத் தோன்றியிருந்த சில கயவர்களின் விஷ வித்துக்கள் ஊறிப் பதம் பெற ஆரம்பித்தன. நாளடைவில், வம்பும் தும்பும் ஒன்றாகக் கூடி, பிள்ளையவர்களின் நெறிக்கும் மாசு கற்பிக்க ஆரம்பித்தன.

சுந்தரம் பிள்ளை தமது இருபத்தெட்டாம் வயதில் விவாகம் செய்து கொண்டார். முப்பத்திரண்டாம் வயதில் ஒரு அருமையான மகனையும் பெற்றார். அதன் பின்னர், ஐந்து வருஷ காலம் வாழ்க்கையை இன்பமாகவே ஓட்டினார். அந்த ஆறாம் ஆண்டின் தொடக்கத்திலேயே கடவுளின் சோதனையும் அவரை ஆட்கொண்டது. ஊரில் வைசூரி நோயின் கொடுமை அதிகரித்தது. ஊராரின் உயிர்களையெல்லாம் விட்டு, சுந்தரம் பிள்ளையின் ஐந்து வயது மகனும், மனைவியும் ஒருவர் பின் ஒருவராகவே அந்நோய்க்குப் பலியாகிவிட்டனர்.




சுந்தரம் பிள்ளையின் அக்கிரமச் செயல்கள் பொறுக்காமலேயே, கடவுள் அத்தண்டனைகளைக் கொடுத்ததாக வம்புக்காரர்கள் திரித்துக் கூறினர். முக்கியமாக, அக்கரைச் சீமை போய் நாகரிக மூட்டைகளுடன் திரும்பியிருந்த சீமான்கள் பகிரங்கமாகவே பிரசங்கம் செய்துகொண்டிருந்தனர். அதில் முக்கியமானவன் — மைனர் சங்குப் பிள்ளை.

மைனர் சங்குப் பிள்ளையைப் பற்றின குறை யென்னவெனில், ஒரு 'நாலெழுத்து'த்தான் தெரியாதே யொழிய, மற்றப்படி எல்லாவித ஆடம்பரங்களும் அவனிடம் நிறைந் திருந்தன. கிராமத்தின் வம்பர்கள் சங்குப் பிள்ளையைத் தயாரித்து, கூடிக் கூடிப் பேசினர். முடிவாக சுந்தரம் பிள்ளை வேஷதாரி யெனவும், கோவிலின் சொத்தைக் கையாளுவதாகவும் கூறி, கோவில் சிப்பந்திகளுக்குள்ளாகவே பயங்கரப் புரட்சி ஒன்றையும் ஏற்படச் செய்தனர்.

இத்தகைய சம்பவங்களால், சுந்தரம் பிள்ளை மனம் முறிந்து தேகத்திலும் கூடச் சற்றே உருமாறினார். இதைவிட்டே எங்கேயாயினும் போய்விட வேண்டுமென்றுகூட அவரது உள்ளம் துடித்தது. ஆனால் இருபது வருஷங்களுக்கு மேலாக, அப் பழுக்கின்றி நடத்திய தேவஸ்தான நிர்வாகத்தை இந்தக் கயவர்களிடம் ஒப்படைத்து விட்டா செல்வது? அவரது மாசற்ற பக்தியினாலும் ஊழியத்தினாலும் பிரகாசமுற்றிருந்த பஞ்சமூர்த்திகளின் முகங்கள் அவரது கண்ணெதிரே தோன்றி அவரது இதயத்தையே அல்லவா கசக்கிப் பிழிந்தன!

முன்னும் பின்னுமாகச் சுந்தரம் பிள்ளை மனத்துடன் எவ்வளவோ போராடி விட்டார். விஷமிகளின் போக்கு நாளுக்கு நாள் அவரால் பொறுக்க முடியவில்லை. திடீரென்று ஒரு நாள் அம்பிகையின் காலிலிருந்த சிலம்புகளைக் காணவில்லை. பேரதிர்ச்சியான இச் செய்தியினால் அவர் துடி துடித்தார், கதறினார்.

பாவம்! உண்மை எப்படி வெளியாக முடியும்? கோவிலில் சம்பந்தப்பட்ட யாவரும் சத்தியமே செய்து விட்டனர். வெளியிலிருந்து நாராசம் போன்ற அவதூறான பாணங்கள் அவரை நோக்கிச் சீறின.

அன்று வெள்ளிக் கிழமை. சாயங்கால பூஜைகளின் முடிவில் பிள்ளையவர்கள் முருகன் சந்நிதியில் நின்று கொண்டு சிறு குழந்தை போல் தேம்பிக் கொண்டிருந்தார். ஏனெனில், அன்றிரவே அந்தக் கொடூரமான கிராமத்தையும், அவா பேணித் தொழுத மூர்த்திகளையும் விட்டுப் பிரிந்து சென்றுவிட வேண்டுமென்று அவர் திட்டமிட்டிருந்தார். இதே முருகன்தான், 'திருமைமலம்' என்ற ஸ்தலத்தில் தனக்குப் பணி செய்யுமாறு, அவரது மைத்துனன் உருவத்தில் அழைத்திருந்தான். ஆகவே, மனத்தை ஒருவாறு தேற்றிக் கொண்டு அன்றிரவே ஒன்பது நாழிகையளவில் தாம் வளர்ந்த வீடு வாசல் யாவற்றையும் துறந்து, ரெயில்வே ஸ்டேஷனை நோக்கிப் புறப்பட்டார்.

** ** **

மரத்தடியில் கிடந்த சுந்தரம் பிள்ளையின் உடல் சற்றே அசைந்தது. திடீரென அவருக்கு விழிப்பும் ஏற்பட்டது. ஆகா! அந்த இரண்டு மணி காலமும் அவர் எவ்வாறு தூங்கி விட்டார்! திடீரென்று ரெயிலின் ஞாபகம் அவருக்கு ஏற்படவும், பரபரப்புடன் எழுந்தார். காலின் வலியானது 'சுரீ'லென்ற உணர்வை ஏற்படுத்தியது. சோர்வுடன் மீண்டும் தரையில் சாய்ந்தபடியே பரிதாபமாக முனகினார். இந்நிலையிலேயே, அவரது கண்களும் இலேசாக மூடிக் கொண்டன.

அதிக நேரமில்லை, பதினைந்தே நிமிஷங்களுக்குப் பின் மீண்டுமொரு அதிர்ச்சியான உணர்வு அவருக்கு ஏற்பட்டது. சற்றுத் தூரத்தில் ஏதோ ஒரு ஆயுதத்தினால் பூமியைத் தோண்டும் சத்தம் கேட்டது. பிள்ளை உன்னிப்புடன் காதுகளைத் திருப்பியவண்ணம் கவனித்தார். பின்னர் சற்றுப் புரண்டும் வந்தார். அங்கு நடந்து கொண்டிருந்த ஆச்சரியமான ஒரு காட்சி அப்பொழுதுதான் அவரது கண்களுக்குத் தெரிந்தது.

சற்றுத் தூரத்தில் ஒரு சைக்கிளின் மீது ஒரு 'டார்ச்சு விளக்கு' எரிந்தபடியிருந்தது. அதன் கீழ உட்கார்ந்திருந்த, ஒரு சட்டை போட்ட உருவம்' விடுவிடென்று கையிலிருந்த இரும்புக் கம்பியினால் பூமியில் குழி தோண்டிக் கொண்டிருந்தது.

ஒரே விநாடி—மூன்றடி ஆழத்துக்கு உண்டான மண் மேல்புறம் குவிந்து விட்டது. அடுத்தபடியாக அந்த உருவம் தன் பக்கத்தில் வைத்துக் கொண்டிருந்த செப்புக் குடத்துக்குள் கையினால் துழாவி, அதிலிருந்த வஸ்துக்களை மேலே எடுத்து ஒவ்வொன்றாக எண்ணி அதற்குள் போட்டது. என்ன ஆச்சரியம்! மனித உடலுக்குப் பொருந்தாத அவ்வளவு சிறிய நகைகளையும் அவன் எங்கிருந்துதான்


**உங்கள் நரம்புகள் தளர்ந்தால்**
**வாழ்வே கசந்து விடுகிறது**

உடல் இளைக்கிறது
சக்தி குறைகிறது

○●○

★ துரதிருஷ்டம்
★ கவலை
★ அதிக வேலை
★ தீராத அஜீரணம்

இவைகள் நரம்பு பலவீனத்தின்
பொதுவான காரணங்கள்

★ மறதி
★ பயந்த தோற்றம்
★ மனப் பிராந்தி
★ தற்கொலை எண்ணங்கள்
★ பிரமை

இவைகள் நரம்பு பலவீனத்தின்
பயங்கர விளைவுகள்

○●○

வைரம், செம்பு, முத்து, முதலிய நவரத்தினங்களின் சேர்க்கை கொண்டதும் உலகப்பிரசித்தி பெற்றதுமான

**நவரத்ன கல்பம்**

உட்கொண்டு நரம்பு பலவீனத்தை விரட்டுங்கள்.



கவிராஜ் பண்டிட்
துர்க்காதத்த சர்மா
வைத்திய வாசஸ்பதி
அவர்களால்
கண்டு பிடிக்கப் பட்டது

○●○

இலவசப் பிரசுரங்களுக்கு எழுதவும்:

THE MANAGER:

**NAVRATNA KALPA PHARMACY**
JULLUNDUR CITY (India)
Grams: 'NAVRATNA' Phone: 401



பம்பாய் ஸ்ரீ கே. எஸ். மகாதேவய்யர் அவர்களின் குமாரத்தி சௌ. ராஜலக்ஷ்மிக்கும், கோபால சமுத்திரம் ஸ்ரீ நீலகண்டய்யரின் குமாரன் சிரஞ்சீவி சங்கரனுக்கும் ஜூலை 12உ. அன்று சென்னையில் மிகவும் சிறப்பாகத் திருமணம் நடந்தது. திருமணத்துக்கு ஏராளமான நண்பர்களும் உறவினர்களும் விஜயம் செய்து மணமக்களுக்கு வாழ்த்துக் கூறினர். மாலையில் நடந்த குமாரிகள் ராதா ஜயலக்ஷ்மி குழுவினரின் இசைவிருந்துக்கும் இரவு ஒன்பது மணிக்கு ஆலத்தூர் சகோதரர்கள் பாலக்காட்டு மணி மிருதங்கத்துடனும் பழனி சுப்புடுவின் கஞ்சிராவுடனும் செய்த இன்னிசைக் கச்சேரிக்கும் சென்னை நகரப் பிரமுகர்கள் விஜயம் செய்து சிறப்பித்தனர். வாழ்க ராஜலக்ஷ்மி - சங்கரன்!

சம்பாதித்திருப்பான்? அதியற்புதமா யிருந்த அவைகளுக்குத்தான் எத்தகைய ஒளி!

சுந்தரம் நிலை கொள்ளாது புரண்டார். கால்களால் பரபர வென்று உதைத்துக் கொண்டார். எதிரே நிகழ்ந்து கொண்டிருந்த காட்சியின் மூலம்—ஒருகணம் அவருக்கு மூச்சே நின்று விடும் போலிருந்தது. அவர் கையினாலேயே கோவில் பெட்டிக்குள் பந்தோபஸ்துக்களுடன் வைக்கப் பட்டிருந்த அந்தத் திருமூர்த்திகள் ஆபரணங்களல்லவா அவை! அட பாவி! என்ன துணிச்சல்?—

அவன் அந்தக் குடத்தை வெகு ஜாக்கிரதையுடன் குழிக்குள் வைத்துவிட்டு, மேல் புறத்து மண்ணையும், கற்களையும் பரபரப்புடன் உட்புறம் தள்ளினான். பின்னர், கைக் கோலினால் நன்றாகக் கிடித்து விட்டு, மேல் பரப்பையும் சமமாக நிரவினான். எல்லாம் ஒரு கணத்துக்குள் நடந்தேறின.

சுந்தரம் பிள்ளையின் உணர்வு தலைக்கு மீறி விட்டது. அவரது காலின் வலி யெல்லாம் பறந்தோடி விட்டன! மடியிலிருந்த சிறு கத்தியைப் பிரித்து எடுத்துக் கொண்டு, அவனை நோக்கி ஓடினார். "அடே பாவி, சங்குப் பிள்ளை! நீயா இக் காரியம் செய்கிறாய்?" என்ற பயங்கரமான பெருங் குரல் அவர் கண்டத்தினின்றும் எதிரொலித்தது!

சங்குப் பிள்ளை திக்பிரமை கொண்டு நின்று விட்டான். அப்பொழுது எதிர்பாராத இரு நிகழ்ச்சிகள் ஆச்சரியமாக நடந்தன! ஒரு மரத்தின் உயரமான வேர் தடுக்கியதால், சுந்தரம் கீழே சாய்ந்தார். அதே கணம்—

'ஐயோ' என்ற ஈனக் குரலுடன் சங்குப் பிள்ளை நின்ற இடத்திலேயே வெட்டிய மரமாகச் சாய்ந்தான்!

சங்குப் பிள்ளையின் தொண்டையிலிருந்து விக்கல்கள் வெளியாயின. கீழே விழுந்த சுந்தரம் பிள்ளை தன்னைச் சமாளித்துக் கொண்டு எழுந்திருக்கச் சிறிது நேரம் பிடித்தது. பின்னர், கையில் பிரித்தபடி யிருந்த கத்தியுடன் அவர் அவனை நெருங்கவும், அவனது தோற்றம் மிகப் பரிதாபமாகத் தெரிந்தது. அவனது கண்கள் மிரள மிரள விழித்தன. அவனது வாயிலிருந்து வெண்மையான நுரையும், வலது காலிலிருந்து சிவந்த உதிரமும் வெளியாகிக்கொண்டிருந்ததை அந்த 'டார்ச்சு' விளக்கின் ஒளி அறிவித்தது. இவை எல்லாவற்றையும் விட மேலான ஒரு ஆச்சரியமும் அப்போது நிகழ்ந்தது. சங்குப் பிள்ளையின் கால்களை விட்டுக் கிளம்பிய பாம்பு சுந்தரம் பிள்ளையின் கால்களையும் கூட உராய்ந்த வண்ணம் புதரை நோக்கி ஓடிற்று! ஒரு மின்னல் பொழுதிலேயே நடந்திருந்த சம்பவமும் அவருக்குத் தெளிவாக விளங்கியது.

இக் காட்சியைக் கண்ட சுந்தரம் சிலைபோல் நின்றுவிட்டார். அவரது உள்ளத்தில் குமைந்திருந்த ஆக்ரோஷம் மறைந்து, திகிலும், வியப்பும் ஒன்றாகக் கூடின. ஐந்து நிமிஷ காலம் செய்வதறியாது, அவனையும் சுற்றுப் புறங்களையும் நோக்கியபடியே நின்றார்.

வானத்தின் ஆர்ப்பாட்டங்களெல்லாம் ஓய்ந்து விட்டன. நிர்மலமான ஆகாய வெளியின் முகப்பில் தோன்றியிருந்த சுக்கிரன்—பரிபக்குவமடைந்த ஞானியின் இதயம் போல் காட்சியளித்தான். அதே ஒளியில்தான், சோமேசர் கோயிலின் கோபுரமும் சுந்தரம் பிள்ளையின் கண்களுக்கு இலேசாகத் தெரிந்தது. அவரது உடல் புல்லரித்தது. இரு கைகளையும் கூப்பித் தொழுதார். அவர் இதயத்தில் 'பளிச்'சென்று ஒரு எண்ணம் காருண்யத்துடன் உதயமாயிற்று!

பின்னர், சுந்தரம் அதிக நேரம் சிந்திக்கவில்லை. திடமான உறுதியுடன், அவனை அப்படியே தூக்கி, சைக்கிளின் மீது கிடத்திக் கையிலிருந்த துணிகளைக் கொண்டு அவன் உடல் நழுவாதபடி பிணைத்தார். சைக்கிளின் பிடிகளை இரு கைகளாலும் பற்றித் தள்ளியவாறே, எதிரேயிருந்த கோபுரத்தின் திசையை நோக்கிக் கிளம்பினார். அவர் ஊரையும், தெருவையும் சமீபித்தவுடன்

தான் கீழ்த் திசையில் நெருப்புக் கோளம் போன்ற வட்ட வடிவமான இளங் கதிரவன் தோன்றிக் கொண்டிருந்தான்.

நான்கு தினங்களாகி விட்டன. விஷயம் புரியாமலே, ஊர் இரண்டு பட்டிருந்தது! பலரும், பலவாறாக வெல்லாம் கூறிக் கொண்டிருந்தனர். ஆனால், அது கோவில் சம்பந்தமான தொரு புரட்சியாக மட்டிலும் இருந்ததே யன்றி முடிவானதொரு நிலையி வில்லை.

படுக்கையிற் கிடத்தப் பட்டிருந்த சங்குப் பிள்ளை இன்னமும் இறக்கவுமில்லை; எழுந்திருக்கவுமில்லை! அவனது சிகிச்சைக்காக வந்து போய்க் கொண்டிருந்த டாக்டர்கள் மட்டில் ஏதேதோ ஆறுதல்கள் கூறி விட்டுச் சென்று கொண்டிருந்தனர்.

சுந்தரம் பிள்ளையோ, நடந்தது முழுவதையுமே மறைத்து விட்டு, சங்குப் பிள்ளைக்குப் பாம்பினால் நேர்ந்து விட்ட கதியை மட்டுந்தான் ஊராருக்கு விளக்கி யிருந்தார். மறு நடையிலேயே சென்று சங்குப் பிள்ளையின் புதையலையும் தோண்டி எடுத்து அவைகளைக் கோவிலிலும் கொண்டு வந்து சேர்ப்பித்தார். சில தினங்களுக்கு முன் காணமற் போன அம்பாளின் கால் சிலம்புகளும்கூட பத்திரமாகவே வந்து சேர்ந்து விட்ட உண்மையை, அவர்களிருவரையும், அந்தத் தேவியையும் தவிர வேறு யார் தான் அறிய முடியும்!

பின்னும் நான்கு தினங்கள் சென்று விட்டன. மைனர் சங்குப் பிள்ளை சுய உணர்வுடன் கண் விழித்தான். நடந்தவையெல்லாம் அவன் ஞாபக சக்திக்கு வந்தன. அப்பொழுதுதான் தன் உடலைச் சுமந்து வந்து ஜாக்கிரதையுடன் வீட்டில் சேர்ப்பித்த மனிதன் - அன்றிரவு உருவிய கத்தியுடன் காட்சியளித்த அதே சுந்தரம் பிள்ளைதான் என்பதையும் அவன் கேள்வியுற்றான்.

அடுத்தகணம், படுக்கையில் கிடந்த மைனரின் செயல் மிக விசித்திரமாகவும், சற்றே பயங்கரமாகவும்கூட இருந்தது! மேலிருந்த துணிகளை உதறியெறிந்து விட்டு, இடையிலிருந்த ஒரே அழுக்கு உடையுடன் வெளிப்புறத்தை நோக்கி ஓடினான்!

அன்றும் வெள்ளிக் கிழமை. சோமேசர் ஆலயத்தினுள் சாயங்கால பூஜையின் விசேஷங்களெல்லாம் நிகழ்ந்து கொண்டிருந்தன. சுந்தரம்பிள்ளை முருகன் சந்நிதியில் மெய் மறந்த நிலையில் நின்று கொண்டிருந்தார். வெளிப்புறத்திலிருந்து வந்து கொண்டிருந்த கூச்சலினால் யாவருமே திகைப்புடன் திரும்பினர். அடுத்த கணம் ஆவேசம் கொண்டவன் போன்ற தோற்றத்துடன் ஓடி வந்த சங்குப் பிள்ளை தெய்வ சந்நிதியில் விழுந்து புரண்டான். அவனது விழிகளிலிருந்து மடை திறந்தாற் போன்ற நீர்த் தாரைகள் வெளியாகிக் கொண்டிருந்தன. அக்கணம் பரபரப்பும், நிசப்தமும் ஒருங்கே நிறைந்து விட்டன. சுந்தரம் பிள்ளையின் கால்களைப் பற்றிய சங்குப்பிள்ளை மனத்தைத் திறந்து, அன்றிரவு நடந்த முழு வரலாற்றையும் உரக்கக் கூறினான்!

கோவிலில் தரிசனத்துக்காக வந்திருந்த ஜனத்திரள் மிகவும் ஆச்சரியத்துடன் இந்த நிகழ்ச்சியைக் கவனித்தது. சங்குப் பிள்ளை கூறியதைக் கேட்ட அவர்கள், ஆச்சரியப் படாமல் இருக்க முடியாதல்லவா?

இந் நிகழ்ச்சியினால் சுந்தரம் பிள்ளையின் கண்களிலிருந்து, துக்கமும், ஆனந்த பாஷ்பமும் பெருக வாரம்பித்தன. உணர்ச்சியின் மிகுதியினால் அவரது நெஞ்சினின்றும் வார்த்தைகள் வர மறுத்தன. அவர் பரபரப்புடன் சங்குப் பிள்ளையைப் பிடித்துத் தூக்கினார். "மனிதன் தவறுதல் செய்வது சகஜம் தானே?" என்ற ஒரே வார்த்தையைக் கூறுவதற்குள் அவர் ரொம்பவும் சிரமமடைந்தார். ஆனால் சங்குப்பிள்ளையின் மனம் திருப்தியுறாமல் தவித்தது.

"கடவுளே, நான் உண்மை பக்தர் சுந்தரம் பிள்ளையின் மேல் வீண் அபவாதங்கள் கற்பித்தேன்; அபாண்டங்களைத் துணிந்து செய்தேன்; அதற்குத் தகுதியான தண்டனைகளைப் பெற்று விட்டேன்!" என்று பல தடவைகளாக உரக்கக் கூவினான் மைனர் சங்குப் பிள்ளை. அப்பொழுதுதான் முருகன் சந்நிதியிலிருந்த ஆலாட்சி மணியும் 'ஓம், ஓம்' என்று இசைக்கத் தொடங்கியது.



தஞ்சை திரு ஏ. வி. அருணாசலத் தொண்டைமான் அவர்களுக்கும், முத்துப்பேட்டை கோவிலூர் திரு வீரையா வள்ளானத் தேவர் புதல்வி செல்வி சரோஜினிக்கும் ஜூன் 25ல் அன்று அமரர் டி. கே. சி. வகுத்த தமிழ்த் திருமண முறைப்படி தமிழில் திருமணம் நடைபெற்றது. இத் திருமண விழாவுக்குத் திரு சா. கணேசன் தலைமை தாங்கினார். மணமக்களுக்குத் திரு தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான் வாழ்த்துரை வழங்கினார். வாழ்க மணமக்கள்!


...கனவான்களே...
...நேர்த்தியான பூச்சிற்கு ...
...பார்ப்பதற்கு கவர்ச்சிகரமானது...
...நீடித்து உழைக்கும்...
...உட்பூச்சிற்கோ, வெளிப்பூச்சிற்கோ...
...தொழிற்சாலைகளுக்கும், வீடுகளுக்கும் ...
...அதைப்பற்றி சந்தேகமே இல்லை...
...ஆம்! எனக்குத் தெரியும் அதுதான், எல்லோரும் விரும்பும் ஸிந்தடிக் எனமல் ...
ஷாலிமார் சூப்பர்லாக்
ஸிந்தடிக் எனமல்
SHALIMAR PAINT, COLOUR & VARNISH CO., LTD.
Post Box 136, Madras 1
Importers & Distributors for Ceylon :
LEWIS BROWN & CO., LTD., POST BOX 88, COLOMBO

போட்டிக் கதை:

# தந்தையின் கடிதம்

வி. சபாபதி

(சென்ற வாரத் தொடர்ச்சி)

டாக்டர் இரண்டொரு கடிதங்களைப் படித்திருப்பார். அதற்குள் கண்ணன் மூன்றாவது கடிதத்தை எடுத்து நீட்டினான். டாக்டர் மறுபடியும் தூக்கம் போட ஆரம்பித்து விட்டார். அவரை எழுப்பித் தொந்தரவு செய்யக் கூடாதென்று எண்ணிக் கண்ணன் கடிதங்களை அப்படி அப்படியே வைத்து விட்டு உள்ளே சென்றான்.

ஒரு சில நிமிடங்கள் கூடச் சென்றிருக்காது. அதற்குள் ஓடி வந்தான், டாக்டரை அழைத்துக் கொண்டு போக ஒரு வார்டு பையன்.

"ஸார், ஸார்..." என்று கூவினான் அவன். டாக்டர் திடுக்கிட்டு விழித்தெழுந்து, "என்னடா விஷயம்?" என்று கேட்டார்.

"ஒரு அவசரக் கேஸு... பிரசவக் கேஸுங்க."

டாக்டர் என்றாலே குணசேகருக்கு யாருமே ஈடு இணையாக முடியாது. தூக்கமும் ஏக்கமும் துள்ளி யோடி விட்டன. எல்லாவற்றையும் அப்படி அப்படியே விட்டுவிட்டுப் பிரசவ விடுதிக்குப் புறப்பட்டு விட்டார். கேஸ் கடுமையானதுதான். ஆனால் டாக்டர் குணசேகர் கை வைத்தால் தோல்வி என்பதையே எதிர்பார்க்க முடியாது. அவ்வளவு நுணுக்கமான அறிவும் சமயோசிதமும் வாய்ந்தவர். எங்கும் ஒரே அமைதி. அந்த அமைதியில் டாக்டரின் கைத் திறமையையும் சுறுசுறுப்பையும் வெளிப்படுத்தின, அந்த அறையிலிருந்து வெளிவந்த டக் டக்கென்ற கத்தி, கத்தரிக் கோலின் சத்தம். அதோடு கலந்து ஆண் குழந்தையின் அழு குரலும் வந்தது. அந்தக் குரல் அங்கு திகைத்து நின்று கொண்டிருந்த அத்தனை பேர் உள்ளத்திலும் ஆனந்தத்தை உண்டுபண்ணியது. எந்தக் குழந்தையை வெறுத்து வலிதாங்காது பிரசவத்தில் அவதிப்பட்டாளோ, அதே குழந்தை அவள் பார்வைக்கு விருந்தாய்ப் பக்கத்தில் கிடந்தது. அவ்வளவுக்கும் டாக்டர் குணசேகர் தான் பொறுப்பாளி.

அங்கிருந்து நேராகக் காரியாலயத்துக்கு வந்தார். அப்பொழுதுதான் அவர் வீட்டிலிருந்து தூக்கத்தில் படிக்காது வைத்து விட்டு வந்த கடிதங்கள், தினப் பத்திரிகை எல்லாவற்றையும் எடுத்துக் கொண்டு வந்து வைத்தான் சேவகன் கண்ணன். அரைத் தூக்கத்தில் படித்த கடிதங்களை மறுபடியும் ஒன்றன்பின் ஒன்றாகப் படித்துக் கொண்டே வந்தார். கடைசிக் கடிதத்தைக் கையில் எடுத்ததும் தான் அதில் தம் தந்தையின் கையெழுத்தைக் கண்டார். கையெழுத்தைக் கண்ட அவர் கண்களுக்கு முன்புதான் இவ்வளவு ஞாபகம் தோன்றி நடனம் செய்யத் தொடங்கிற்று. எண்ண அலைகளில் மிதந்து கொண்டே சென்ற அவர் கண்கள் எழுத்து அலைகளைத் தாங்கி நின்ற கடிதம் தன் கையிலிருப்பதை நினைவூட்டின.

** ** **

கடிதத்தைப் படிக்க ஆரம்பித்தார்:

'அன்பு மிக்க குணசேகர்,

நான் உன்னை விட்டுப் பிரிந்துவிட்டேனென்று கவலை வேண்டாம். உன்னைக் காண வேண்டுமென்ற அவா நெடு நாட்களாக என் மனத்தில் ஊசலாடிக் கொண்டிருந்தது. சந்தர்ப்பம் துணை செய்யவே கண்டது மட்டுமல்ல, உண்மையாகவே திகைச்சை பெறவும் நேர்ந்தது.

உன்னுடனேயே இருந்த காலத்தைக் கழிக்க எனக்கு விருப்பம்தான். ஆனால் என் மனம்தான் இடம் கொடுக்கவில்லை. காரணம் உண்டு. அதை நான் எத்தனை நாட்களுக்கு மறைக்க முடியும்?

நீ கடைசி வருஷம் படித்துக் கொண்டிருக்கும் பொழுது கோடைக்கால விடுமுறைக்கு வருவாய் என்ற நோக்கத்தோடு பல விஷயங்களை உன்னிடம் தெரிவிக்க ஆவலாய்க் காத்திருந்தேன். ஆனால் நீ வந்ததும் வராததுமாய்ச் சாரதாவைக் காதலித்துக் கலியாணம் செய்து கொள்ள நிச்சயித்து விட்டாய் என்ற செய்தியைக் கேட்க, என் மனம் பதைபதைத்தது. சொல்லவிருந்த ரகசியத்தைச் சொல்லுவதற்குச் சந்தர்ப்பமில்லாது செய்து விட்டாய். பல முறையும் சாரதா வேண்டாமென்று கூறிப் பார்த்தேன். நீ என் வார்த்தைகளை ஏற்றுக் கொள்வதாகத் தெரியவில்லை. அதிலும் உங்களுடைய காதல் கடலிலும் ஆழமுடையதாக விருந்ததால் என்னுடைய முயற்சி சிறிதும் பலிக்கவில்லை.

சாரதாவை நீ மணந்து கொண்டதில் எனக்குக் கொஞ்சம்கூட விருப்பம் கிடையாது. காரணம் அவள் வேறு குலத்தைச் சேர்ந்தவள் என்பதனாலும், உயர்ந்த படிப்பு படித்தவள் என்பதாலும் அல்ல. வேறொரு முக்கிய காரணமும் உண்டு. அதை அப்பொழுதே உனக்குக் கூறியிருந்தால் நீ அவளை அடியோடு வெறுத்திருப்பாய். அது மட்டுமா, உங்களிருவரிடையே நிலவிய நட்பு பகையாக மாறி உங்களில் யாராவது ஒருவருடைய உயிருக்கே ஆபத்து நேர்ந்திருக்கலாம். இதைத் தடுக்க ஒரே உபாயம்தான் தோன்றிற்று எனக்கு. அப்படியே உங்களில் ஒருவருக்கும் இடையூறு நேராமலும் உங்கள் திருமணத்துக்கு யாதொரு தடையுண்டாக்காமலும் நான் வீட்டை விட்டு வெளியேறி விட்டேன்.

மற்றொரு விஷயம் சொல்ல விழைகிறேன். இதை உன் மனத்திலேயே வைத்துக் கொள். சாரதாவுக்கும் வெளியிடாதே. வெளியிட்டால் உன் வாழ்வுக்குத்தான் குந்தகமேற்படும். இது உனக்கும் தெரிந்திருக்கட்டும் என்று நான் எழுதுகிறேன்.

சிற்றரச நல்லூர் என்பது பல வருடங்களுக்கு முன்பு ஒரு சிறு கிராமமாக விருந்தது. அங்கு ஒரு திண்ணைப் பள்ளிக்கூடத்து உபாத்தியாயராக இருந்தேன். நீயும் உன் தாயும்தான் என்குடும்பத்துச் சொத்து. மிகவும் ஏழையாக விருந்த காலம். அப்பொழுது உனக்கு வயது நான்கு இருக்கும்.

பிறகு உன் தாய் நிறைந்த கர்ப்பிணியானாள். வசதியற்ற நம் வீட்டில் அவளை வைத்திருக்கப் பிரியப்படாமல் ஸ்ரீரங்கத்திலிருந்த உன் மாமன் வீட்டுக்கு அனுப்பி வைத்தேன். பெண் குழந்தை பிறந்து தாயும் குழந்தையும் சுகம் என்ற செய்தி என் காதுக்கு எட்டியது. ஆனால் குழந்தை பிறந்த ஒரு வாரத்துக்குள் உன் தாய் உன்னையும் என்னையும் தனியே விட்டு விட்டுப் பத்தியக் கோளாறினால் மீளாத் தூக்கத்தில் ஆழ்ந்தாள். பச்சிளங் குழந்தையை நான் கொண்டு வந்து என்ன செய்ய முடியும்! உன் பாட்டியிடமே

விட்டு வைத்தேன். ஆனால் அந்தக் குழந்தை அங்கு ஆறுமாத காலம்கூட இருக்கவில்லை. ஒரு நாள் திடீரென்று குழந்தை காணாமல் போய் விட்டது என்று ஒரு கடிதம் வந்தது. நானும் என்னாலான அளவு எவ்வளவோ முயன்று தேடிப் பார்த்தேன். பயனில்லாமற் போய் விட்டது. இந்த விவரம் உனக்கும் நினைவிருக்கலாம்.

பல வருடங்கள் ஓடி மறைந்தன. நானும் அந்தக் குழந்தையை மறந்து விட்டேன். நீயும் படித்துப் பெரியவனானாய். நம் குடும்பமும் வளர்ந்தது. உன் படிப்பு முடிந்து கடைசி வருடம் கோடைக் கால விடுமுறைக்கு வீட்டுக்கு வர இரண்டு மூன்று நாட்களுக்கு முன்புதான் திடீரென்று ஒரு கடிதம் உடனே என்னைப் புறப்பட்டு வரச் சொல்லி, சென்னை திருவல்லிக்கேணி பிரபல டாக்டர் கிருஷ்ணா ராவ் அவர்களிடம் சிகிச்சை பெற்று வந்த பராங்குசம் ரெட்டியார் அவர்களிடமிருந்து வந்தது. நானும் தாமதிக்காமல் புறப்பட்டுப் போனேன். அவர் கொடிய வயிற்று வலியால் அவதிப் பட்டுக் கொண்டிருந்தார். என்னைப் பார்த்ததும் கடுமையான வலியின் சோகம் குடி கொண்டிருந்த அவர் முகத்தில் ஒரு மாறுதல் ஏற்பட்டது. என்னை அருகில் உட்கார வைத்துக் கொண்டு "முதலியாரே, இனி நான் பிழைக்கப் போவதில்லை. இறப்பதற்கு முன் ஓர் உண்மையை உங்களிடம் சொல்ல விரும்புகிறேன். இல்லையென்றால் என் மனம் நிம்மதியடையாது. இது நீண்ட நாட்களாக என் மனத்தில் இருந்து வரும் செய்தி" என்றார். அவர் மேலும் தொடர்ந்து, "எனக்கு வெகு நாட்களாகக் குழந்தையே கிடையாது. பெண் குழந்தை மீதிருந்த விருப்பத்தால் ஸ்ரீரங்கத்திலிருந்து உமது குழந்தையை ஆள் வைத்து அபகரித்துக் கொண்டு வந்து விட்டேன். அதை ஆந்திர தேசத்தில் குண்டூர் ஜில்லாவிலுள்ள தாடேபல்லிக்கூடம் என்ற ஊரில் இருந்து வந்த என் நண்பர் ஒருவரிடம் விட்டு வைத்திருந்தேன். அங்கிருந்து இரண்டு மூன்று வருடங்களுக்குப் பிறகு அழைத்துக் கொண்டு வந்து வளர்த்து வருகிறேன். குழந்தை வளர்ந்து குமரியாகி உயர்ந்த படிப்பு படித்துக் கொண்டிருக்கிறாள். நானோ வயதாகி இறக்கும் தருவாயில் இருக்கிறேன்.

அவளுக்கென்று நன்னிலம் தாலுக்காவில் பதினைந்து ஏக்கர் நிலமும் மயிலாப்பூரில் இரண்டு வீடுகளும் எழுதி வைத்திருக்கிறேன். இனி அவளுக்குத் தாங்கள்தான் தந்தை. அவள் நலம் தங்கள் பாரம். இந்த விஷயம் அவளுக்கு இது வரையில் தெரியாது. விடுமுறைக்கு வருவாள். அப்பொழுது அவளிடம் விவரமாக இதைத் தெரிவிக்கிறேன். தாங்களும் இதற்குள் ஒரு பயணம் வந்து விட்டுப் போக வேண்டியது" என்றார்.

காணாமல் போன என் பெண் தானே வந்து சேர்வதை நினைத்து மிக்க சந்தோஷப்பட்டேன்.



அளவு கடந்த ஆனந்தத்துடன் அவசர அவசரமாக ஊர் திரும்பினேன். நான் வீடு திரும்பிய மறு தினமே அவர் இறந்து விட்டார். எனவே இந்த விவரங்களை அந்தப் பெண் அறிந்திருக்கவே முடியாது. பாவம், அந்த மனிதனின் அந்திம எண்ணத்தை நிறைவேற்ற முடியாதவனாகி விட்டேன். அது மட்டுமா, நடந்த சமாசாரங்களை உன்னிடம் தெரிவிக்கலாமென்று ஆவலுடன் உன் வரவை எதிர்பார்த்திருந்தேன். ஆனால் நீ காதல் திருமணத்துக்கு வேண்டிய ஏற்பாட்டுடன் திரும்பியதைக் கேட்க எனக்குச் சந்தோஷம் தான். அத் திருமணக் கோலத்தில் காணப் போகும் அப் பெண்மணி உன் அருமைத் தங்கை தான் என்பதை உணர்ந்ததும் என் காதுகளில் ஈயத்தை வார்த்ததுபோலிருந்தது.

உன் மனத்தை ஆராய்ந்தேன். நீ சாரதாவைத் தவிர வேறு ஒருவரையும் மணக்க மாட்டாய் என்பதை உணர்ந்தேன். இனி யோசித்துப் பயனில்லை என்ற முடிவுக்கு வந்து வீட்டை விட்டே வெளியேறி விட்டேன். உங்களைப் பார்த்



தக்கொண்டிருக்க என் மனம் இடம் தராது. எனவே தலைமறைவாய் இருந்து வர முடிவு செய்தேன். எல்லாவளவும் உங்கள் நன்மையைக் கோரித்தான். உங்கள் இருவருக்கும் என் ஆசி.

உன் அன்புள்ள தந்தை
சாந்தமூர்த்தி முதலியார்.''

என்று எழுதியிருந்ததைப் படிப்பதற்குள் குண சேகரின் முகம் வெளுத்து விட்டது. வாழ்வி லேயே ஒரு ஏமாற்றம். நினைக்க நினைக்கப் பெரும் அருவருப்பு. அப்படியே அந்தக் கடிதத்தைத் தூக்கி மேஜையின் மீது எறிந்தார். யாரை நோவது! விதியின் விளையாட்டால் விளைந்த தொரு சம்பவம். 'நான் என் தங்கையையா காத லித்து மணந்தேன்' என்ன கொடுமை! இதை நினைக்கவும் என் மனம் நாணமுறுகிறதே' என்று மேலும் மேலும் யோசனை பலத்துக் கொண்டே போயிற்று. தலை கனத்துக் கண்கள் 'கிர்'ரென்று சுற்றின.

தந்தையின்மீது கோபித்துக் கொண்டார். 'இவ்வளவு வருடங்கள் மறைந்திருந்த உண் மையை இப்பொழுது ஏன் வெளியிட வேண்டும்! இந்தப் பாழும் மனிதனுக்குப் புத்தி என்பதே கிடையாது. காணாமல் போனவர் கடிதம் வேறு எழுதி ஏன் என் மனத்தை இப்படிப் புண்படுத்த வேண்டும்! இருதயமே வெடித்து விடும் போலிருக்கிறதே!' என்றெல்லாம் கேள் விக்குமேல் கேள்வி எழுந்து அவரைத் துன் புறுத்தியது. ஆத்திரமெல்லாம் அப்பா வின் மீதுதான். ஆம்! அவர் அப்பாவால் விளைந்ததுதான் அவ்வளவு மனக்கசப்பும். 'கும்மா இருந்த சங்கை ஊதிக் கெடுத் தான் ஆண்டி' என்பது போல அமைதி நிலவிய டாக்டரின் குடும்பத்தில் ஓர் அல்லலை எழுப்பி விட்டது அந்தக் கடிதம். இது பெரிய கொடுமைதான். வயதான தந்தைக்கு நிதானக் குறைவு என்பதை யாரும் ஒத்துக் கொள்ளத்தான் வேண்டும்.

மானத்தைப் பெரிதெனக் கருதும் குண சேகர் அவர்மனைவி இருவருடைய மனச் சாட்சியும் எப்படி இந்த விஷயத்தை ஏற் றுக் கொள்ளும். எவ்வளவு அன்பு கலந்த வாழ்க்கையைக் கடைப்பிடித்திருந்தாலும் அண்ணன் தங்கை தம்பதிகளாயினர் என்பதை அறிய யாருக்குமே அருவருப்பு தட்டத்தான் தட்டும். பித்துப் பிடித்தவ ரைப் போன்ற தோற்றம். ஏதேதோ வாய்க்கு வந்தவைகளை யெல்லாம் பிதற் றினர். பிரமனின் கேவலச் செயலை நினைக் கும்போதெல்லாம் அடக்க முடியாத ஆத் திரம். "சீ, இவ்வளவையும் பார்த்துக் கொண்டிருக்கிறதே பாழும் உலகம். இந்த விஷயம் சாரதாவின் காதுக்கு எட்டினால் என்ன நினைப்பாள்! உயிரையே யல்லவா விட்டு விடுவாள். எப்படி இனி அவள் மூகத்தில் விழிப்பது! அதைவிட இறப் பதே மேல்.

"ஏன் சாக வேண்டும்! பாவம், சாரதா தான் என்ன செய்வாள்! இருவருக்கும் தெரியாமல் நடந்த விஷயமல்லவா இது. என் வாழ்க்கையையே குலைத்து விட்டதே வாழ விடாத வறட்டு வையகம். போதும், போதும்; நான் வாழ்ந்த தெல்லாம் போதும். வாழ்க்கையில் அனுபவித்ததும் போதும். இனி எங்காவது ஓடிப் போக வேண்டியதுதான்......"

சற்றுநேரம் யோசித்துவிட்டு "ஏன் ஓட வேண் டும், என் குற்றமா இது! மனச்சாட்சிக்குத் துரோக மில்லாது காதலித்து மணந்த எங்கள் களங்க மற்ற வாழ்க்கைக்குத் துரோகம் செய்தது இயற்கைதான். அதற்கில்லாத மானக் கேடு எனக்கென்ன இருக்கிறது!"–இப்படியே மேலும் மேலும் எண்ணங்கள் வலுக்கவே உஷ்ணம் தலைக்கேற ஆரம்பித்து விட்டது. டாக்டரல்லவா! இதற்கு மேல் யோசித்தால் சித்தமிழந்து விடுவோ மென்று தெரியும். சட்டென்று நிமிர்ந்து மேஜை யின் மீதிருந்த மணியை 'டக்'கென்று தட்டினர்.

மணி சப்தம் அடங்குவதற்குள் ஆஜராக வந்து நின்றான் ஆபீஸ் சேவகன் கண்ணன்.

"கண்ணு, அம்மா இந்தக் கடிதத்தைப் படித் தாங்களா!"

"தெரியாதுங்களே, எசமான்!"

'படித்திருந்தால்...' என்ற சந்தேகம். அப்பப்பா, அவமானம் அவரை அணு அணுவாகப் பிடுங்கித் தின்று விடும் போலிருந்தது.

அந்தச் சமயத்தில் உள்ளே நுழைந்தாள் அகஸ்மாத்தாக டாக்டர் குணசேகரின் மனைவி சாரதா. டாக்டருக்குத் தூக்கிவாரிப் போட்டது. ஏதோ பெரிய தவறிழைத்து விட்டவரைப் போல

வெட்கத்துடன் தலை குனிந்து கொண்டார். மேற்கொண்டு பேசவே மனம் வரவில்லை. சந்திரனைப் போல் பிரகாசித்துத் தம் உள்ளத்தை மகிழ்வித்த அதே சாரதாவின் முகத்தில் ஏதோ களங்கம் குடிகொண்டு விட்டதாக எண்ணம். அதே எண்ணம்தான் அவர் கண்ணையும் மறைத்துவிட்டது. அதற்குக் காரணம் அவர் பொல்லாத மனசுதான். மனசு ஒரு மண்பாண்டமாயிற்றே. உடைந்தால் கூடாது, ஒட்டினாலும் நிற்காது. அதே மனம் அருமைச் சாரதாவை அன்புக் கனியாகக் கருதியது. ஆனால் ஓர் அர்த்தமற்ற கடிதத்தைக் கண்டு தன் போக்கையே மாற்றிக் கொள்ளவும் செய்தது. இந்த மனசுதான் எத்தனை பொல்லாதது!

குணசேகரின் மனக் கொந்தளிப்பு சாரதாவுக்கு எப்படித் தெரியும்! என்றைக்கும் போல் குதூகலமாக இருக்கக் கூடிய தன் கணவரின் முகத்தில் தோன்றிய மாறுதல் கையில் பிடித்த கண்ணாடிபோல் காட்சியளித்தது. ஏதோ பிரசவ கேஸ் தோல்வி யடைந்திருக்கு மென்ற சந்தேகம். அவளும் பேசாது அவரும் பேசாது சில விநாடிகள் அமைதி நிலவியது. சட்டென்று நிமிர்ந்து பார்த்தார் குணசேகர். எப்பொழுது மிருந்த ஆனந்தப் புன்முறுவல் சாரதாவின் முகத்தில் தாண்டவமாடிக் கொண்டிருந்தது. அவள் பக்கத்தில் மற்றொரு யுவதியும் நின்று கொண்டிருந்தாள். எண்ணக் கடலில் கண்ணை மூடிக் கிடந்த குணசேகர் எதிரில் நின்று கொண்டிருந்த அந்த யுவதியையும் சாரதாவையும் அமரும்படி தலையை அசைத்து நாற்காலியைக் காண்பித்தார். இருவரும் அமர்ந்தனர்.

சாரதா தன் கையிலிருந்த ஒரு கடிதத்தைக் குணசேகரிடம் நீட்டினாள். கடிதத்தைக் கையில் வாங்கிப் படிக்க ஆரம்பித்தார்:

அன்புடைய சாரதாவுக்கு,

என் அருமைக் கண்ணே! இந்தக் கடிதத்தை எழுதும் நான்தான் உன் தந்தை. என் தந்தைதான் இறந்து விட்டாரே என்று சந்தேகப் படுவாய். காரணம் காலத்தால் ஏற்பட்ட மாறுதல்தான்.

திருவல்லிக்கேணி பராங்குசம் ரெட்டியார் எனக்கு நெருங்கிய நண்பர். அவருக்கு நீண்ட காலமாய்க் குழந்தையே இல்லையென்ற காரணத்தால் ஸ்ரீரங்கத்திலிருந்து ஒரு அனாதைக் குழந்தையை அழைத்துக் கொண்டு வந்து என்னிடம் ஒப்படைத்தார். நான் அப்பொழுது ஆந்திர தேசத்தில் குண்டூர் ஜில்லாவைச் சார்ந்த நாடே பல்லிக்கூடம் என்ற ஊரில் இருந்து கொண்டு பக்கத்தில் மங்களகிரி என்ற இடத்திலுள்ள பெரிய சிமிட்டி உற்பத்தி கம்பெனியில் சமாஸ்தா உத்தியோகத்திலிருந்து வந்தேன். நீ அப்பொழுது இரண்டு வயது குழந்தையாக இருந்தாய்.

ரெட்டியார் மிகவும் தெரிந்த மனுஷராகையால் அவர் விருப்பத்துக்கு மறுக்காமல் அந்தக் குழந்தையை நம் வீட்டிலேயே வளர்த்து வந்தேன். உன்னையும் அந்தக் குழந்தையையும் பார்த்தால் வித்தியாசம் கண்டு பிடிக்கவே முடியாது. பார்வைக்கு நீங்கள் இருவரும் ஒரு தாய் வயிற்றில் பிறந்த இரட்டைக் குழந்தைகள் என்று யாருமே சந்தேகப்படுமளவில் ஒரேமாதிரி இருப்பீர்கள். நானும் உங்களை வித்தியாசமின்றி வளர்த்து வந்தேன். நன்றாக இருந்த உன் தாய் திடீரென்று டைபாய்ட் ஜுரத்தால் பீடிக்கப்பட்டு இறந்தாள். அதுவே என் வாழ்வில் முதல் தோல்வி. மனைவியை இழந்ததும் உன்னை எப்படி வைத்துக் காப்பாற்றப் போகிறேன் என்ற நிலையில் விழுந்து விட்டது எனக்கு. அப்பொழுதுதான் தோன்றிற்று ஓர் அவசர முடிவு. அதன்படியே அந்த ரெட்டியார் அவர்களுக்கு உடனடியாக வந்து குழந்தையை அழைத்துக் கொண்டு போகும்படி ஒரு கடிதம் எழுதினேன். ரெட்டியார் வருகிறார் என்று தெரிந்ததும் ஒரு சின்னச் சூழ்ச்சியும் செய்து வைத்திருந்தேன்.

சாரதா! நீதான் என் சொந்தக் குழந்தை. தாயற்ற உன்னை நான் வைத்துக்கொண்டு அவஸ்தைப் படுவதைவிட ரெட்டியாரிடம் அனுப்பி விட்டால் அவர் சொத்தெல்லாம் உனக்கே சேர்ந்துவிடும், நீயும் என்னுடன் கிடந்து கஷ்டப் படவேண்டியதில்லை என்று நிர்மானித்து ரெட்டியார் வந்த சமயம் உன்னைத்தான் அவருடன் அனுப்பி வைத்தேன். சூதும் வாதும் அறியாத அவரும் உன்னைத் தன் மகள் என்று அழைத்துக் கொண்டு சென்றார். அதற்குப் பிறகு உன்னைச் சந்திக்கவே எனக்குச் சந்தர்ப்பம் வாய்க்கவில்லை. சந்தித்து இந்த உண்மையை வெளியிட்டிருந்தாலும் உலகம் ஏற்றுக் கொண்டிருக்காது. நீயும் உன் தந்தையும் அதை ஒப்புக் கொள்ளக்கூட மாட்டீர்கள் என்றே மறைத்து விட்டேன்.

ரெட்டியாரின் மகள் கள்ளங்கபடமற்று என்னுடனேயே இருந்து எல்லா கஷ்டங்களையும் அனுபவித்துக் கொண்டு வருகிறாள். எவ்வளவோ ஒத்தாசை. நீ இருந்து செய்ய வேண்டிய பணிவிடைகளையெல்லாம் அந்தப் பெண் செய்து வந்திருக்கிறாள். நன்றாக அனுபவித்து வாழப் பிறந்த அவளைத் தரித்திர வாழ்வுக்கு ஆளாக்கியதெல்லாம் உன் நன்மையைக் கோரித்தான். அவளுக்கும் வயது இருபத்தைந்துக்கு மேல் ஆகிறது. நான் காச நோயால் கஷ்டப்படுவதைக் கண்டு எனக்குத் தொண்டு செய்வதே தன் கடனென உணர்ந்த அப் பெண் தன் வாழ்க்கையையே வெறுத்துத் திருமணமே வேண்டாமென்று கன்னிப் பெண்ணாய்க் காலம் கழித்து வந்திருக்கிறாள்.

என் உடல் நிலை க்ஷீண தசையை அடைந்து விட்டது. இனி பிழைக்க மாட்டேன் என்று உணர்ந்தே என் அந்திய காலத்திலாவது அந்தப் பெண்ணுக்கு என் கடமையைச் செய்யத்துணிந்து இந்தக் கடிதத்தை அவளிடமே கொடுத்து அனுப்புகிறேன். நீ அனுபவிப்பதெல்லாம் அவள் சொத்துதான். எனவே நன்றி மறவாது அவள் நன்மையை நீதான் கவனிக்க வேண்டும். கடவுள் உங்களைக் காப்பாற்றுவார்.

உன் அன்புள்ள தந்தை,<br>
கி. ராஜாராம்.

என்று எழுதியிருந்த கடிதத்தைப் படிப்பதற்குள் அவர் பார்வை சாரதா பக்கத்தில் அமர்ந்திருந்த அந்தப் பெண்மணியின் மீது பாய்ந்தது. அப்படியே வாரி அணைத்துக் கொண்டார், காணாமல் கண்ட தன் தங்கையை. அண்ணன் தங்கை இருவருக்கு மிடையில் அன்பு அமோகமாகப் பெருக்கெடுத்து ஓடிற்று. அதைக் கண்ட சாரதாவின் முகத்திலும் அளவுகடந்த ஆனந்தம். அந்த ஆனந்தத்திலேயே மூவரும் நேரம் போவது தெரியாது மூழ்கி யிருந்தனர்.

தன் தந்தையின் கடிதம் கிளப்பிவிட்ட சூறாவளியை மாமனார் எழுதிய கடிதம் மழையாய்த் தடுத்தாட் கொண்டது. இல்லையென்றால் டாக்டரின் குடும்பம் உலர்ந்த மலராய் உதிர்ந்து விழுந்திருக்கும். என்ன ஆச்சரியம்! இயற்கையால் ஏற்பட்ட சந்தேகம் இயற்கையாலேயே நிவர்த்திக்கப்பட்டு விட்டதே! இதுதான் மனிதனின் பிடியில் அகப்படாத வாழ்க்கைச் சுழலோ!




எம்மொழியிலும் **விஸ்டம்** கேட்பது விவேகமாகும் — அது நீடித்து உழைக்கும், சரியான வடிவமுள்ள நைலன் டூத் ப்ரஷ்

*In any language, it's wise to ask for WISDOM — the long-lasting, correct-shape nylon toothbrush.*

ఏ భాషలోనైనా 'విజ్‌డమ్' అని అడగటం వివేకమైనది. చిరకాలం మను వరైన ఆకారంగల ప్లాస్టిక్ పండ్ల కుంచె.

# Wisdom

REGD.






# *Service with Security*

Throughout its career of over 34 years the "JUPITER GENERAL" has always held and continues to hold a front rank position in the insurance World. By insuring with the "JUPITER GENERAL" you ensure SAFETY, SECURITY and SERVICE.

ALL KINDS OF LIFE AND GENERAL INSURANCE BUSINESS TRANSACTED

**TOTAL Assets Over Rs. 3,35,00,000**

## THE JUPITER GENERAL INSURANCE COMPANY, LIMITED

**Head Office: BANK STREET - FORT - BOMBAY-1**

Administrator: **Dewan Bahadur R. Varadachari**

BRANCHES AND AGENCIES THROUGHOUT INDIA AND IN PAKISTAN, BURMA, CEYLON, ADEN AND AFRICA

**Principal Office in South India: "JUPITER HOUSE", 167, BROADWAY, MADRAS**

Branch Manager: R. Ranganathan Phone: 2547

## 12. பணமும் பண்பும்

ஒரு நாள் கோகிலா மறுபடியும் ஒரு நகையை எடுத்துக் கொண்டு பணத்துக்காக வந்தாள். அதைப் பார்த்த விஜயலக்ஷ்மி, "ஆமாம், இப்படி இருந்தால் குடும்பம் எத்தனை நாட்கள்தான் ஓடும்? உன் கணவர் என்ன, ஒன்றுமே சம்பாதிப்ப தில்லையா?" என்று கேட்டாள்.

"சம்பாதிக்காமல் என்ன? சம்பாதிக்கிறார்! இருந்தாலும் செலவுக்குக் கட்ட வில்லை. செலவு எல்லை மீறி ஆகி விடுகிறது. என்ன செய்வது?" என்றாள் கோகிலா.

"நீ ஒன்றுமே அவரிடம் இது சம்பந்தமாகச் சொல்வ தில்லையா? சம்பாத்தியத்தைக் காட்டிலும் செலவு அதிகமானால், அதை நீ குறைக்கப் பாடுபட வேண்டும்! வரவுக்கு மிஞ்சிய செலவு செய்யவே கூடாது!"

"நீ சொல்வது நியாயம் தான். சம்பாத்தியம் செலவுக்கே சரியாகக் கட்ட வில்லையென்றால், செலவை எங்கிருந்து குறைப்பது? அநாவசியச் செலவு ஏதாவது இருந்தால் குறைக்கலாம். அநாவசியச் செலவுக்கேதான் இங்கே சிறிதும் இடம் இல்லையே!"

"அது சரி! இப்படியே போய்க் கொண்டிருந்தால் குடும்பம் எத்தனை நாட்கள் ஓடும்? எப்பொழுதாவது இதைப் பற்றி நீ சிந்தித்துப் பார்த்தாயா?"

"இதையெல்லாம் பற்றிச் சிந்தித்துப் பார்க்க வேண்டும் என்ற எண்ணம் என் மனத்தில் எழுந்தால்தானே? அவருக்கு ஆகிறது, எனக்கும் ஆகி விட்டுப் போகிறது. அவருக்கு எது சொந்தமோ, அது எனக்கும் சொந்தம். அவர் எப்படிச் சொல்கிறாரோ, அப்படிச் செய்ய வேண்டியது என் கடமை!"

"அது வாஸ்தவம்தான். இருந்தாலும் இத்தனை ஏழையைப் பார்த்துக் கல்யாணம் செய்து கொடுக்கும் பொழுது உன் அப்பா-அம்மா ஒன்றுமே யோசிக்க வில்லையா? இப்படிக் கிணற்றில் பிடித்துத் தள்ளுவது போல......!" என்று விஜயலக்ஷ்மி பரிதாப உணர்ச்சியுடன் இரக்கப்பட்டு வாக்கியத்தை முடிக்காமலே நிறுத்தினாள்.

அதைக் கேட்டதும் சிரித்த முகமும் நாணமும் உருவான கோகிலாவின் முகத்தில் கொஞ்சம் கடுமை இழையோடியது.

"விஜயா! இந்த ஏழைமை வாழ்வு நாங்களே எங்கள் கையால் உண்டுபண்ணிக் கொண்டது. இது உனக்குத் தெரியாது என்று நினைக்கிறேன். என் கணவரைச் சம்பாதிக்கத் தெரியாதவர் என்று எண்ணி விடாதே! அவர் நானூறு ரூபாய் சம்பளமுள்ள வேலையை ஒரு நொடியில் உதறித் தள்ளி விட்டு வந்திருக்கிறாராக்கும்!" என்றாள்.

விஜயலக்ஷ்மிக்கு அந்த விஷயம் அது வரை தெரியாது. படித்துப் பட்டம் பெற்று வேலை கிடைக்காமல் ஊர் சுற்றித் திரியும் பரிதாபமே உருவான ஒரு பட்டதாரியின் மனைவி என்றுதான் இதுவரை அவள் கோகிலாவைப் பற்றி எண்ணி வந்தாள். படித்துப் பட்டம் பெற்று வேலையில்லாமல் திண்டாடுகிறான் என்பதற்காக ஒருவன் ஏளனத்துக்கு இலக்காக வேண்டுமா? இழி சொல் கேட்க வேண்டுமா? இப்படி எந்த நூலிலும் திட்டம் வகுக்கப்பட்ட வில்லையே! இருந்தாலும் ஆணவமும் அறியாமையும் நிறைந்த பணக்காரர்களுக்கு ஏழைப் பட்டதாரியின் நிலை இத்தகையதாகத் தான் தோற்றமளிக்கிறது. விஜயலக்ஷ்மியும் அவ்வர்க்கத்தைச் சேர்ந்தவள்தானே? ஆனால் கோகிலா தன் குடும்பத்து நிலைமையை விளக்கியபின் ஜகதீஷைப் பொறுத்த வரை அவள் கொண்டிருந்த கெட்ட அபிப்பிராயம் அடியோடு நீங்கி விட்டது. சம்பாதிக்கும் திறனற்ற கணவனுக்குக் கோகிலா மனைவியாக ஆக வில்லை என்ற எண்ணம் அவள் மனத்துக்கு அமைதியை அளித்தது.




"ஆமாம், அவ்வளவு நல்ல உத்தியோகத்தை உதறி யெறியும்படி நீ அவரை ஏன் விட்டாய்?" என்று கேட்டாள் விஜயலக்ஷ்மி.

"உத்தியோகத்தை உதறி யெறியாமல் நாம் ஏழையாக முடியாது என்று அவருக்குத் தோன்றிற்று. அதனால் தான் அவர் விட்டு விட்டார்!" என்றாள் கோகிலா.

"இப்படி வேண்டுமென்றே யாராவது ஏழையாக எண்ணுவார்களா? அப்படி ஏழையாக வேண்டிய அவசியம் அவருக்கு என்ன வந்து விட்டது?" என்று கேட்டாள் விஜயலக்ஷ்மி.

"நாமே ஏழையாகாமல் நம்மால் ஏழைகளின் துயரத்தை உணர முடியாது என்பது



தென்னிந்திய பத்திரிகையாளர் பெடரேஷன் நிர்வாகக் கமிட்டி அங்கத்தினரும், விளம்பர ஆலோசகருமான மதுரை ஸ்ரீ ஜெ. கே. ராம் சிஸ்டுவின் புதல்வி ஸௌபாக்யவதி நிர்மலத் தமா பாய்க்கும், மதுரை ஸ்ரீ கே. என். நாசிம்ம அய்யரது புதல்வன் சிரஞ்சீவி கிருஷ்ணமூர்த்திக்கும் ஜுலை 12உ மதுரையில் சிறப்புடன் திருமணம் நடைபெற்றது. வாழ்க தம்பதிகள் !

அவர் அபிப்பிராயம். நாம் ஏழையாகி ஏழைமையின் துயரத்தை உணர்ந்தால்தான் ஏழைகளின் துயரத்தைத் துடைத் தெறிய வழி தேட முடியும் என்று அவர் அடிக்கடி சொல்வார். அதனால்தான்...!''

“ அதற்கு வழி கிடைத்து விட்டதா ?''

“ அது அவருக்குத்தான் தெரியும். அதை அவரையே தான் கேட்கவும் வேண்டும் !'' என்றான் கோகிலா.

“ எந்தப் பேச்சை எடுத்தாலும் உனக்கு ‘அவர்' அல்லவா முன்னால் வந்து நிற்கிறார் ! அவரை இப்படி முன்னால் கொண்டு வந்து நிறுத்திக் கொள்வதனால் உனக்கு என்ன பலன் கிடைத்தது? என்ன சுகம் கிடைத்தது ?'' என்றாள் விஜயலக்ஷ்மி எரிச்சலுடன்.

“ என்ன கிடைத்தது என்று கேட்கிறாய் ?''

“ நான் கேட்பானேன் ? அதுதான் தெரிகிறதே ! அவர் பார்த்து வந்த உத்தியோகம் போயிற்று ! ஏழையானீர்கள் ! கடைசியில் நகை நட்டுகளை அடகு வைத்து வயிறு வளர்க்கும் இக்கட்டான நிலைமை கூட வந்து விட்டது ! இதனால் நீ கண்ட பலன் என்ன ?''

“ நான் கண்ட பலன் என்னவா ? சொல்லட்டுமா ?'' என்று கேட்ட கோகிலாவின் முகத்திலே நாணம் திரையிட்டது. அதன் இடை வழியே அன்பு ஒளி பள பளவென்று மின்னத் தொடங்கியது. அதைக் கண்ணுற்ற விஜயலக்ஷ்மிக்கு அவள் முகத்தைக் கையினால் தடவிச் சொடுக்கித் திருஷ்டிக் கழிக்க வேண்டும் போலத் தோன்றியது.

கோகிலா தன் உள்ளத்து உணர்ச்சியை வார்த்தையாக வடித்து வைக்க முயன்றாள். “ இதோ பார், விஜயா ! அவருக்கு உத்தியோகம் இருந்தால், நிமிஷம்கூட என் அருகில் நிற்க மாட்டார். இப்பொழுதோ முழுவதும் என்னுடையவராகவே ஆகிவிட்டார். எனக்கு இதற்கு மேல் வேறு என்ன வேண்டும் ?'' என்று கேட்டாள்.

அதற்கு மேல் தெளிவான சொற்களால், தான் பெற்ற பயனைக் கோகிலாவினால் வெளியிட முடியவில்லை. ஆனால் அவளுடைய ஒவ்வொரு சொல்லிலும் அவளுடைய உள்ளத்து உணர்ச்சிகள் கொப்புளித்துக் கொண்டு வருவதை விஜயலக்ஷ்மி கண்டாள். அதைக் கண்ட அவள் மெய்ம் மறந்து தன் வசமிழந்தாள். அந்த நேரத்தில் அம்மாதிரி உணர்ச்சிகளைத் தானும் அநுபவிப்பதற்காக அவள் தன் சொத்து முழுவதையும் பிரதியாகக் கொடுக்கக்கூடத் தயார் ஆகிவிடுவாள் போலிருந்தது. அவள் மனம் அந்த இன்பத்தையும் லாபத்தையும் கற்பனையில் கண்டு, அவற்றைப் பெறுவதற்காகத் தவமும் கிடக்கத் தொடங்கி விட்டது.

கணவரைப் பற்றிய பேச்சு எழுந்ததும் கோகிலாவுக்குப் பேச வேண்டும், பேச வேண்டும், பேசிக் கொண்டே இருக்க வேண்டும் என்றே தோன்றியது. கணவனைப் பற்றிய பேச்சு எழுந்து விட்டால் எந்த மனைவிதான் தன் நாக்கைத் தன் வசத்தில் வைத்துக் கொள்ள விரும்புவாள் ? எனவே, அவள் மடைவாய் திறந்து விட்டாற் போல் தன் கணவரைப் பற்றிப் பேசிப் புகழத் தொடங்கி விட்டாள்.

“ விஜயா ! அவர் உத்தியோகத்தில் இருந்த பொழுது எனக்கு வேலையே ஒன்றும் இராது. இப்பொழுதெல்லாம் காலையில் எழுந்திருந்தால், இரவு தூங்கும் வரை அவர் நினைவு தான். உண்மையைக் கேட்டால் இரவு தூங்கும் பொழுது கூடக் கனவில் அவர் தான் காட்சியளிக்கிறார். முன்பெல்லாம் சமையற்காரர் சமையல் செய்து விடுவார். வேலைக்காரன் படுக்கை போட்டு விடுவான். எனக்குச் செய்ய எந்த வேலையுமே இராது. எல்லா வேலைகளையும் வேலைக்காரர்களே செய்து விடுவார்கள். அப்பொழுதெல்லாம் வீட்டின் ஒரு மூலையில் நான் பொம்மையாகக் கிடப்பேன். ஆனால் இப்பொழுதோ...?''

இந்தக் கேள்வியைத் தன்னைத் தானே கேட்டுக் கொண்ட கோகிலா சாந்தமே உருவாகி மௌனம் சாதித்தாள். அந்தச் சாந்தமே அவளுடைய கேள்விகள் அனைத்துக்கும் பதில் சொல்லியது. அவள் கணவர் வலிய வரவழைத்துக்கொண்ட வறுமை அவரையே அவளிடம் முழுசாக ஒப்படைத்து விட்டது. அவள் வேண்டியது என்ன ? அதுதானே ?

கோகிலாவின் அந்த வார்த்தைகளைக் கேட்டதும் விஜய லக்ஷ்மியின் இருதயம் துயரமே உருவாகி விட்டது. இவ்வளவு சொத்து, சுதந்திரம், பணம், காசு, சுகம், போகம் எல்லாம் இருந்தும்கூட விஜயலக்ஷ்மியின் மனம் ஏன் திருப்தி அடையவில்லை ?

“கணவன், கணவன் என்று ஓரேயடியாகக் கணவன் பித்துப் பிடித்து அலைகிறாயே !'' என்று கொனஷ்டையாகக் கூறியவாறே கோகிலாவின் கையிலிருந்து நகையை வாங்கிக் கொண்டு விஜயலக்ஷ்மி அதற்கான ரூபாயை அவளிடம் கொடுத்தாள்.

சோகிலா எந்தக் கணவனிடம் இத்தனை சிரத்தையும் பக்தியும் கொண்டிருந்தாளோ, அவனிடம் விஜயலக்ஷ்மிக்கு அலாதி பக்தியும் சிரத்தையும் ஏற்படத் தொடங்கின.

அவள் எத்தனையோ தடவை நின்று நின்று ஜகதீஷை உன்னிப்பாகக் கவனித்திருக்கிறாள்.

ஜகதீஷைச் சிவப்பு என்று சொல்லி விடுவதற்கில்லை. அதற்காகக் கறுப்பு என்றும் சொல்லிவிட முடியாது. பார்ப்பதற்கு மாநிறமாயிருப்பான். ஆயினும் அவனை ஒரு தடவை பார்த்து விட்டால், பார்த்துக் கொண்டேயிருக்க வேண்டும் என்றுதான் யாருக்குமே தோன்றும். அவனுடைய முகத்தில் ஒருவிதக் குறுகுறுப்பும் சுறுசுறுப்பும் தாண்டவமாடி அத்தகைய களையை வருவித்திருந்தன; அழகைச் சிருஷ்டித்திருந்தன.

ஒரு முறை விஜயலக்ஷ்மி அவனைப் பார்த்து மிகுந்த சங்கோசத்துடன் இரண்டொரு வார்த்தைகள் பேசியும் இருக்கிறாள். அப்பொழுது அவளுக்கு ஜகதீஷ் தன்னைக் காட்டிலும் அதிக சங்கோச சுபாவமுள்ளவனாகத் தோன்றினான். அவன் அத்தனை சங்கோசமுள்ளவனாயிருந்த பொழுதிலும் அவன் முகத்தில் பளிச்சிட்டுக் கொண்டிருந்த பண்பும், பேச்சில் தொனித்த பரிசுத்தமும் அடக்க ஒடுக்கமாக நடந்து கொண்ட முறையும் அவள் மனத்தைக் கவர்ந்து ஈர்த்தன. அவனோடு பழக வேண்டாம் என்று எண்ணினாலும் பழகாமல் இருக்க முடியாது போலத் தோன்றியது. அதுமட்டும் அல்ல; அவள் மனம் தன் கணவரிடமுள்ள குறைபாடுகளைக் கிளறி அலசி ஆராய வேறு தொடங்கிவிட்டது. அவள் தன் கணவரிடம் பண்பு குறைந்திருப்பதைக் கண்டாள். பேச்சில் பல தீய சொற்கள் அநாகரிகமாக உபயோகமாவதைக் கண்டாள். நடந்து கொள்ளும் முறையில் காட்டுமிராண்டித்தனம் தாண்டவமாடுவதைக் கண்டாள். அவ்வளவும் சேர்ந்து அவளுடைய மனத்தில் கணவரிடம் குறைபாடுகளையே நினைத்தன. அதனால் அவளுக்குத் தன் கணவரிடம் அருவருப்புத்தான் அதிகமாகியது.

பணத்துக்கு எதையும் விலைக்கு வாங்கிவிடக்கூடிய அபார ஆற்றல் இருக்கிறது. ஆனால் பண்பையும் நல்லவிதமாக நடந்துகொள்ளும் முறையையும் மட்டும் விலைக்கு வாங்கும் சக்தி அதற்குக் கிடையவே கிடையாது. இத்தனை ஆற்றல் வாய்ந்த பணத்தினிடம் இந்தக் குறை நிவர்த்திக்க முடியாத பெருங் குறையாகவே அமைந்து விட்டது. இந்தக் குறை பணக்காரனை எப்படி ஆக்கிவிடுகிறது?—விஜயலக்ஷ்மி இதைப் பற்றிச் சிந்தனையைச் செலவிட்டு யோசிக்கலானாள்.

அவளுக்குப் பணக்காரனிடமுள்ள அந்தக் குறை பெருங் குறையாகத் தோன்றவே, ஜகதீஷுடன் கலந்து பழகும் வாய்ப்புக் கிட்ட வேண்டும் என்ற ஆசை உதித்தது. ஆனால் அவளுக்குத் தன் கணவரிடமுள்ள குறுகிய மனப்பான்மை தெரியாத விஷயம் அல்லவே! தன் கணவருக்குத் தன்னிடம் எத்தகைய அன்பு இருக்கிறது என்ற விவரத்தையும்தான் அவள் நன்கு அறிந்திருந்தாளே!

அவளுக்கு ஜகதீஷுடன் உரையாடி மகிழும் வாய்ப்பு எப்பொழுது கிடைக்குமோ? ஜகதீஷ் எப்பொழுதும் ஏதாவது வேலை வெட்டிகளில் ஈடுபட்ட



வண்ணமே இருந்தான். லால்ஜி வீட்டில் இருந்தாலாவது அவள் தன் பொழுதை எப்படியாவது போக்கலாம். லால்ஜியும் வீட்டில் இல்லாமல் இருந்து விட்டால் அவள் அந்த வீட்டில் எப்படித் தனியே அடைந்து கிடப்பது?

தனிமையில் இருக்கும்படி நேர்ந்தால் அவள் கோகிலாவைத் தேடி வருவாள். ஆனால் அவள் வரும்பொழுது ஜகதீஷ் வீட்டில் எதற்காக இருக்கப் போகிறான்? அவனுக்கும் அலுவல் என்று ஒன்று இராதா?

அதனால் ஜகதீஷ் வீட்டுக்கு வந்து போகும் நேரத்தை வெகு கவனமாகக் கவனித்துத் தெரிந்து கொண்டு, விஜயலக்ஷ்மி சரியாக அந்த வேளையில் தன் வீட்டு மாடியில் வந்து உட்காருவாள். அவன் வரும் வரை காத்திருந்து ஜன்னல் வழியே களை சொட்டும் அவன் முகத்தைக் கண்டு உள்ளூற மகிழ்வாள். 'ஆகா! என்ன கவர்ச்சி! என்ன கவர்ச்சி!' என்று அவள் வாய் அவளையறியாமலே முணுமுணுக்கும்.

இவ்வாறு லால்ஜி ஸேட் ஒரு புறம் கோகிலாவின் மீது தம் பார்வையைச் செலுத்தியிருந்தார். இன்னொரு புறம் விஜயலக்ஷ்மி ஜகதீஷைக் கண்டு களித்து வந்தாள். ஆனால் கணவன் மனைவி இருவருக்குமே இவ்விஷயம் தெரியாது. இருவரும் தங்கள் செயலை வெகு சாமர்த்தியமாக மறைத்து வந்தார்கள். ஒருவரையொருவர் ஏமாற்றிப் பிழைப்பதில் கணவன்-மனைவி இருவரிலும், யார் மேலானவர் என்று இலேசில் சொல்லிவிட முடியாது. ஏமாற்றித் திரியும் இந்தப் பிழைப்பு எதில் கொண்டு விடுமோ, யார் கண்டார்கள்?

லால்ஜி ஸேட்டைச் சட்ட சபைத் தேர்தலுக்கு அபேட்சைப் பத்திரம் தாக்கல் செய்யத் தூண்டியதன் மூலமாக விஜயலக்ஷ்மிக்கு ஜகதீஷுடன் நெருங்கிய தொடர்பு ஏற்படுத்திக் கொள்வதற்குச் சௌகரியமான சாதனம் கிடைத்து விட்டதாகக் குறுகிய நோக்கங் கொண்டவர்கள் ஊகம் செய்யலாம். ஆனால் லால்ஜி சட்ட சபை அங்கத்தினராகத் தேர்ந்தெடுக்கப் பட்டு விட்டால் அவருடைய மனைவியான விஜயலக்ஷ்மி எழுத்து வாசனையற்ற விரட்சர குஷியாக இருந்து விடலாமா? அநேக விதமான கெட்டிக்காரத் தனங்களோடு ஆங்கில அறிவும் இருந்தால் தானே அழகாயிருக்கும்? ஆங்கிலம் கற்க வேண்டும் என்ற ஆவலும் கூடச் சேர்ந்து கொண்டுதான் அவள் மனத்தில் அத்தகைய ஆசையை வளர்த்து விட்டன என்பதைப் பரந்த நோக்கம் படைத்தவர்கள் கட்டாயம் ஒப்புக் கொண்டே தீருவார்கள். ஜகதீஷ் அவர்கள் பேச்சைக் கேட்டால் அவன் லால்ஜி ஸேட்டின் அரசாங்க சபை அலுவல்களையும் கவனித்துக் கொள்ளலாம். ஆங்கிலம் பயிலும் விஷயத்தில் விஜயலக்ஷ்மிக்கு உதவியாகவும் இருக்கலாம். ஒரு கல்லில் இரண்டு மாங்காய் விழுந்தால் யார்தான் வேண்டாம் என்பார்கள்?

ஆனால் ஜகதீஷ் அரசாங்க சபைத் தேர்தல் விஷயத்தில் லால்ஜி ஸேட்டுக்குத் தன்னால் உதவ இயலாது என்று தீர்மானமாகத் தெரிவித்து விட்டான். அதன் பலனாக இவ்விஷயத்தில் அவனது உதவி தமக்குக் கிடைக்கக் கூடும் என்ற நம்பிக்கை லால்ஜி ஸேட்டுக்கு அறவே ஒழிந்து விட்டது. எனவே, அவர் ஜுகல்கிஷோரின் சாமர்த்தியத்தையே முழுவதும் நம்பிக் காரியத்தில் இறங்கி விட்டார். ஆனால் ஜகதீஷ் அவருக்கு ஒத்தாசை செய்ய முன் வராததைக் குறித்து விஜயலக்ஷ்மிக்கு அதிருப்திதான் ஏற்பட்டது. ஆயினும் ஏழைமையில் தவித்துத் தத்தளிக்கும் தம்பதிகளுக்குத் தன்னால் இயன்ற உதவியைச் செய்ய வேண்டும் என்ற போற்றத் தக்க தனது முடிவை மட்டும் அவள் சிறிதும் மாற்றிக் கொள்ள வில்லை.

ஆனால்......ஆனால்......

ஜகதீஷுடன் நெருங்கிய தொடர்பை அவள் ஏற்படுத்திக் கொள்ளக் கூடிய அருமையான சந்தர்ப்பம் கிட்டுவதற்குக் கொஞ்சமும் இடம் இருப்பதாகத் தெரியவில்லையே, என்ன செய்வது? அந்தத் தீராப் பிரச்னை அவளுடைய மனத்தை முன்னைவிட அதிகமாகக் குத்தியது.

ஜுகல்கிஷோரின் விருப்பப்படி லால்ஜி ஸேட் அன்று மாலை நான்கைந்து பிரமுகர்களைப் பார்த்து வருவதற்காகப் புறப்பட்டுச் சென்றார். அவர் போய் விடவே, விஜயலக்ஷ்மிக்குத் தனிமை சற்றும் பிடிக்க வில்லை; அது தடிக்க வருவது போல் இருந்தது. தனிமை தாளாமல் அவள் இரண்டு மூன்று தடவை, தான் உடுத்தி யிருந்த உடைகளைக் களைந்து மாற்றுடைகள் உடுத்திக் கொண்டாள். ஆனால் எந்த உடையும் அவளுக்கு மனத்துக்குப் பிடித்ததாக அமைய வில்லை.

கடைசியில், அவள் மிகச் சாதாரணமான வெள்ளைக் கலர்ப் புடவை ஒன்றை எடுத்து உடுத்திக் கொண்டாள். அதை உடுத்திக் கொண்டவள் அப்படியே கதவு ஓரமாக இருந்த நிலைக் கண்ணாடியில் தன் முகத்தின் அழகைப் பார்த்துக் கொண்டாள். துல்லியமான வெள்ளையுடையில் அவளுக்குத் தன் உருவம் மிக மிக அழகாகக் காட்சி யளிப்பதாகத் தோன்றியது. ஆனால் காதில் தொங்கிக் காற்றில் ஆடிக் கொண்டிருந்த அழகிய லோலாக்குகள் அத்தகைய ஆடை அலங்காரத்துக்குப் பொருத்த மில்லாததாகத் தோற்றமளித்தன. உடனே அவள் காதிலிருந்து லோலக்குகளைக் கழற்றி வைத்தாள்.

அவளது காதுகள் எந்நேரமும் லோலக்குகளுடன் இடையறாத தொடர்பு கொண்டிருந்தவை யாதலால், கண்ணாடியில் பார்த்ததும் வெறிச் சோடிக் காட்சி யளிப்பதாக அவளுக்குத் தோன்றின. ஆயினும் அவள் முகத்தில் அப்பொழுது தாண்டவமாடிய கவர்ச்சி வெகு எடுப்பாகவே இருந்தது. பகட்டுக்கும் படாடோபத்துக்கும் தான்




# எஸ்ட்ரேலா
## பாட்டரீஸ்




எஸ்ட்ரெல்லா பாட்டரீகள் மிகப் பிரகாசமான வெளிச்சத்தைக் கொடுப்பவை, நீடித்து உழைப்பவை, குறைந்த விலையுள்ளவை.

எஸ்ட்ரெல்லா பாட்டரீஸ் லிட்.,

பம்பாய் - டெல்லி - மதராஸ் - கான்பூர் - நாக்பூர் - கல்கத்தா.



# பூட்டுகளில் மிகுந்த வலியினால்
## நான் முடமாக்கப் பட்டிருந்தேன் — இப்போழுது பரம சுகம்!

"க்ருஷன்" உபயோகித்ததனால் நான் அடைந்துள்ள அத்யாச்சரியமான பலன்களை நான் அவசியம் உங்களுக்குச் சொல்ல வேண்டும். வருஷக் கணக்காகக் கீல் வாதத்தினால் முடங்கிக் கிடந்தேன். பல தரப்பட்ட சிகிச்சைகள் செய்தும் நிரந்தரமான பலன் ஒன்றும் ஏற்படாது போயிற்று. ஆனால் மூன்று மாதங்களுக்குத் தவறாமல் ஒழுங்காக "க்ருஷன்" உட்கொண்ட பின்னர் அதன் உண்மையான குணங்களை உணர்வதுடன் ஏறக் குறைய எனது வியாதிக்கு முன்னிருந்த தன்மையையும் பெற்றிருக்கிறேன்.— A. R."

குடல்கள் நன்கு இயங்கி கழிவு பதார்த்தங்களைச் சரிவர வெளித் தள்ளத் தவறுவதால் விஷத் தன்மை வாய்ந்த அசுத்தங்கள் உள்ளேயே தங்கிவிடுகின்றன. இவைகளே கீல் வாய்வுக்குச் சாதாரணமான காரணம். க்ருஷனிலுள்ள ஆறுவித உப்புக்கள், இவ் விஷப் பொருள்கள் நன்கு வெளியேற்றப் படுமாறு உட்புற அவயவங்களைச் சரிவர இயங்கச் செய்ய உதவுகிறது. தினசரி 'க்ருஷன்' உட்கொள்ளுவது உங்களது குடல்களை ஒரே சீரானத்துடன் இயங்கச் செய்கிறது. இதைத் தொடர்ந்து உட்கொள்ளுங்கள்; கீல் வாயு ஒரு போதும் திரும்பி வராது.

**"க்ருஷன்"** உங்களது ஆரோக்கியத்திற்கும் ஆனந்தத்திற்கும் உதவுகிறது





## அரித்து, எரிந்து, கொப்பளிக்கும் எக்ஸிமா 10 நிமிஷத்தில் குணமடைகிறது

நிக்ஸோடெர்ம் (Nixoderm) கண்டு பிடித்தது முதல் யாரும் எக்ஸிமா, பரு, ரத்தக் கட்டி ஆகிய சரும வியாதிகளால் அவதியுறவும், உங்களுக்கும் பிறருக்கும் வெறுப்பு ஏற்படவும் வேண்டாம். ரஸாயன முறையில் தயாரித்த நிக்ஸோடெர்ம் (Nixoderm) உதவியால் சருமத்தை சுத்தமாக்குங்கள். அனுயாசமாக வைத்துக் கொண்டு பிறர் உங்களை வியாதியஸ்தரெனக் கருத இடம் தராதீர்.

### ஒரு புதிய சாதனம்

நிக்ஸோடெர்ம் (Nixoderm) ஒரு புதிய களிம்பு. ஆனால் நீங்கள் உபயோகித்த இதர களிம்பைப் போன்றதல்ல. பிசுக்கற்றது. மேலே தடவும் போதே ஒரு பவுடரைப் போல உணருவீர்கள். சருமத் துவாரங்களினூடே சென்று வியாதிக்கு மூலமான இடத்தை தாக்குகிறது. நிக்ஸோடெர்ம் (Nixoderm) மூன்று வழிகளில் உபாதையைத் தாக்குகிறது: (1) நோய்க்குக் காரணமாகும் கிருமிகளைக் கொல்லுகிறது. (2) அரித்து, எரிந்து வெந்து போவதை 7 முதல் 10 நிமிஷத்தில் தடுத்து சருமத்தை மென்மையாக்குகிறது. (3) இயற்கையாகவே ஆற்றி, சுத்தமாக மிருதுவாகப் பட்டுப் போல வழவழப்பாகவும் ஆக்குகிறது.

### விரைவில் பலனளிக்கிறது

சரும நோய்களை நிவர்த்திக்கவே விஞ்ஞான முறையில் தயாரான நிக்ஸோடெர்ம் (Nixoderm) மற்றதைவிட சீக்கிரம் வேலை செய்கிறது. நமைச்சல், எரிச்சலை சில நிமிஷத்தில் நிறுத்தி விரைவில் சருமத்தை சுத்தமாக ஆற்றி, மிருதுவாகவும் வழ வழப்பாகவும் செய்கிறது. ஓரிரண்டு தினங்களில் கண்ணாடியில் பார்த்துக் கொள்ளுங்கள். தேடிய சஞ்சீவி—நாடிய வைத்தியம் கிடைத்ததை உணர்வீர்கள். நிக்ஸோடெர்ம் (Nixoderm) ஆயிரக் கணக்கானவர்களது சருமத்தைச் சுத்தமாக்கி




புஷ்டியாக்கியது. அவர்களில் ஒருவரான மிஸ்டர் R. K. கூறுகிறார். "12 வருஷமாக நமைச்சலும் எரிச்சலும் தரும் எக்ஸிமாவினால் கஷ்டப்பட்டேன். பல மருந்துகளுக்குப் பிறகு நிக்ஸோடெர்ம் (Nixoderm) உபயோகித்தேன். 10 நிமிஷத்தில் நமைச்சல் நின்று மறுநாளே சருமம் சுத்தமாகியது. என் தோற்றத்தின் மாறுதலைக் கண்ட நண்பர்கள் ஆச்சரிய மடைந்தனர்."

### திருப்திக்கு உத்தரவாதம்

சருமம் திருப்தியாகாதவரை நிக்ஸோடெர்ம் (Nixoderm) மதிப்பை இழக்கிறது. இன்றே நிக்ஸோடெர்ம் (Nixoderm) வாங்குங்கள். தோற்றத்தில் ஏற்படும் அபிவிருத்தியைக் காண ஆச்சரியப்படுவீர்கள். ஒரு வாரத்துக்கு உபயோகித்தால் சருமம் வழவழப்பாயும் மிருதுவாயும் சுத்தமாயும் வசீகரமாகவும் ஆவது நிச்சயம். இல்லையேல் காலிப் பெட்டியைத் திருப்பிக் கொடுத்து, கொடுத்த விலையை வாபஸ் பெறுங்கள். இன்றே நிக்ஸோடெர்ம் (Nixoderm) வாங்குங்கள். அதன் கனித்த உத்தரவாதமே உங்களுக்கான உறுதி.

பிரமாதக் கவர்ச்சி என்றால், எளிமைக்குமா இத்தனை கவர்ச்சி இருக்க வேண்டும்?

எளிமையின் நினைவு எழுந்ததும், எளிமையே உருவான சங்கோச சுபாவம் படைத்த ஜகதீஷ் அவள் நினைவுக்கு வந்தான். அவனது நினைவு கோகிலாவைக் கண்டு வரவேண்டும் என்ற ஆவலை விஜயலக்ஷ்மியின் மனத்தில் அபாரமாகக் கிளறி விட்டு விட்டது. உடனே அவள் உடை மாற்றும் முயற்சியை அப்படியே நிறுத்தி விட்டுத் தன் வீட்டையும் ஜகதீஷின் வீட்டையும் ஒன்றாகச் சேர்க்கும் வழியாகக் கோகிலாவின் வீட்டை அடைந்தாள். பின் பக்கத்து அறை ஒன்றில் ராதா இரு குழந்தைகளையும் வைத்துக் கொண்டு விளையாட்டுக் காட்டியவாறே சாதம் ஊட்டிக்கொண்டிருந்தாள். விஜயலக்ஷ்மி வருவதைக் கண்டதும் அவள் எழுந்து வரவேற்றாள். பிறகு இருவருமாகவே அந்த அறையிலிருந்து வெளியே வந்தார்கள்.

ஜகதீஷும் கோகிலாவும் இருந்த அறைக்குள் நுழைந்த பின்தான் ஜகதீஷுக்கு ஜுரம் வந்து விட்டது என்ற விஷயம் விஜயலக்ஷ்மிக்குத் தெரிய வந்தது. உடனே அவள் டாக்டரை அழைத்து வர ஆள் அனுப்பினாள். தன் வீட்டிலிருந்து ரோஜா அத்தர் போன்ற கைவைத்தியமாகச் செய்யக் கூடிய பொருள்களை எடுத்து வரவும் வேலையாளை ஏவினாள். எசமானியம்மாளின் உத்தரவை நிறைவேற்ற ஓடோடிச் சென்ற வேலைக்காரன் போனதும் வந்ததுமாக ஜுரமானியையும் ரோஜா அத்தரையும் எடுத்து வந்தான்.

"கோகிலா! கொஞ்சம் தண்ணீர் கொண்டு வாயேன்!" என்றாள் விஜயலக்ஷ்மி, வேலைக்காரன் கொண்டு வந்த ரோஜா அத்தரையும் ஜுரமானியையும் தன் கையில் வாங்கிக் கொண்டே.

அவள் சொன்னதைக் கேட்ட கோகிலா அம்பு வேகத்தில் சமையலறைக்குச் சென்றாள். எப்படியாவது ஜுரம் இறங்கினால் சரி என்ற எண்ணம் அவள் மூளையில் பம்பரமாகச் சுழன்று அவளையும் சுழற்றிக் கொண்டிருந்தது. கோகிலா சமையலறைக்குச் சென்றதும் ஜகதீஷின் கண்கள் திறந்து கொண்டன. ஒரு தடவை அவன் அந்த அறையைச் சுற்றித் தன்பார்வையைச்செலுத்தினான். ராதாவும் விஜயலக்ஷ்மியும் மட்டுமே அவனெதிரே நின்று கொண்டிருந்தார்கள். விஜயலக்ஷ்மி அவனது விழிகளின் போக்கைக் கொண்டு விஷயத்தை ஒருவாறு ஊகித்து உணர்ந்தாள். உடனே ஜகதீஷுக்கு ஆறுதல் அளிக்கும் நோக்கத்துடன், "கோகிலா இதோ வந்துவிடுவாள்!" என்று சொன்னாள்.

ஜகதீஷ் மறுபடியும் கண்களை மூடிக் கொண்டான். ஆனால் அவன் முகத்திலே தோன்றி மறைந்த கெளிவுகள் அவனுக்குத் தலைவலி அசாத்தியமாக இருக்கிறது என்பதைக் காட்டி மறைந்தன. விஜயலக்ஷ்மி அவன் அருகில் சென்றாள். சிறிது நேரம் அவன் முகத்தையே கூர்ந்து கவனித்துக் கொண்டு நின்றாள். பிறகு அநுதாபத்துடன் அவன் நெற்றியில் தன் கையை வைத்துப் பார்த்தாள். அது நெருப்பாகக் கொதித்துக் கொண்டிருந்தது. விஜயலக்ஷ்மி திகை மிதித்தவள் போலத் துணுக்குற்றாள். அவள் நெஞ்சம் படபடவென்று அடித்துக் கொண்டது. அவள் முகத்தையும் வேதனைக் குறிகள் ஆட்கொண்டன. விழிகள் அப்படியே நிலைத்து நின்று விட்டன. பீதியில் மூச்சு விடுவதே சிரமமாகத் தோன்றியது.

அவள் சட்டென்று தன் கையை அகற்றிக் கொண்டாள். அப்பொழுது ஜகதீஷின் கண்கள் மூடியிருந்தன. கண்களை மூடியவாறே அவன் விஜயலக்ஷ்மியின் கையைப் பிடித்துத் தன் தலையில் ஒற்றிக் கொண்டான். விஜயலக்ஷ்மி பாதிப் பித்தம் பிடித்தவள் போலாகி விட்டாள். ஜகதீஷ் அவளைக் கோகிலா என்று எண்ணி அப்படிச் செய்து கொண்டிருந்தான். இதையெல்லாம் விஜயலக்ஷ்மி நன்கு அறிந்துதான் இருந்தாள்.

இருந்தாலும் அவள் உள்ளத்தில் சொல்லவொண்ணாத இன்பப் பெருக்கு எடுத்து ஓடத் தொடங்கியது. அந்த இன்பப் பெருக்கு இருதயத்து அணையை உடைத்தெறிந்து அவளை இனந் தெரியாத இன்ப லோகத்துக்கு இழுத்துச் சென்றது. அந்த உணர்ச்சியில் மெய்ம் மறந்து நின்ற அவள், ஜகதீஷிடம் இனங் கண்டு கூற முடியாத கவர்ச்சி காட்சி அளிப்பதைக் கண்டாள். ஜகதீஷைக் காண வேண்டும், கண்டு பேச வேண்டும் என்ற ஆவல் அவளை எத்தனையோ தடவை உந்தித் தள்ளியதுண்டு. இனிய இல்வாழ்க்கை வாழும் அவனைப் பற்றியும் அவன் வாழ்க்கையின் ரகசியத்தைப் பற்றியும் அறிந்து கொள்ள வேண்டும் என்ற ஆவலும் துடிப்பும்கூட அவள் உள்ளத்தில் எழுந்ததுண்டு. ஆனால் அவனைத் தொட்டுப் பார்க்க வேண்டும், அவனது ஸ்பரிச சுகத்தைக் காண வேண்டும் என்ற எண்ணம் மட்டும் அவளுக்கு அதுகாறும் எழுந்ததில்லை. அன்று அவனைத் தொட்டுப் பார்த்ததும் அவளுடைய உள்ளம் எல்லை கடந்த ஆவலில் மிதக்கத் தொடங்கி விட்டது. உணர்ச்சி அலைகள் அவளை இஷ்டப்படி இழுத்துச் செல்லலாயின. அவள் உணர்ச்சி வேகத்துடன் போட்டி போட்டுக் கொண்டு முன்னேறத் தொடங்கி விட்டாள்.

பசுமை என்பதையே அறியாத, ஈரசைப்பு என்பதையே உணராத பாலைவனத்தில் வாழ்க்கை நடத்த வேண்டும் என்று நிர்ப்பந்திக்கப்பட்ட ஒருவன், பாலைவனத்தின் வறட்சியை எத்தனை காட்கள்தான் பொறுத்துக் கொள்வான்? இன்புற்று வாழவேண்டிய வாழ்க்கை சாரமின்றி வீணாகிறதே என்று அலுத்துச் சலித்துக் கொள்ள மாட்டானா? வறட்சியே உருவான வாழ்வை வெறுக்க மாட்டானா? எங்கே, எப்பொழுது தண்ணீரைக் காணப் போகிறோம் என்று ஏங்கித்

தவிக்க மாட்டானா? தண்ணீருக்காகத் தவங் கிடக்க மாட்டானா? அப்படி அல்லலுறுபவனுக்குப் பசுஞ் சோலை மத்தியில் தண்ணீர் தளும்பி நிற்கும் நீர் நிலை ஒன்று தென்பட்டு விட்டால், எத்தனை ஆனந்தம் ஏற்படும்? அதை அணுகி ஆவலை அடக்கிக் கொள்ளவும், தாகத்தைத் தணித்துக் கொள்ளவும் அவன் எத்தனை ஆதுரம் காட்டுவான்? திடுதிப்பென்று நீர் நிலையில் இறங்கி விட்டால், அதன் பலன் என்ன ஆகுமோ, முடிவு என்ன ஏற்படுமோ என்றெல்லாம் யோசனை செய்து கொண்டு நிற்பானா? வருவது வரட்டும் என்று நீரில் குதித்து நீந்தி விளையாடத் தானே செய்வான்? இஷ்டப்படி நீரைப் பருகி இன்பமுறத்தானே முயற்சி செய்வான்?

விஜயலக்ஷ்மியின் மனநிலையும் அத்தகைய நிலைமையைத் தான் அப்பொழுது அடைந்திருந்தது. ஜகதீஷின் தலையைத் தொட்ட பின், அவன் தன் கையால் அவளது கையைப் பிடித்துத் தன் தலையில் எடுத்து வைத்துக் கொண்ட பின், விஜயலக்ஷ்மி தன் நிலைமை மறந்தாள்; இகலோக நினைவை மறந்தாள். எல்லாவற்றையும் மறந்து இன்பக் கடலில் மூழ்கி முக்குளிக்கவும் தொடங்கி விட்டாள்.

நீரில் குதித்து நினைத்தபடி நீந்தி நீராடும் மனிதனின் கண்கள் அகஸ்மாத்தாகக் கரையை நோக்குகின்றன. கரையிலே கட்டித் தொங்கவிடப் பட்டிருக்கும் விளம்பரப் பலகையைக் கண்ணுறுகின்றன. அந்தப் பலகையில் அழகிய எழுத்துக்களில், 'இந்தக் குளத்தில் உத்தரவின்றி யாரும் குளிக்கக் கூடாது' என்று எழுதியிருக்கிறது. அது மட்டும் அல்ல; போட்ட நிபந்தனையை நிறைவேற்றும் நோக்கத்துடன் நீர்நிலையின் சொந்தக்காரனே காவல்காரனாகவும் நிற்கிறான் என்று வைத்துக் கொள்ளுங்கள். அப்பொழுது நீர் நிலையில் நீந்தி விளையாடுபவனின் நிலைமை எத்தகையதாயிருக்கும்?

அதே நிலையைத்தான் அவ்விடத்துக் காட்சி படம் பிடித்துக் காட்டியது. கையில் தண்ணீர் கோப்பையுடன் கோகிலா நின்று கொண்டிருந்தாள். அதைக் கண்ட விஜயலக்ஷ்மி உத்தரவின்றிக் குளத்தில் குதித்து நீந்திய ஆடவனைப் போலவே தன்னைக் குற்றவாளியாக மதித்தாள்.

"அடடா! விஜயா! உனக்கு எதற்கு இந்தச் சிரமம் எல்லாம்?" என்று கேட்டுக் கொண்டே கோகிலா அவளருகில் வந்தாள். இன்பானுபவத்தில் இவ்வுலகத்தை மறந்து இருதயத்தைப் பறிகொடுத்து நின்ற விஜயலக்ஷ்மிக்கு அவளது அந்தப் பேச்சு தன் தவறைக் கண்டு எச்சரிப்பதாகவே பட்டது.

கோகிலா நன்றி தெரிவிப்பதற்காக அப்படிக் கூறினாளே யொழிய அச் சமயம் அவள் உள்ளத்தில் வேறு எத்தகைய எண்ணமும் இடம் பெறவில்லை. ஆனால் விஜயலக்ஷ்மியின் உள்ளத்தில், தான் பிறத்தியார், தனக்கு அத்தகைய உரிமை எதுவும் கிடையாது என்ற எண்ணமே மேலோங்கி நின்றது. அதைச் சுட்டிக் காட்டத்தான் கோகிலா அப்படிப் பேசுகிறாள் என்ற எண்ணமும் எழுந்தது. எனவே, சரேலென்று அவள் ஜகதீஷின் தலையில் வைத்திருந்த தன் கையை இழுத்துக் கொண்டாள். அப்படிக் கையை இழுத்துக் கொண்டதும் விஜயலக்ஷ்மிக்குத் தன் வாழ்க்கையின் இன்ப ஊற்று அனைத்தும் வறண்டு சுண்டி விட்டது போன்ற உணர்ச்சி உண்டாயிற்று. அவளுக்கு எரிச்சல் பற்றிக் கொண்டு வந்தது. இருந்தாலும் இருதயத்தை ஒருவாறு அடக்கித் தன் வசப்படுத்திக் கொண்டு, "கோகிலா! உன் கணவரை நீயே பத்திரமாகக் கவனித்துக் கொள். வேறு யாரும் தொடவும் மாட்டார்கள். கொண்டு போய் ஒளித்து வைத்துக் கொள்ளவும் மாட்டார்கள்" என்றாள்.

கோகிலா குரலில் எளிமையும் பரிதாபமும் தாண்டவமாட, "அடடா! இது என்ன இது? இப்படி வித்தியாசமாக எடுத்துக் கொண்டு பேசத் தொடங்கி விட்டாயே! நான் அப்படி என்ன சொல்லி விட்டேன், நீ இப்படி வித்தியாசமாக எடுத்துக் கொள்வதற்கு? நீ எனக்கு உற்றார் உறவினராக இல்லாமலிருந்தும் இவ்வளவு ஒத்தாசையாக இருக்கிறாயே! நீ செய்யும் இந்த உதவிக்கு நான் எப்படிக் கைம்மாறு செய்வேன் என்று கேட்டால் அதற்குள் உனக்கு மூக்குக்கு மேல் கோபம் வந்து விட்டதே! உன்னிடம் உதவிக் கடன்பட்டு விட்டால் அப்புறம் அதைத் தீர்ப்பது எப்படி என்றுதான் யோசிக்கிறேன்!" என்றாள்.

"ரொம்ப சரி! எனக்கு உன்னைத் தெரியாது என்று எண்ணிப் பேசுகிறாயா? உன்னை நன்றாகத் தெரியும் எனக்கு! சில ஆண்களைப்

● விழுப்புரம் ஸ்ரீ நடராஜா உயர்தர ஆரம்பப் பாடசாலைக் காரியதரிசி திரு ஆர். வெங்கடேசன் அவர்களது அருமை மனைவி ஸ்ரீமதி ஜயலட்சுமி ஜுலை 19உ அன்று வேலூர் ஆஸ்பத்திரியில் காலமானார். அன்னாரின் மறைவைக் குறித்து ஸ்ரீ நடராஜா பாடசாலை ஒரு நாள் மூடப்பட்டது. பாடசாலை மாணவர்களும் உபாத்தியாயர்களும் ஸ்ரீமதி ஜயலட்சுமியின் ஆன்மா சாந்தியடையப் பள்ளியின் பிரார்த்தனைக் கூடத்தில் பிரார்த்தனை செய்தனர். ●



பெண்டாட்டிப் பித்துப் பிடித்து அலைகிறவர்கள் என்று சொல்வது போல உன்னைக் கணவன் பித்துப் பிடித்து அலைகிறவள் என்று தான் சொல்ல வேண்டும். இரவு பகல் இருபத்திநாலு மணி நேரமும் உனக்கு உன் கணவன் நினைவைத் தவிர வேறு யாருடைய நினைவாவது இருந்தால்தானே ? — சரி, சரி! அதைப் பற்றியெல்லாம் அப்புறம் பேசிக் கொள்வோம். முதலில் இந்த கைக் குட்டையைத் தண்ணீரில் நனைத்து உன் கணவர் தலையில் வை !''

இவ்வாறு சொல்லிய வண்ணமே, விஜயலக்ஷ்மி தன் கையிலிருந்த ரோஜா அத்தரிலிருந்து சில துளிகளைக் கோகிலா கொண்டு வந்திருந்த கோப்பைத் தண்ணீரில் ஊற்றினாள். பிறகு தன் இடுப்பிலிருந்து தும்பைப் போல் துப்புரவாக இருந்த கைக் குட்டையை எடுத்து நீரில் நனைத்துக் கோகிலாவின் கையில் கொடுத்தாள்.




சமரசப் புலவர் மாயூரம் நீதிபதி வேதநாயகம் பிள்ளையின் 66-வது நினைவு நாள் விழா திரு டி. ஜி. செல்லம் அவர்கள் முயற்சியால் திருச்சியில் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. விழாவுக்குச் சுவாமி சரவணபவானந்தா தலைமை தாங்கினார். விழாவை யொட்டி ஆயிரக் கணக்கான ஏழைகளுக்கு அன்னதானம் வழங்கப்பட்டது. மாலையில் தஞ்சை திரு வேணுகோபால் கிளாரினெட் குழுவினர் மங்கள வாத்தியம் முழங்க, திரு விக்கர் ஜெனரல் சாமிதுரை பிவத நாயகரின் திருவுருவப்படத்தைத் திறந்து வைத்தார்.

கோகிலாவைக் காட்டிலும் விஜயலக்ஷ்மி வயதில் பெரியவள். அதனால் அவளுக்குக் கோகிலாவை இஷ்டப்படி பரிகாசம் செய்யும் உரிமை பிறப்புரிமையாகக் கிடைத்திருந்தது. சிறியவர்களைப் பெரியவர்கள் பரிகாசம் செய்வதில் தவறு இல்லையே! அதனால் தான் விஜயலக்ஷ்மி அப்படிப் பேசினாள்.

கோகிலா ரோஜா அத்தரில் தோய்ந்த அந்தக் கைக்குட்டையை ஜகதீஷின் தலையில் ஒற்றி யெடுத்த விதமே வெகு விசித்திரமாயிருந்தது. அவளுடைய உள்ளம், உடல் உணர்வு அனைத்துமே அந்தச் செயலில் மெய்ம் மறந்து ஈடுபட்டிருப்பது போலத் தோன்றியது. கோகிலாவின் உணர்ச்சி மிகுந்த அந்தச்செயலில் அன்பு தொனித்ததா, வாத்ஸல்யம் தொனித்ததா என்பதை விஜயலக்ஷ்மியினால் ஊகித்து உணர முடியவில்லை. குடித்தனப்பாங்கில் ஊறித்திளைத்த, காதலே உருவான மனைவியைப் போல் உயர்ந்த உள்ளம் படைத்தவர்கள் இந்த உலகத்திலேயே இருக்க முடியாது என்பதாகவே அவள் மனம் எண்ணியது. குஞ்சி அழகும் கொடுந்தானைக் கோட்டழகும் மஞ்சள் அழகும் அழகல்ல. குடித்தனப் பாங்கு தோய்ந்த கல்வியைக் கற்பிக்கும் காதலே அழகு வாய்ந்தது என்ற எண்ணம் அவள் உள்ளத்தில் இடம் பெற்றது. கோகிலாவின் செயல்களைக் கவனித்த விஜயலக்ஷ்மிக்குத் தன்னையறியாமல் அவளிடம் அன்பும் ஆசையும் பன்மடங்காகப் பெருகின. கோகிலாவைத் தன் சொந்தத் தங்கையாகவே பாவிக்கத் தொடங்கி விட்டாள். அந்த உணர்ச்சி வேகத்தில் அவள் கோகிலாவைப் பார்த்து, "ஜகதீஷ் அண்ணா குணமடையட்டும். நான் உனக்கு ஒரு தண்டனை விதிக்கப் போகிறேன். ஏனென்றால் நீ செய்த தவறை நான் என் கண்களாலேயே கண்டு விட்டேன் அல்லவா?" என்று கண் ஜாடை காட்டிக் கனிவாகக் கடிந்து கொண்டாள்.

தான், ஜகதீஷின் கண்களில் வைத்த முத்திரையைத்தான் விஜயலக்ஷ்மி குறிப்பிடுகிறாள் என்பதைக் கோகிலா வெகு சுலபமாகப் புரிந்து கொண்டு விட்டாள். இருந்தாலும் புரியாதவள் போல, "நான் என்ன தவறு செய்து விட்டேன்?" என்றாள்.

"எதற்காகத் தெரியாதவள் போலப் பாசாங்கு செய்கிறாய்? முழுப் பூசணிக்காயைச் சோற்றில் மறைத்து வைப்பதென்றால், அது முடிந்த காரியமா? நான் உள்ளே நுழைந்த பொழுது நீ என்ன செய்து கொண்டிருந்தாய்?" என்று கேட்டாள் விஜயலக்ஷ்மி.

மேலே பேசப்போனால் விஷயம் விரசமாகி விடக்கூடும் என்று தோன்றியது கோகிலாவுக்கு. எனவே, விஷமப் புன்னகையுடன், "சரி, அது போகட்டும். நான் செய்த அந்தத் தவறுக்கு நீ என்ன தண்டனை அளிக்கப் போகிறாய்?" என்று கேட்டாள்.

"சொல்லட்டுமா?"

"சொல்லேன்! சொல்லட்டுமா, சொல்லட்டுமா என்று ஏதோ பயமுறுத்துகிறாயே!"

"நான் உன் கணவரைப் பட்டப்பகலில் கவர்ந்து சென்றுவிடப் போகிறேன். அப்புறம் நீ என்ன செய்வாய்?" என்று கேட்டாள் விஜயலக்ஷ்மி.

(தொடரும்)

# தக்ஷிண ரெயில்வே

## குறைந்த செலவில் ஸ்டாண்டர்ட் சுற்றுப் பிரயாண டிக்கெட்டுகள்

**புண்ய க்ஷேத்திரங்கள், சரித்திரப் பிரசித்திபெற்ற பட்டணங்கள், முக்கிய நகரங்கள் அடங்கிய ஐந்து குறிப்பிட்ட யாத்திரா மார்க்கங்கள்**

2-வது, இண்டர், 3-வது வகுப்புகளுக்கு முழு கட்டணத்தில் ஏறக்குறைய முக்கால் கட்டணத்திற்குக் கொடுக்கப்படுகின்றன.

○●○

| மார்க்கம் | மைல்கள் | 2-வது வகுப்பு | இண்டர் | 3-வது வகுப்பு |
|---|---|---|---|---|
| 1 | 4754 | ரூ. 301-7-6 | ரூ. 196-12-6 | ரூ. 113-0-6 |
| 2 | 5573 | ரூ. 354-2-6 | ரூ. 231-1-6 | ரூ. 132-13-6 |
| 3 | 1620 | ரூ. 101-14-0 | ரூ. 66-15-0 | ரூ. 38-5-0 |
| 4 | 1767 | ரூ. 109-10-0 | ரூ. 72-15-6 | ரூ. 42-12-0 |
| 5 | 2275 | ரூ. 142-14-0 | ரூ. 94-6-0 | ரூ. 54-4-0 |

டிக்கெட்டுகள் மூன்று மாத காலத்திற்குச் செலாவணியாகும். மார்க்கத்தில் எங்கு வேண்டுமானாலும் இறங்கி இஷ்டமான கால அளவுக்குத் தங்கிச் செல்லலாம்.

மேலே குறிப்பிட்டுள்ள மார்க்கங்களைத் தவிர, பிரயாணிகள் தங்களுடைய சௌகரியம்போல் 1500 மைலுக்குக் குறையாத சுற்றுப் பிரயாணங்களை அமைத்துக் கொண்டு, மலிவான கட்டணத்திற்கு டிக்கெட்டுகளைப் பெறலாம். ஆனால் இப் பிரயாணங்கள் ரெயில்வே இலாகாவினால் முன்னதாக அங்கீகரிக்கப்பட வேண்டும்.

முழு விவரங்களுக்கு

**சீப் கமர்ஷியல் சூபரிண்டெண்டெண்டு, தக்ஷிண ரெயில்வே, சென்னை-3 அல்லது பொதுஜனத் தொடர்பு அதிகாரி, தக்ஷிண ரெயில்வே, 18-ஏ மவுண்ட் ரோடு, சென்னை-2 என்ற விலாசங்களுக்கு எழுதவும்**

---

# மில்க் ஆப் மக்னீஷியா

மற்றுமொரு ஐ. டி. எல். தயாரிப்பு.




**வயிற்றிலுள்ள புளிப்பைப் போக்கி மலசுத்தியை அளிக்கும்**

*தயாரிப்பவர்கள் :*

**தி மைசூர் இண்டஸ்ட்ரியல் & டெஸ்டிங் லேபரேட்டரீஸ் லிட்., மல்லேஸ்வரம், பெங்களூர்.**

*ஸேல்ஸ் டிப்போ :*

**35/37, தம்பு செட்டித் தெரு, சென்னை-1**

# நெஞ்சின் அலைகள்



கே. ஆர். கௌசல்யா

திறந்திருந்த ஜன்னல் வழியாக வந்த கதிரவனின் கிரணங்கள் சுள்ளென்று மேலே உறைக்கவே நித்திரை தெளிந்து பரபரப்புடன் எழுந்து உட்கார்ந்தான் ராமநாதன். அப்போது கடிகாரத்தில் மணி எட்டு முறை அடித்து ஓய்ந்தது.

சரக் கூந்தலை ஆற்றி விட்டவாறே அவன் அறைக்குள் நுழைந்தாள் அகல்யா. "ரொம்ப நல்ல தூக்கமோ!" என்று புன்னகையுடன் கேட்டுக் கொண்டே அவன் கட்டில் விளிம்பைப் பிடித்த வண்ணம் நின்றாள்.

"ஆமாம்! என்னை ஏன் எழுப்பவில்லை அகல்யா! இத்தனை நேரம் தூங்கி விட்டேனே! இப்படி ஒவ்வொரு நாளும் எழுந்திருக்க எட்டு மணியானால்!" என்றான் அவன் அவசர அவசரமாகப் படுக்கையைச் சுற்றிக் கொண்டே.

"இங்கே வந்துகூட ஓய்வு எடுத்துக் கொள்ளாமல் இப்போது நீங்கள் எழுந்து என்ன செய்ய வேண்டும்!" என்றாள் அகல்யா பரிவுடன்.

ராமநாதன் பல் விளக்கிக் காப்பி சாப்பிட்டு விட்டு மாடிக்கு வந்தான்.

ராமநாதன் அப்போது ஒரு மாத விடுமுறையில் இருந்தான். அந்தச் சமயம் பார்த்து அவன் நண்பனுடைய திருமண அழைப்பிதழ் வந்திருந்தது. உயிர்க்குயிராய்ப் பழகிய நண்பன் ரொம்பவும் வேண்டி வேண்டி யழைத்திருந்ததால் அவனால் மறுக்க முடியவில்லை. திருவனந்தபுரம் சென்று நண்பனின் விவாகத்தில் ஆனந்தமயமாக இரண்டு நாட்களைக் கழித்து விட்டு அவன் சென்னை திரும்பியபோது வழியில் திருச்சியில் எந்தவித முன்னேற்பாடும் தீர்மானமுமின்றி திடுமென்று நினைத்துக் கொண்டவனாய் இறங்கி விட்டான். திருச்சியில்தான் அவன் மாமியும், அவள் பெண் அகல்யாவும் இருந்தனர். சில மாதங்களுக்கு முன்புதான் அகல்யா, ராமநாதன் அவன் வீட்டுக்கு ஒரு முறை வந்திருந்தாள். செலவையும் பொருட்படுத்தாமல் இப்படி நடுவழியில் இறங்கி அவளைப் பார்க்க வேண்டிய நிர்ப்பந்தம் ஒன்றுமில்லை. ஆனால்! ஏனோ அவன் மனசு கேட்கவில்லை. ஆம்! அகல்யா தன்னுடையவள் என்று அவன் இறுமாந்திருந்த காலம் போய் விட்டது. ரயிலடியில் இறங்கி நின்று பின்பும் யோசித்தான் அவன், பேசாமல் ரயிலில் ஏறி விடுவோமா என்று. அவனுடைய குழம்பிய மனத்துக்கு உத்தரவிடும் அதிகாரத்தைத் தாம் பெற்றிருந்ததுபோல் அச்சமயம் அவன் கால்கள் நிலைபெற்றுப் பூமியில் ஊன்றி விட்டன. ரயில் ஒரு முறை கூவிவிட்டுப் புறப்பட்டு விட்டது.

ராமநாதன் தன் மாமியின் வீட்டை யடைந்தபோது, அவனுக்குப் பிரமாதமான வரவேற்பும் உபசரிப்பும் நடந்தன. அவனுக்கும் அகல்யாவுக்கும் திருமணமாவதாக இருந்து தட்டிப் போனபின் அகல்யா பிடிவாதமாகத் தன்னிஷ்டப்படிதான் தன்னை விடவேண்டும்; திருமணப் பேச்சே தன் காதில் விழக்கூடாது என்று கூறி ஒரு காரியாலயத்தில் வேலையில் அமர்ந்து விட்டாள். ராமநாதனும் துயரம் தாளாமல் விரக்தி மனோபாவத்துடன் தான் இருந்தான், தனக்கும் திருமணம் வேண்டாமென்று. அகல்யாவுக்குத் தந்தையில்லை; அந்தஸ்தில்லை; வேறு யாரும் உறவினரும் இல்லை, விவாகம் செய்துகொள் வேறு இடத்தில் என்று வற்புறுத்த. அவள் பிடிவாதமும் பலித்து விட்டது. ஆனால் ராமநாதன் ஆண்பிள்ளை. அழகும் அறிவும், நற்குணமுமே உருவான இளம் வாலிபன். செல்வவந்தரான பெற்றோருக்கு ஒரே அருமைக் குமாரன். அந்தஸ்து காரணமாக அவனை அவர்கள் அகல்யாவை மணக்க வேண்டாம் என்று சொல்லியிருந்தால் அவன் அவர்களிடம் எதிர்த்து வாதாடி அவளை மணந்திருப்பான். அவளுக்கு அழகு இல்லாமலிருந்தாலும் அவள் அகத்துள் உறையும் நற்குணத்துக்கு மதிப்புக் கொடுத்து அவள் கரம் பற்றத் தயாராக இருந்தான். ஆனால்...! எல்லாவற்றையும் மூழ்கிக் கொண்டு தலை தூக்கி நின்றன, ஒன்றுக் கொன்று முரணாகப் பொருத்தமின்றி இருந்த ஜாதகங்கள். தெய்வம் கருணை காட்டவில்லை. பெற்ற தாயிடமிருந்து அழ அழக் குழந்தையைப் பிரித்து எடுத்துச் செல்வதுபோல் குமுறிக் குமுறியழும் அகல்யாவை ராமநாதனிடமிருந்து பிரித்து விட்டது விதி. ராமநாதனுக்குச் சில நாட்களில் வேறு ஒரு நல்ல இடத்தில் திருமணமாகி விட்டது.

"அத்தான்! நான் காரியாலயத்துக்குப் போய் வரட்டுமா!" என்று கனிவுடன் கேட்ட வாறே நின்றாள் அகல்யா.

உலகை மறந்து உள்ளத்து உணர்ச்சிகளைப் பரிமாறிக் கொண்டிருந்த ராமநாதன் தலை நிமிர்ந்து அகல்யாவைப் பார்த்தான்.

"போய்விட்டு வா!" என்று மென்று விழுங்கினான், பொங்கி எழும் துயரத்துக்கிடையே.

"ராமநாதா! சாப்பிட வாயேன்" என்று அன்போடு அழைத்தாள் மாமி.

சாப்பாட்டை முடித்துக் கொண்டு மீண்டும் மாடிக்கு வந்தான் ராமநாதன். பொழுது போக்குக்கு ஏதாவது பத்திரிகைகள் கிடைக்குமா என்று அலமாரிகளைக் குடைந்து பார்த்தான். ஒன்றிரண்டு தமிழ்ப் பத்திரிகைகளை எடுத்தபின் மேஜை அறைகளை இழுத்தான். கடைசி அறையில் பல ஆங்கிலப் புத்தகங்களுக்கு அடியில் ஒரு ஓரமாக வைக்கப் பட்டிருந்தது ஒரு நாட் குறிப்புப் புத்தகம். அட! நாட் குறிப்பு எழுதும் பழக்கம் உண்டா அகல்யாவுக்கு! சின்னஞ் சிறு பெண்ணாய், கள்ளங் கபடமற்ற வெள்ளை உள்ளத்துடன் அவள் ஓடியாடித் திரிந்தபோது, அவளுக்கு நெஞ்சில் ஒன்றுமே வைத்துக் கொள்ளத் தெரியாது. சிறு விஷயமானாலும் அதை, கணமும் தாமதியாமல் ராமநாதனிடம் ஓடி வந்து சொல்லி விடுவாள். இப்போது! தன் நெஞ்சில் எழும் உணர்ச்சி அலைகளுக்கு — எண்ணங்களுக்கு ரகசிய உறைவிடம் ஒன்றும் ஏற்படுத்தி, தன் மனவெழுச்சியைப் பரிமாறிக் கொள்ளக் கூடத் தெரிந்து விட்டது அவளுக்கு! தாங்க முடியாத பாரம் உடலில் ஏறி விட்டால் அதை இறக்கி வைத்தால் தான் நிம்மதி என்று தோன்றுவது போன்றுதானே மனச் சுமையும்! நாட் குறிப்பைப் படிக்கலாமா! கூடாது. படித்தால் என்ன! ஏதோ ஓர் ஆவலில் பக்கங்களை ஆவலுடன் புரட்டினான் ராமநாதன்.



முதலிலுள்ள பக்கங்களில் அன்றாட நிகழ்ச்சிக் குறிப்புகள். ராமநாதன் வந்த அன்று தேதியிட்டு அவன் வருகை குறிக்கப் பட்டிருந்தது. அடுத்த சில பக்கங்களைத் தள்ளிய பிறகு முத்து முத்தான கையெழுத்தில் ஏதேதோ வரைந்து தள்ளப்பட்டிருந்தது. ராமநாதன் கதவைத் தாளிட்டு விட்டு நாற்காலியை இழுத்துப் போட்டுக் கொண்டு உட்கார்ந்தான்.

'கடல் மணலிலே குழந்தைகள் ஆசையுடன் கட்டுகிற சிற்றிலைச் சிதைத்து விட்டுப் புரண்டோடும் அலையைப் போல வாழ்க்கை வெளியிலே நான் ஆசையுடன் கட்டிய மனக் கோட்டையை அது அழகாக உருவாகி வருகையிலே, அதைச் சிதைத்து விட்டுத் தன் வழியே சென்று கொண்டிருக்கிறது காலம். நாட்கள் சுழன்றோடி மறைகின்றன. அழகிய வாழைக் குருத்தைப் போன்று மகிழ்ச்சியாலும், மட்டற்ற நம்பிக்கையாலும் மென்மையுற்றிருந்த என் நெஞ்சில் ஏமாற்றம் என்ற கூர் நகத்தைச் செலுத்தி வடுப்படுத்திவிட்டது விதி. நம்பிக்கை எனும் அஸ்திவாரத்தின் மேல் தானே நம் வாழ்க்கைக் கோட்டையை எழுப்புகிறோம்! காலச் சக்கரத்தின் சுழற்சியின் வேகத்திலே அந்த அஸ்திவாரம் கலகலத்தால், அதை நம்பி எழுப்பப்பட்ட கோட்டையும் இடிந்து சரிய வேண்டியது தானே!

சென்ற ஆண்டு நடந்த என் அத்தானின் திருமணத்துக்கு நானும் அம்மாவும் போகவில்லை. அது அவருக்கு ரொம்பக் குறையாகி விட்டது. திருமணமாகி இளம் மனைவியுடன் குடித்தனம் செய்ய ஆரம்பித்த பின்பும், அந்த இன்ப மகிழ்ச்சியிலும் எங்களை மறக்காமல் கடிதம் எழுதினார். ஒரு முறை அவர் ஊருக்கு வந்து போகும்படி வற்புறுத்தியிருந்தார். எனக்கும் ஏதோ தோன்றியது, போய் விட்டு வரலாமே என்று. அம்மா வர மறுத்து விட்டாள். நான் மட்டும் புறப்பட்டேன். மன்னியிடம் போட்டி யிட்டுக்கொண்டு அத்தானுக்குப் பணிவிடைகள் செய்தேன். உற்சாகமாகச் சிரித்துப் பேசினேன், கவலையை மறந்து. என் செய்கைகள் அத்தானுக்கு என்மீது மட்டற்ற அனுதாபத்தை ஏற்படுத்தியிருக்க வேண்டும். இன்னும் கொஞ்ச நாட்கள் அங்கிருந்தேனானால் மன்னிக்கு அருவருப்பை ஊட்டியிருக்கும். திடீரென்றுதான் என் உள்ளத்தின் ஒரு கோணத்திலிருந்து எழுந்தது அந்தக் கேள்வி. 'அசட்டுப் பெண்ணே! இந்த மகிழ்ச்சியும், இன்பமும் உனக்கு நிரந்தர உரிமை வாய்ந்தனவல்லவே! இரவல் எப்படிச் சொந்தமாகும்!' உடனே எங்கிருந்தோ என்னை வந்து சூழ்ந்துகொண்டன தாங்க முடியாத துயரமும், வேதனையும், ஏமாற்றமும்.

அன்று இரவு. பூரண சந்திரனின் தண்ணிலவில் ஆனந்தமாக உட்கார்ந்திருந்தார் அத்தான்.

"நாளைக்கு ஊருக்குப் போகிறேன் அத்தான்."

"என்ன அகல்யா இதற்குள்!" என்றார் அவர்.

"ஆமாம், போக வேண்டும்! லீவு எடுத்துக்கொண்டது கொஞ்ச நாட்களுக்குத் தானே!"

உண்மையில் அது மனசறிந்த பொய்தான். உண்மைக் காரணம்! ... ஆம்! அத்தானிடம் என் மனம் கடந்து போன நினைவுகளைக் கிளறி ஒரு குரல் அழத் துடிதுடிக்க ஆரம்பித்து விட்டது. அவர் கடந்தவற்றை மறந்து அமைதியான வாழ்க்கை நடத்த முயலுகிறார். இன்னும் கொஞ்ச நாட்கள் அங்கிருந்தேனானால் அந்தத் தெளிந்த தடாகத்தில் அலையெழுப்பும் கல்லாக நான் ஆகிவிடப் போகிறேனே என்று பயந்தேன்.

"அத்தான்! முன்பெல்லாம் பாடுவீர்களே

பாரதியார் பாடல். ஒரே ஒரு முறை அந்தப் பாட்டைக் கேட்க வேண்டும் போலிருக்கிறது'' என்று ஏக்கத்துடன் கேட்டேன்.

அத்தான் என்னை நோக்கிப் புன்னகை பூத்தார். பிறகு பாட ஆரம்பித்தார். ''பாயும் ஒளி நீ எனக்கு!......பார்க்கும் விழி நானுனக்கு!'' அவர் பாடிக் கொண்டிருந்தபோது என் உடலில் ஏதோ ஒரு பதை பதைப்பு. கண்களைக் கண்ணீர்ப் படலம் மூடி மறைத்து விட்டது. பாடி முடித்தவுடன், ''அகல்யா!'' என்றழைத்தவர் என் முகத்தையே கூர்ந்து நோக்கினார். என்ன விந்தை! சற்று முன்பு வரை கடந்த கால நினைவுக் குவியலைக் கொட்டி வாரி அவருடன் உரையாட எண்ணிய என் மனம் இப்போது, 'அவர் அதையெல்லாம் பற்றிப் பேச ஆரம்பிக்க வேண்டாமே!' என்று வேண்டியது. நல்ல வேளை! ''பாட்டு எப்படி!'' என்பதுடன் நிறுத்திக் கொண்டார்.

''கேட்க வேண்டுமா!'' என்றேன் நான்.

ஒரு கணம் மௌனம் நிலவியது.

''நான் கீழே போகிறேன்'' என்று எழுந்தேன்.

என்ன இருந்தாலும் அவர் ஆண் பிள்ளை! பழையனவற்றை மறக்க அதிக நேரமாகவில்லை அவருக்கு! அத்துடன் புது வாழ்க்கை வேறு என்று நினைத்துக் கொண்டேன்! அன்றிரவு நான் ரகசியமாக எனக்குள்ளேயே குமுறி வெகு நேரம் அழுது கொண்டிருந்தேன். கடவுள் மென்மையான இதயத்தையும் பெண்களுக்குத்தான் அளித்திருக்கிறார். தாங்க முடியாத இன்னல்களையும் அந்த உள்ளங்களில்தான் சுமக்கும் பாரமாக ஏற்றி வைக்கிறார்.

நான் மறுநாளே புறப்பட்டு ஊருக்கு வந்து விட்டேன்! எவ்வளவோ மறைக்க முயன்றும் அகத்தினழகை முகம் சொல்லி விட்டது. அதை நேரடியாகக் கேட்டுத் துயரத்தைக் கிளற விரும்பவில்லை அம்மா. தடதடவென்று ஓடிவந்த குழந்தை கீழே விழுகிறது. ''ஒன்றுமில்லை! எழுந்திரு!'' என்று அதைப் பாராட்டாதபடி எழுப்பி விட்டால், குழந்தை பேசாமல் கையைத் தட்டிக் கொண்டு ஓடி விடும். ''என்னம்மா விழுந்து விட்டாயா!'' என்று அனுதாபம் காட்டினால், அப்போதுதான் எங்கிருந்தோ பீறிட்டு வரும் அழுகையும், வேதனையும். அந்த மனோதத்துவத்தை அறிந்தவளல்லவா என் தாய்! 'என் துர் அதிர்ஷ்டம் பிடித்த பெண்! அழகு, படிப்பு எல்லாம் இருந்து என்ன! அதிர்ஷ்டமில்லை' என்று அவள் மறைவாகச் சென்று முணுமுணுத்தவை என் செவியில் விழுந்தன.

அத்தானை நான் மறந்து விடத்தான் முயல்கிறேன். அதற்கு மிக்க மனோதிடம் ஏற்பட வேண்டும்! அத் திடத்தை என் கோழை நெஞ்சில் உண்டாக்க என் உள்ளத்தை நாளுக்கு நாள், நிமிடத்துக்கு நிமிடம் நானே என் கையாலேயே துண்டு துண்டாக்கிச் சிதைக்க வேண்டும்! என் அத்தானின் ஊருக்கு இனி போகவே மாட்டேன் நான்! அவரை என் கண்கள் பாராமலிருக்க வேண்டும்! ஆனால் அது வேண்டுமானால் முடியும். அவரைப் பற்றிய நினைவையே மறந்து விடுவது இலேசான காரியமல்லவே!

ராமநாதனின் கண்களினின்று கண்ணீர் நிறைந்து வழிந்தது. இதயத்தைக் கசக்கிப் பிழிவது போன்றிருந்தது.

''ராமநாதா! 'டிபன்' சாப்பிட வாயேன்!'' என்று கீழிருந்து மாமி அழைக்கும் குரல் கேட்டது. அகல்யாவின் நாட் குறிப்பை மூடி, எடுத்தது தெரியாமல் வைத்துவிட்டு எழுந்தான் ராமநாதன்.



அன்றைய இரவு.

சாப்பிடும்போது, ''நாளைக்கு நான் ஊருக்குக் கிளம்புகிறேன் அகல்யா!'' என்றான் ராமநாதன்.

''அதற்குள்ளாகவா!'' என்றாள் அகல்யா.

''உங்களைப் பார்க்க வேண்டும் என்று மனது அடித்துக் கொண்டது. வந்தேன், பார்த்தாகி விட்டது. இனி கிளம்ப வேண்டியதுதானே! ஊரில் வேலையிருக்கிறது'' என்றான். அப்போது அவனுடைய கண்கள் அவள் துயரம் தேங்கி நின்ற விழிகளை ஊடுருவிப் பார்த்துக் கொண்டிருந்தன.

அன்றுதான் ராமநாதன் ஊருக்குப் புறப்பட வேண்டிய தினம். மாலை அகல்யா காரியாலயத்திலிருந்து வந்தவுடன் புறப்பட வேண்டும். தன்னுடைய பெட்டி படுக்கைகளைத் தயார் செய்து வைத்து விட்டு ராடிக்கு-அகல்யாவின் அறைக்குச் சென்று கதவைத் தாளிட்டு விட்டு உட்கார்ந்த ராமநாதன் மேஜை அறையை இழுத்து அவள் நாட் குறிப்புப் புத்தகத்தை எடுத்தான்.

தன் துயர மன நிலையை அவள் வரைந்திருந்த பக்

கத்தில் விட்ட இடத்தி லிருந்து தொடர்ந்தான். தன் பேனாவை அவன் தாள்களின் மேல் ஓட்டியபோது கையெழுத்தின் மேல் அங்கங்கே கண்ணீர் முத்துக்கள் சிந்திக் கறையாகின.

'அகல்யா! உன் அனுமதியின்றி மேஜை அறையைத் திறந்து உன் நாட்குறிப்பை எடுத்து அதைப் படித்து விட்டதற்கு என்னை மன்னித்து விடு. சிற்சில சமயங்களில் நம் மனச்சாட்சிக்கு விரோதமாகச் செய்யும் சில காரியங்கள் கூட நன்மையில் வந்து முடிந்து விடுகின்றன. உன் நாட்குறிப்புப் புத்தகத்தை எடுத்து நான் படித்ததனால்தான் உன் பயங்கர மனோ நிலைமையைப் புரிந்து கொண்டேன். எண்ணிறந்த பொருட்களையைத் தன் அடியில் அடக்கிக் கொண்டுள்ள ஆழ்கடல் போல மேற்பார்வைக்கு என்னிடம் சிரித்துப் பேசும் உன் இதய அரங்கிலேதான் எத்தனை எத்தனை துயர நினைவுகள் அழுந்தியிருக்கின்றன! அவற்றினிடையே நீ நாளுக்கு நாள் மக்கி மடிந்து கொண்டிருக்கிறாய் என்பதை அறிந்த போது, என் நெஞ்சம் துடித்தது. நீ என் ஊருக்கு வந்திருந்தபோது, உன்னிடம் நம் பழைய வாழ்க்கையின் ஏடுகளைப் புரட்டி அளவளாவாததால் நான் அவற்றை மறந்து விட்டதாக அல்லவா நீ எண்ணி விட்டாய்! அது அல்ல அகல்யா உண்மை! நீ எங்ஙனம் என்னுள்ளத்தில் சலனம் ஏற்படுத்த விரும்பாமல் நெஞ்சை அடக்கிக் கொண்டாயோ, அங்ஙனம்தான் நானும் என் உணர்ச்சிகளை நெஞ்சின் ஆழத்தில் அடக்கினேன். நீ என்னைப் பற்றி எண்ணியது போலவே கடந்து போனவைகளை மறந்து நீ சலனமற்ற வாழ்க்கை நடத்த முயலுவதாக நானும் எண்ணினேன்! ஆனால் உண்மை இப்போதல்லவா தெரிகிறது எனக்கு! அகல்யா! நீ எத்தனையோ இளகிய நெஞ்சம் படைத்தவள்! ஆனால் பிடிவாத குணத்தில் உன்னை மிஞ்ச முடியாது யாராலும்! நீ விவாகம் செய்துகொள்ள மாட்டேனென்று பிடிவாதமாக இருப்பதாக மாமி சொல்லி என்னிடம் கண்ணீர் வடித்தார்கள்! அப்போதுதான் நான் அறிந்தேன், உன் விஷயமாக நான் இதுகாறும் செய்யத் தவறிவிட்ட பெருத்த கடமையொன்றை! உன் பிடிவாதத்தை விட்டு நீ விவாகம் செய்துகொள்ள வேண்டும். உன் அத்தானிடம் நீ வைத்திருக்கும் ஆழமான பாசத்துக்கு அடையாளம் அதுதான்! என்னிடம் நீ வைத்த பிரேமையை இப்படி நாட்குறிப்பில் கொட்டிப் புலம்புவதுடன் என் நெஞ்சத்துக்குச் சாந்தியளிக்காது! என் அடுத்த வருகை உன் திருமணத்தின்போதுதான்! உன் சம்மதத்தை விரைவில் எனக்குத் தெரியப்படுத்து. உன் வாழ்க்கைச் சகடம் வேறு பாதையில் திரும்பும் அந்த நாள் வரை, என் நெஞ்சமும் குமுறிக் கொந்தளித்துக் கொண்டுதான் இருக்கும்!

அகல்யா! நீயும் நானும் ஒருவரை யொருவர் மணக்க விரும்பியது உண்மை! ஆனால் விதி சதி செய்து விட்டது. அதற்காக நம் உள்ளத்தை நாம் சிதைத்துக் கொள்வதில் யாருக்குப் பயன்! பயங்கரப் பேரிடி விழுந்தால், பூமியதிர்ச்சி ஏற்பட்டால் பூமி தாங்கிக் கொள்வதில்லையா! சுழற் காற்று சுழன்று சுழன்று அடித்தாலும், அதிர்ச்சியுற்ற இயற்கை மீண்டும் தன்னைச் சுதாரித்துக் கொள்ளுவதில்லையா! சற்றும் எதிர்பாரா விதமாகக் கடலில் கொந்தளிப்பு ஏற்பட்டால், மாலுமி வேறு திசையில் கப்பலைச் செலுத்த இயன்றவரை முயலுவானே யன்றி, மூழ்க விட்டு விடுவானா! சூழ்நிலைக் கேற்றபடி தன்னை மாற்றி அமைத்துக் கொள்ளும் திறன்தான் போற்றத் தக்கது; வாழும் முறை.'

ராமநாதன் அகல்யாவின் நாட் குறிப்பைப் பழையபடியே மூடி வைத்துவிட்டு எழுந்தான்.

ராமநாதனுக்கு வழியனுப்ப அகல்யா ரயிலடி வரை வந்தாள். ரயில் கூவென்று கூவியபோது தன்னையுமறியாமல் அவள் வாயிலிருந்து வெளி வந்துவிட்டன அந்த வார்த்தைகள். "அத்தான்! கடந்து போனவைகளை இதற்குள்ளாகவா நீங்கள் மறந்து விட்டீர்கள்! எப்படி மறந்தீர்கள்!"

"அகல்யா! என்னுடைய பதில் உன் நாட் குறிப்பில் இருக்கிறது!" என்றான் ராமநாதன்.

"என் நாட் குறிப்பிலா!" என்று வியப்பாலும் திகிலாலும் விழித்தாள் அகல்யா—மெல்ல நகரும் ரயிலைப் பிடித்துக் கொண்டு நடந்தவாறே.

"நில், நில்! அகல்யா!" என்றான் ராமநாதன். கைக்குட்டையை அழுத்தி வாயில் பொத்திப் பொங்கி எழுந்த துயரத்தை அடக்கினான்.

'ஒத்த உணர்ச்சியாலும், ஒன்றுபட்ட மனத்தாலும் கட்டுண்ட இதயங்களைப் பிரித்து வைத்து வேடிக்கை பார்ப்பதில் இந்த விதிக்கு என்ன திருப்தி!' விடை கிடைக்காத இக்கேள்வி அவன் இதயத்திலேயே சுழன்று கொண்டிருந்தது.


சுதந்திர தினத்தன்று வெளிவருகிறது

**தமிழன் குரல்**

(மாதப் பத்திரிகை)

ஆசிரியர்: ம. பொ. சிவஞானம்

ஆகஸ்டு மாதம் 15-ந் தேதி வெளிவரும்

அரசியல் – சமூக – இலக்கியத் துறைகளில் தமிழினத்தின் உரிமைகளுக்காகக் குரல் கொடுக்கும் உயர்ந்த பத்திரிகை

விலை அணா நான்கு

ஆண்டுச் சந்தா ரூபாய் மூன்று

ஏஜென்ஸி விவரங்களுக்கு

நிர்வாகி: 'தமிழன் குரல்' மயிலாப்பூர், சென்னை - 4

நீங்கள் கட்டாயமாகக் கோரவேண்டியது

# கிரௌன் & சன்

முத்திரையுடைய

## அலுமினியப் பாத்திரங்கள்

"கிரௌன்" மற்றும் "சன்" முத்திரை அடையாளமுள்ள பாத்திரங்கள், கலப்பில்லாத உயர்தர அலுமினிய உலோகத்தில் திறமையும், அனுபவமும் மிகுந்த நம் தேசத்திய முதல்தர உற்பத்தியாளர்களால் செய்யப்பட்டவை. இந்தப் பாத்திரங்கள் அழகாயும் அந்தமாயும், கெட்டியாயும் எல்லாவிதத்திலும் உத்திரவாதம் உள்ளவை.

மட்ட ரக உலோகத்திலும் செய்யப்பட்ட வேறு பாத்திரங்கள் வாங்க வேண்டாம்

**ஜீவன்லால் (1929) லிமிடெட்**
கிரௌன் அலுமினியப் பாத்திர உற்பத்தியாளர்

**மைசூர் பிரிமியர் மெட்டல் பாக்டரி**
சன் முத்திரை அலுமினிய பாத்திர உற்பத்தியாளர்




## நோவுகள், தலைவலி, ஜலதோஷம், ஜுரம்

இவற்றினின்று துரிதமாக நிவர்த்திபெற

B. 2.

# 'கோடக்' பிலிம்கள்

## நீங்கள் விரும்பும் ஒவ்வொரு படத்திற்கும் பூர்ண வெற்றி அளிக்கிறது

உங்கள் காமிராவில் 'கோடக்' பிலிமை நிறைப்பதில் உங்களுக்கு எவ்வித அச்சமும் வேண்டியதில்லை. ஏனென்றால், ஜொலிக்கும் அதிப்பிரகாசமான ஒளியிலிருந்து ஆழ்ந்த நிழல்வரை எச்சமயத்திலும், ஒவ்வொரு சிறு பொருளையும் மிகத் தெளிவாக நீங்கள் பதிவு செய்து கொள்வதற்கு அதுவே உத்தமமானது.




**வெரிக்ரோம்** — படம் பிடிப்பதை பிரியமான பொழுது போக்காக கொண்டிருக்கும் ஆயிரக்கணக்கானவர்கள் அதிகப் பிரகாசத்துடன் திகழும் வெளிப்புறக் காட்சிகளை (அவுட்டோர் ஸீனுப்ஸ்) படம் பிடிப்பதற்கு வெரிக்ரோமையே விரும்புகிறார்கள்.




**சூப்பர் — X X —** மங்கிய ஒளியிலோ, செயற்கை ஒளியிலோ எடுக்கும் படங்களுக்கும், அதே போல் துரிதமான செயல் காக்ஷிகளை (ஆக்ஷன் பிக்சர்ஸ்) படம் பிடிப்பதற்கும் மிகவும் சிறந்தது.




**ப்ளஸ் — X —** நல்ல தெளிவான உயர்ந்த ரகப்படங்களுக்கு மிகவும் இசைந்தது. அத்துடன், சிறு நெகடிவ்களிலிருந்தும் கூட மிக அழகான பெரிய என்லார்ஜ்மென்ட்கள் செய்யலாம்.

● அடுத்தாற்போல் படம் பிடிப்பதற்கு வரும் அவசரத்தை ஒருக்காலும் முன்பே தெரிந்துகொள்ள இயலாது. இன்றே இரண்டு ரோல்கள் — ஒன்று உங்கள் காமிராவில் நிறைப்பதற்கு, இன்னொன்று அதிகப்படியாக கையிருப்பிற்கு — வாங்கி வைத்துக்கொள்ளுங்கள்.

**கோடக் லிமிடெட்.**
(இங்கிலாந்தில் இணைக்கப்பெற்றது)
பம்பாய் • கல்கத்தா
டில்லி • மதராஸ்

K. 9018

# வட்ட மேஜை

## உரம் விநியோகம் புதிய முறை

புதிய முறையை விவசாயிகள் வரவேற்கிறார்கள். இம்முறையினால் சென்னையிலிருந்து தெற்கே கன்யாகுமரி வரையிலும் உரம் மூட்டை ஒன்றுக்கு 34-8-0 விலைக்கு விவசாயிகளுக்குக் கிடைக்க வேண்டும். ஆனால் குறிப்பிட்ட காலத்தில் பருவ காலங்களில் அவசியமான தேவைக்கு உரம் மூட்டைகள் கிடைப்பதில்லை.

தற்சமயம் நெல்லை ஜில்லாவில் உரத்துக்கு நல்ல தேவையிருக்கிறது. ஆனால் அங்கு 'ஸ்டாக்' இல்லை. ஆகவே அண்டையிலுள்ள இராமநாதபுரம் மதுரை ஜில்லாக்களிலிருந்து மூட்டைகள் வரவழைக்கப்பட்டு மூட்டை ஒன்றுக்கு ரூ. 45 விலையாக விற்பனையாகி வருகிறது.

பக்கத்து ஜில்லாக்களில் தற்சமயம் சீசன் இல்லாததாலும் உரத்துக்குத் தேவையில்லாததாலும் இங்குள்ள அதிகார பூர்வ சர்க்கார் ஏஜண்டுகள் ஐந்து முதல் எட்டு ரூபாய் வரை லாபம் கிடைப்பதால் தப்புச் செய்கிறார்கள். மேலும் ஒரு ஜில்லாவின் தேவை அடுத்த ஜில்லாவுக்குக் கொண்டு செல்லத் தூண்டப் படுவதால் இந்த ஜில்லாவிலும் உரம் தேவைப்படும்பொழுது மீண்டும் இந்த நிலைமையே ஏற்படுகிறது. விவசாயிகளுக்குக் குறைந்த விலைக்கு உரம் கிடைக்கிறது என்ற திட்டம் பெயரளவில்தான் இருக்கிறதே ஒழிய நடைமுறையில், விவசாயிகளுக்கு, கட்டுப்பாடு நீக்கப்பட்ட காலத்தில் கிடைத்ததை விட இரண்டு மூன்று ரூபாய்கள் வரை அதிகம் கொடுத்துத்தான் வாங்க வேண்டியிருக்கிறது.

ஸ்ரீவில்லிபுத்தூர்
20—7—54 பி. ரெங்கசாமி

*

## கடமைப் பட்டுள்ளேன்

ஜூலை 18ம் தேதி இதழைப் படித்தேன். இப்பொழுதும் படித்துக் கொண்டிருக்கிறேன். சொல்லுபவர் இனிமையாகச் சொன்னால் அவர் சொல்லுக்கு உலகம் பணிந்து ஏவல் கேட்கும் என்பது வள்ளுவர் கருத்து. அவ்வாறு வாசகர்களின் மனமறிந்து இனிய முறையில் கனியக் கனியக் கூறுகிறது, "திருவருள் தழைக்கும் தமிழ் நாடு" என்னும் சிறந்ததோர் தலைப்பின் கீழ் திருவருட் செல்வர் காலவரைச் செந்தமிழ் நாட்டுக்கு அறிமுகம்செய்வித்துள்ள கட்டுரை. மதுரை ஆதீன கர்த்தரையும் திரு முருக கிருபானந்த வாரியார் அவர்களையும் அடிக்கடி (யாழ்ப்பாணம் வரும்போதெல்லாம்) என் வீட்டுக்கு விருந்தினராக அழைத்து மகிழ்விக்கும் பேறு பெற்றுள்ளேன். அவர்களை யான் அறிந்து அனுபவித்த இன்பத்திலும் அவர்களைக் கல்கி ஆசிரியர் தமக்கேயுரிய இனிய எளிய முறையில் எழுதிய எழுத்து தந்த இன்பம் மிக மிகப் பெரியது.

சுழிபுரம், யாழ்ப்பாணம்
19—7—54 மு. சிவப்பிரகாசம்

*

## "சர்வம் ஆராய்ச்சி மயம்"

தற்சமயம் இந்திய பாங்கி சிப்பந்திகளின் 'விதி' ஆராய்ச்சி அரக்கனின் கையில் சிக்கியிருக்கிறது. கடந்த ஏழாண்டுகளாக பாங்கி சிப்பந்திகள் வருந்தத் தக்க நிலையில் இருக்கின்றனர். பாங்கி சிப்பந்திகளின் வாழ்க்கையே ஓர் 'தொழில் மன்ற' சகாப்தமாக மாறி விட்டது. முதலில் 'சென் மன்றம்', பிறகு 'சாஸ்திரி மன்றம்' அதன் பின்பு 'மேல் மன்றம்' இப்படிப் பல மன்றங்கள். முடிவில், "பாங்கி தொழில் துறையில் அமைதி நிலவ வேண்டும். முதலாளிகளும் தொழிலாளிகளும் இந்தத் தீர்ப்பை ஏற்றுச் சமரசம் காண வேண்டும் என்ற உயர்ந்த நோக்கத்துடன் இந்தத் தீர்ப்பு எழுதப்பட்டிருக்கிறது" என்று மேல் மன்றத் தலைவர் தீர்ப்பின் இறுதியில் கூறியுள்ளார். ஆனால் தீர்ப்பு நடை முறையில் கொண்டு வரப்படவில்லை. மத்திய அரசாங்கம், ஓர் அவசரச் சட்டத்தின் மூலம், தீர்ப்பை ஆராய்வதற்குத் தங்களுக்கு உள்ள ஒரு மாத அவகாசத்தை, மூன்று மாதமாக நீடித்திருக்கிறார்கள். ஏழாண்டுகளாக பாங்கி தொழிலின் வளர்ச்சி, முதலிய பல்வேறு அம்சங்களைத் தீர ஆராய்ந்து, மேற்கூறிய மன்றங்கள், பாங்குகளின் பொருளாதார சக்திக்கு ஏற்றவாறு, பாங்கி சிப்பந்திகளுக்குச் சம்பள முறையையும், இதர வசதிகளையும் வகுத்திருக்கின்றன.

தொழில் மன்றங்கள், தொழில் தகராறுகளைத் தீர்க்க அரசாங்கத்தினால் ஏற்படுத்தப்பட்ட சில சாதனங்கள். பாங்கி சிப்பந்திகளின் தகராறை அரசாங்கமே இம்மன்றங்களின் தீர்ப்புக்குச் சமர்ப்பித்தது. தீர்ப்பு வெளியான பிறகும், இந்த இறுதியில்லா ஆராய்ச்சி எதற்கு?

பாங்கி சிப்பந்திகள் கல்வி அறிவுள்ளவர்கள்; நியாயம் தெரிந்தவர்கள்; நிதானமுடையவர்கள். நேர்மையற்ற முறையில் அதிகச் சம்பளம் கேட்கவில்லை. லாபத்துக்குக் காரணமாக இருந்து வரும் சிப்பந்திகள், மனிதர்களாக வாழ்க்கை நடத்துவதற்கு பாங்குகள் தங்கள் லாபத்திலிருந்து ஒரு சிறிய பகுதியைக் குறைந்த பட்ச சம்பளமாகத் தர இயலாதா, என்றுதான் கேட்கிறார்கள். அரசாங்கம் 'மேல் மன்ற'த் தீர்ப்பை ஓரிரண்டு ஆண்டாவது நடை முறையில் கொண்டு வருவது நல்லது.

சென்னை எஸ். ராமசேஷன், காரியதரிசி
12-7-54 இந்தியன் பாங்க் சிப்பந்திகள் சங்கம்

*

## கவனிப்பார்களா?

நாடு விடுதலையடைந்தபின் ஆங்கிலத்துக்கு மதிப்பு அதிகரித்து, தாய் மொழியின் மதிப்பைக் குறைத்திருப்பது வருந்தத் தக்கது. ஆங்கிலத்தை அறவே நீக்கா விட்டாலும், அதற்கு முன்பிருந்த மதிப்பாவது கொடுக்கலாம். ஆனால் இப்பொழுது தான் அதன் மதிப்பை உயர்த்தியிருக்கிறார்கள்.

எடுத்துக் காட்டாக, விடுதலைக்கு முன் எஸ். எஸ். எல். சி. தேர்வில் 35 மார்க்குகள் எடுத்தால் ஒரு மாணவன் தேறிவிடுவான். ஆனால் இப்பொழுது தேர்வுக்கு 40 மார்க்குகள் வேண்டும். எனது நண்பர் ஒருவர் ஆங்கிலத்தில் 35, தமிழில் 105, கணக்கு 45, விஞ்ஞானம் 41, சமூக பாடத்தில் 54; ஆக மொத்தம் 280 மார்க்குகள் வாங்கியிருந்தும் அவர் தவறியவராக அறிவிக்கப்பட்டிருக்கிறார். ஆனால் ஆங்கிலத்தில் 35 எடுத்து மொத்த மார்க் 273 எடுத்தவர்களும், தாய் மொழியில் 37 எடுத்து மொத்த மார்க் 292 எடுத்தவர்களும் தேறியவர்களாக அறிவிக்கப்பட்டிருக்கிறார்கள். மனமுடைந்த நண்பர் சம்பந்தப்




## ஆர்த்ரிடிஸ் வலியை ஸ்லோன்ஸ் லினமெண்ட் எப்படி போக்குகிறது

நீங்களே பார்த்துக் கொள்ளுங்கள்! இன்பரா-ரெட் கிரணங்களை உபயோகித்து விஞ்ஞானத்தால் சருமத்திற்கு அடியிலிருக்கும் இரத்தக் குழாய்களை போட்டோ எடுக்கப் படுகிறது. மேலே காட்டிய போட்டோவிலிருந்து எழுதிய படங்கள், ஸ்லோன்ஸ் லினமெண்ட் இல் வாதத்தையும், தசைப் பிடிப்பையும், ஆச்சரியகரமாய் போக்கும் இரகசியத்தைத் தெரிவிக்கிறது. அவைகள் வலியுற்ற பாகங்களுக்கு ஸ்லோன்ஸ் இரத்த சப்ளையை அதிகப்படுத்தி தசைப் பற்றுகளை சீக்கிரம் குணப்படுத்துவதைக் காண்பிக்கிறது. இயற்கைக்கு உதவியாக இருந்து ஸ்லோன்ஸ் வலியை ஆச்சரியகரமாக போக்குகிறது. அதனால் தான் லினமெண்டுகளில் ஸ்லோன்ஸ்க்கு சிறந்த பெயர்.

உங்கள் மருந்துக் கடையில் இன்றே ஸ்லோன்ஸ் வாங்குங்கள்.

ஸ்லோன்ஸ் லினமெண்ட்




**SLOAN'S LINIMENT**

202

பட்ட அதிகாரிகளுக்கு எழுதிக் கேட்டதில் இது வரை யாதொரு பதிலும் இல்லை.

கண்பருடைய தேர்வு எண் 29564; தேருதலின் காரணத்தைத் தெரிந்த பின்னாவது மன அமைதி பெறலாம் என்று அவர் கருதுகிறார். ஆனால் அதிகாரிகள் மௌனஞ் சாதிக்கின்றனர். வேற்று மொழியைக் கற்கும் மார்க் விஷயத்தில் மாணவர்களின் வாழ்வைப் பாழாக்குகிறதே!

திருச்சி
5—7—54 க. ச. இராசேந்திரன்

★

### உத்தரவும் உதவாக்கரையும்

சென்ற இரண்டு மூன்று ஆண்டுகளைப் போலவே இந்த ஆண்டும் ஜூலை முதல் வாரத்தை வனமகோத்சவமாகக் கொண்டாடும்படி எல்லா சர்க்கார் காரியாலயங்களுக்கும் சுற்றறிக்கைகள் பறந்தன. எங்கள் பஞ்சாயத்து சபைக்கும் மேற்கண்டவாறு சுற்றறிக்கை ஒன்று வந்தது. இவ்வாண்டு ஜூலை முதல் வாரத்திற்குள் வனமகோத்சவம் கொண்டாட வேண்டுமென்றும், எல்லா மரங்களும் பஞ்சாயத்து எல்லைக்குள்ளேயே வேண்டும் என்றும் உத்தரவு வந்தது. உத்தரவைப் பார்த்ததும் எங்கள் பஞ்சாயத்து சபைத் தலைவருக்கு என்னசெய்வதென்று விளங்கவில்லை. கடந்த மூன்று ஆண்டுகளாக நூற்றுக் கணக்கான ரூபாய்கள் செலவழித்து நட்ட மரங்களில் இன்று பெயருக்கேனும் ஒன்றுகூட இல்லாததே அவரது இந்தக் கலக்கத்துக்குக் காரணம்.

நூற்றுக் கணக்கான ரூபாய்கள் செலவழித்து மரம் நடுவிழாக் கொண்டாடினும், அவைகளைத் தண்ணீர் ஊற்றிக் காப்பாற்றக் குறைந்த அளவு ஊதியத்தில் ஆள் போடுவதற்கு உத்தரவு கேட்டால் அதற்குத் தனியாக ஒன்றும் உத்தரவு கிடையாது. அவ்வாறு அதற்குப் பஞ்சாயத்து நிதியிலிருந்து செலவழிப்பதாயிருந்தால் அதை சர்சார்ஜ் செய்யப்படும் என உத்தரவு வருகிறது. சர்க்கார் உத்தரவுகளும் செயல்களும் இப்படி உதவாக்கரைகளாக இருந்தால் மரங்கள் எப்படி உருவாகும்! டெபுடி பஞ்சாயத்து ஆபீசர் நேரில் இங்கு வந்தபோது "இப்படிஎழுதியிருக்கிறீர்களே. நட்ட மரங்களும் செலவழித்த பணமும் என்ன ஆவது!" என்று கேட்டோம். "நான் என்ன செய்வேன்! மேல் உத்தரவு அப்படி உள்ளது" என்று பாட்டுப் பாடுகிறார்!

கண்டமனூர்
18-7-54 எஸ். பி. மாரிச்சாமி

★

### ஆவன செய்வார்களா?

இலங்கையிலுள்ள இந்தியத் தூதவரால் நடத்தப்படும் புத்தகசாலையில் இந்தி புத்தகங்களே அதிகமாகக் குவிந்தவண்ணமிருப்பதை இலங்கையில் பல பத்திரிகையில் கண்டித்து எழுதுவதைப் பார்த்திருப்பீர்கள். இந்தி, ஆங்கிலப் புத்தகங்களே குவிந்திருந்தாலும் ஒரு சில தமிழ்ப் புத்தகங்களாவது இருக்க வேண்டாமா? இந்தியாவிலிருந்து இலங்கைக்கு வந்து குடியேறியிருப்பவர்கள் அத்தனை பேர்களும் இந்தி மொழியைத் தாய்மொழியாகக் கொண்டவர்களா? அல்லது இந்தியைக் கற்றறிந்தவர்களா! என்று கேட்டால் அதுதான் இல்லை. பெரும்பான்மையினர் இங்கு வசிப்பவர்கள் தமிழர்களே. தமிழைத் தாய்மொழியாகக் கொண்டவர்களே. இலங்கையில் தமிழர்கள் அதிகமானவர்கள் இருந்தும், இதை

இந்திய அரசாங்கம் உணர்ந்தும், இங்கு வாழ்பவர்களுக்குப் பயன்படாத - வாசிக்கத் தெரியாத மொழியிலுள்ள நூல்களை அவர்களுக்குப் படிப்பதற்கு என்று ஓர் அறையை ஒதுக்கி அதில் வைத்திருப்பது, குருடனிடம் புத்தகத்தைக் கொடுத்துப் படி என்று உரைப்பது போன்றுதானிருக்கிறது.

மாத்தளை, இலங்கை
6-7-54

—அரு. இராசன்

★

## காலதாமதம்

சென்னை அரசாங்கத்தார் நடத்தும் பப்ளிக் சர்வீஸ் கமிஷன் பரீட்சைக்கு ஆஜர் ஆக எஸ்.எஸ்.எல்.ஸி. சர்ட்டிபிகேட்டையும், இதர யோக்கிய தாம்ச பத்திரங்களின் மூலத்தையும் அனுப்ப வேண்டும். இவ்விதம் இவர்கள், பரீட்சை நடப்பதற்கு மூன்று மாதங்களுக்கு முன்பே இப்பத்திரங்களை வாங்கி வைத்துக் கொண்டு விடுகிறார்கள். பரீட்சையில் தேறி, உத்தியோகம் கிடைத்தாலும் சரி, இல்லாவிடினும் சரி, அவை நமக்குத் திரும்பக் கிடைக்க இன்னொரு ஆறு மாதங்களாவது ஆகின்றன.

இதற்கு இடையில், இதர இடங்களிலிருந்து வேலைக்கு ஏதாவது அழைப்பு வந்தால், அப்பத்திரங்கள் இல்லாத காரணத்தால் கிடைத்த வாய்ப்பை இழக்க வேண்டி நேரிடுகிறது.

எனவே, இவர்கள் மனுக்களைப் பரிசீலனை செய்து, சில மாதங்களிலேயே திருப்பி அப்பத்திரங்களை அனுப்பினால் நலமாயிருக்கும். அல்லது இதர இலாகாவினர் செய்வது போல யோக்கிய தாம்சங்களின் அத்தாட்சி பெற்ற நகல்களையாவது கோரலாம் அல்லவா!

கரூர்
13-7-54

எஸ். வெங்கடேசன்

★

## கட்டுப்பாடு அவசியம்

சென்ற வருஷம் அக்டோபர் மாதம் ரசாயன உரத்தின் விலை, வினியோகக் கட்டுப்பாட்டைத் தளர்த்துவதற்கு முன் சர்க்கார் கண்ட்ரோல் விலை ரூ. 39 ஆக இருந்தது. கட்டுப்பாட்டைத் தளர்த்தியவுடன் ரூ. 45 முதல் ரூ. 50 வரை மதுரை, திருநெல்வேலி ஜில்லாக்களில் வியாபாரிகள் கொள்ளை லாபத்துக்கு விற்றது நாடறிந்தது.

பொதுவாகத் தேவைக்கு அதிகமாயுள்ள சரக்குகளுக்குக் கட்டுப்பாடில்லாமலும், பற்றாக்குறை சரக்குகளுக்குக் கட்டுப்பாடு அவசியம் என்பதும் அனுபவ பூர்வமானது. ரசாயன உரம் அத்தியாவசியமான பொருளும், பற்றாக்குறையுமான பொருளுமாகும். அதை முன்னிட்டுச் சர்க்கார் குறிப்பிட்ட வியாபாரிகளையும், கூட்டுறவு ஸ்தாபனங்களையும் போட்டியிட விட்டு, எந்த ஊரிலும் மூட்டை ஒன்றுக்கு விலை ரூ. 35க்கு மேல் போகாமல் கட்டுப்படுத்தியிருப்பது பாராட்டத் தக்கது.

கொள்ளை லாபத்தில் ருசி கண்ட வாலறுந்த வியாபாரிகள் இந்தக் கட்டுப்பாட்டை உடைத்தெறிய வேண்டுமென்று ஓலமிடுகிறார்கள். கட்டுப்பாட்டை நேர்மையான முறையில் அமுல் நடத்துவதில், காலாகாலத்தில், முன்னெச்சரிக்கையுடன் உரத்தைக் கொண்டு வந்து தட்டுப்பாடு ஏற்படாமல், நியாய விலைக்குக்கிடைக்க ஏற்பாடு செய்யும்படி சர்க்காரைக் கேட்டுக் கொள்கிறேன்.

புதுப்பட்டி
14—7—54

ஆ. மு. வெள்ளைச்சாமி ரெட்டியார்







# வீட்டுச் சலவை வேலையை

## சுலபமாக்குகிறது



501 ஸோப்புகளின் செழுமையான நுரை துணிமணிகளுக்குள் ஊடுருவிச் சென்று, அழுக்கையெல்லாம் மாயமாய் வெளியேற்றுகிறது. இந்த ஸோப்புகள் வீட்டுச் சலவை வேலையை உங்களுக்கு அதிக சுலபமும் சிக்கனமுமாக்குகின்றன.




# 501

## சலவை ஸோப்புகள்

எல்லாம் டாடா தயாரிப்புகளே — A TATA PRODUCT — இந்திய மூலதனத்தைக் கொண்டு, இந்திய நிர்வாகத்தில், இந்தியாவிலேயே தயாரிக்கப்படுவது

FS 8707

# யோகாசனச் சிகிச்சை

வி. என். குமாரசாமி

## 27. ஆஸ்துமா — கோளங்கள்

ஆஸ்துமாவுக்கு நவீன சிகிச்சையாகிய பிட்யூடரி கோள ஹார்மோனிலிருந்து தயாரித்த பிட்யூடரின், அட்றினேல் கோளத்திலிருந்து தயாரித்த அட்றினின் ஆகிய இவைகள் அவ்வளவு முக்கியத்துவம் அடைந்ததேன்! அவ்வளவு சிறப்பு வாய்ந்த கோளங்களின் தன்மை என்ன! அது எப்படி, எவ்வாறு இருக்கிறது என்பதெல்லாம் அறிய வேண்டுமல்லவா! அப்பொழுதுதான் நவீன சிகிச்சையில் உண்டாகும் சுகத்துக்கும் கஷ்டங்களுக்கும் காரணம் நன்கு விளங்கும்.

கோளங்கள் என்பது என்ன என்பதை முதலில் தெரிந்து கொள்ள வேண்டும்.

சாப்பிட்டதை ஜீரணமாக்க, சத்தைக் கிரகிக்க, மிகுதியான கழிவை வெளியே தள்ள வாயிலிருந்து ஆரம்பித்து, வெளியே தள்ளும்வரை பல உறுப்புக்கள் ஒன்றாக இணைக்கப்பட்ட ஜீரணக் கருவிகள் இருக்கின்றன. மூச்சு வாங்கவும் விடவும் நுரையீரல் இருக்கிறது. இரத்தம் சரீரம் முழுவதற்கும் பாய்ச்ச இரத்தாசயமும், இவற்றை எடுத்துச் செல்ல இரத்த நரம்புகளும் இருக்கின்றன. உடலைத் தாங்க எலும்புக் கூடு இருக்கிறது. அதன் மேல் அழகாகத் தோன்றத் தசைக் கட்டுகள் இருக்கின்றன. உடலைக் கட்டி ஆள மூளை இருக்கிறது. இரத்தத்தின் கழிவுகளை வெளியேற்றக் குண்டிக் காய்கள், தசையில் வியர்வையாக வெளியாக்க வாய்க்கால்கள், கரியமல வாயுவை வெளியாக்க நுரையீரல் முதலியன இருக்கின்றன. உணர்ச்சிகளைத் தெரிவிக்கும் நரம்புக் கூட்டங்கள் இருக்கின்றன.

இவைகளத்தனையும் அதனதன் வேலைகளை ஒழுங்காய்ச் செய்விக்க அதிகாரிகளைப் போன்று கோளங்கள் பல இருக்கின்றன. இக் கோளங்கள் சரிவர வேலை செய்தால்தான் மனிதன் மனிதனாக இருக்க முடியும். இல்லையானால் மனித உருவில் நடமாடும் ஏதோ ஒரு உயிர் வாழ்வதைப் போல உயிருள்ள ஜடம்போலத்தான் இருக்கலாம். எந்த பாகமும் சரியாய் வேலை செய்யாது.

கோளங்கள் பல இருக்கின்றன. அவைகளில் முக்கியமானவை பினியல்பாடி, பிட்யூடரி, தைராய்ட். பாராதைராய்ட், அட்றினேல். ஆண்களுக்கு டெஸ்டிஸ், பெண்களுக்கு ஓவரீஸ், கல்லீரல், பாங்கிரியாஸ் இறைப்பை முதலியனவாகும். கல்லீரல், பாங்கிரியாஸ், இறைப்பை இவைகளெல்லாம் கூடக் கோளங்களைச் சார்ந்தவையே. கல்லீரல், பாங்கிரியாஸ், டெஸ்டிஸ் (ஆண்களுக்கு) ஓவரீஸ் (பெண்களுக்கு) முதலிய கோளங்களிலிருந்து சுரக்கும் ரசங்களைக் கொண்டு செல்லத் தனிக் குழாய்கள் உண்டு. மற்றக் கோளங்களுக்குக் குழாய்கள் கிடையா. அதனால் அவைகளுக்கு குழலற்ற தசைக் கோளங்கள் என்று பெயர். இக் குழலற்ற தசைக் கோளங்களெல்லாம் ஒன்றாய்ச் சேர்ந்தால் ஒரு உள்ளங்கையில் அடக்கி விடலாம். அவ்வளவு சிறிய உருப்படிகள். இந்தக் கோளங்களின் வேலைகளை விஞ்ஞானிகள், உடற்கூறு வல்லுனர்கள் இன்னமும் ஆராய்ந்த வண்ணம் இருக்கின்றனர். சில காலத்துக்கு முன்புகூட அவ்வளவு தெளிவாய் இதன் வேலைகளை அறிய முடியவில்லை. இப்பொழுது கூடுமான வரை அறிந்திருக்கிறார்கள் எனலாம்.

இக் கோளங்களிலிருந்து எப்பொழுதும் ஒருவித நீர் சுரந்து கொண்டேயிருக்கும்; இதற்கு ஹார்மோன் என்று பெயர். இரத்தம் இதன் வழியே செல்லும் போது அந்த இரத்தத்தில் ஹார்மோன்கள் வேண்டிய அளவு கலக்கின்றன.




1. குண்டிக்காய் 2. டியோடினம் 3. ஆகாரப்பை 4. கல்லீரல் 5. பினியல்பாடி 6. பிட்யூடரி கோளம் 7. பாராதைராய்ட் கோளம் 8. தைராய்ட் கோளம் 9. தைமாஸ் கோளம் 10. பாங்கிரியாஸ் 11. அட்றினேல் கோளம்.

பினியல்பாடி :— பினியல் பாடி என்பது பட்டாணி அளவே உடையது. ஆனால் கோபுரம்போல முக்கோண வடிவமுடையது. இது முதுகுத்தண்டு துவங்கும் இடத்தில் மூளைக்குள் மத்தியில் வெகு பத்திரமாக இருக்கிறது. இதன் வேலைகளைப் பற்றித் தற்கால விஞ்ஞானம் அறிய முடியவில்லை. இதன் கீழ் இருக்கும் பிட்யூடரிக்கு உதவி செய்கிறது என்கின்றனர். ஆனால் நமது யோக சாஸ்திரத்தில் இது மிக முக்கிய பாகமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ஒருவர் நினைத்ததை அறியவும், தூரத்தில் யாராவது நினைத்ததை அறியவும் 'டெலபதி' Telapathyயைப் போன்று இது வேலை செய்கிறது எனவும், ஆன்மாவின் இருப்பிடம் எனவும் யோகிகள் சொல்லுகிறார்கள், தங்கள் நீண்ட கால அனுபவத்தில்.

பிட்யூடரி :—பிட்யூடரி என்பது மூளையின் அடியில் ஹைப்போதலமஸ் என்ற நடு பாகத்துடன் நரம்பு சம்பந்தப்பட்டுத் தொங்குகிறது. இது சுண்டைக்காய் அளவே உடையது. இதன் எடை ஆறு கிராம் ஆகும். இதற்கு இரண்டு பாகங்கள் உண்டு. பாஸ்டீரியர் லோப் என்றும், அண்டீரியர் லோப் என்றும் பெயர். இவைகள் சுமார் இருபது வித வேலைகள் செய்கின்றன என்று இதுவரை கண்டு பிடித்திருக்கின்றனர். இவ்வளவு சிறியனவாக இருந்தாலும் இவைகளில் தான் மற்றெல்லாக் கோளங்களைவிட அதிக ஹார்மோன் சுரக்கின்றதாம். மூர்த்தி சிறிது கீர்த்தி பெரிது என்பது முற்றிலும் இக் கோளங்களுக்கே தகும். சில காரியங்களை நேரடியாக இதன் ஹார்மோன் செயலாற்றுகிறது. சில காரியங்களை மற்ற கோளங்களைக் கொண்டு செயலாற்றுகிறது. எனவே மற்றெல்லாக் கோளங்

